# கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர்

4547.
4547.
XVI.C.5(அ)

(ஆராய்ச்சியுடன் கூடியது)

XVI.C.5(அ)



சி. கு. நாராயணசாமி முதலியார்.

(1928)

## கவிச் சக்கரவர்த்தி

# ஒட்டக்கூத்தர் வரலாறு

பொய்யாமொழி, இரட்டையர், படிக்காசு, அருணகிரி
நாதர், முதலிய புலவர்கள் வரலாறுகளைத் தொகுத்
தவரும், தொண்டைமண்டல
சதகப்பதிப்பாளருமாகிய
கோயமுத்தூர்
சி. கு. நாராயணசாமி முதலியார்
தொகுத்தது.



மதுரை, புத்தக வியாபாரம்
இ. மா. கோபாலகிருஷ்ணக் கோனாரவர்களால்
பதிப்பிக்கப் பெற்றது.

1928.

ாபிரைட்] [விலை ரூபா ஒன்று.

# பொருளடக்கம்



# மேற்கோள் செய்யுட்டொகை.



1 அரும்பைத் தொள்ளாயிரம்.
2 இராசராச சோழனுலா
3 ஈட்டியெழுபது
4 உத்தரராமாயணம்
5 ஏழுப் பெழுபது
6 கந்தவிரத விலாசம்
7 கந்தபுராணம்
8 கந்தபுராணம் 6000
9 கம்பராமாணம்
10 கலிங்கத்துப் பரணி
11 கலித்தொகை
12 கல்வெட்டுக்கள்
13 குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ்
14 குலோத்துங்க சோழனுலா
15 சங்கர சோழனுலா
16 சிலப்பதிகாரம்
17 சீவக சிந்தாமணி
18 செங்குந்தர் பிரபந்தத் திரட்டு
19 செங்குந்தர் சிலாக்கியர் மாலை
20 செங்குந்தர் கலித்துறை மாலை
21 சேனைத்தலைவர் மரபு விளக்கச் சூருவளி
22 சோழமண்டல சதகம்
23 தனிநிலைக்கவி

24 தண்டியலங்காரம்
25 தமிழ்நாவலர் சரிதை
26 தக்கயாகப்பரணி
27 திருச்சிற்றம்பலக் கோவை
28 திருக்கை வழக்கம்
29 திருக்கைவழக்கத்தந்தாதி
30 திருவிளையாடற் புராணம்
31 திருவாசகம்
32 திருக்குறள்
33 தேவாரங்கள்
34 தொல்காப்பியம்
35 தொண்டைமண்டல சதகம்
36 நாலாயிரக் கோவை
37 நாலடியார்
38 நீதிநெறி விளக்கம்
39 பட்டினப்பாலை
40 பழங்கவித் திரட்டு
41 பாண்டிமண்டல சதகம்
42 புலவர் புராணம்
43 புறநானூறு
44 பெருந்திரட்டு
45 மணிமேகலை
46 மும்மணிக் கோவை
47 மெய்க் கீர்த்திகள்
48 வல்லான் காவியம்
49 வில்லிபுத்தூரார் பாரதம்
50 விக்கிரமசோழனுலா.

# முகவுரை.



'கவிராட்சதன்' எனவும் 'கௌடப்புலவன்' எனவும், 'கூத்தன் கவிச்சக்கரவர்த்தி' எனவும் தமிழுலகம் புகழ்ந்து கூறும் கல்விச் சிறப்புடைய ஒட்டக்கூத்தரது வாழ்நாள் வரலாற்றை நலம்பெற வெழுதி வெளியிட வேண்டுமெனப் பல கால் நினைந்து வந்தேம். போதிய வசதியும் வேண்டிய சாதனங்களும் வாய்க்கப் பெறாமல் தடைப்பட்டே வந்து இப்போது திருவருள் கூட்டப்பெற்றதால் வெளியிடலானேம்.

பழந்தமிழ் வாணர் வரலாறுகள் எழுதுவதில் திறமையும், கல்வியறிவும், அநுபவமும் அற்றேமெனினும் பழமை மிக்க பெரியாரது வரலாறு ஒருவாறு நமது தமிழகத்தில் பரவுமாயின், தமிழ் கற்கு மாணவர் படித்துணர்ந்து ஒழுக்கந்திருந்தி நல்வழிப்படவும்; பண்டைத்தமிழ்ப்புலவர் உண்மைவரலாற்றை அன்புடன்ஓதி மகிழ விரும்பும் அன்பர்கள் இன்புறவும் காரணமாயிருக்கு மென்பதும், இப்புலவர் வரலாற்றில் மாறுபட்ட கொள்கையுடைய சிலர் பொருந்தாப் புனைந்துரைகளையும், பொய்ச்செய்திகளையும் புகுத்தி இவரை அளவுகடந்த வசைமொழிகளால் இழித்துரைத்திருப்பதைப் பலமாகக் கண்டித்துப் புனைந்துரையும் பொய்க்கூற்றும் பொறாமை காரணமாக வெழுந்தனவென்பதை நடுநிலை நின்று தக்க நியாயங்காட்டி அறிஞர்கள் ஒப்பும் வகையில் ஆராய்ந்து காட்டவேண்டுமென்பதும் கருத்தாகக்கொண்டு எமது அறிவு ஆற்றல்களுக்கேற்ப எழுத முன்வந்தமென்க. குற்றமுளதாயின் தமிழறிஞர் பொறுக்க.

உத்தரது பிறப்பு, வளர்ச்சி, பெற்றோர்கள் பெயர் முதலி யன உள்ளவாறே யுணர்தற்குப் போதிய ஆதாரங்கள் நம்மில் இல்லை. பழந்தமிழ் வாணர் வரலாற்றை ஒழுங்காய் விளக்கக் கூடிய சாதனங்கள் எவைதாமுள? ஆராய்ச்சியாளரும், புல மைப் பெரியாரும், கல்வெட்டுப் பரிசோதகரும் தத்தம் நுண் ணறிவால் துருவி ஆராய்ந்து கண்ட சிற்சில செய்திகளே ஆங் காங்கு நமக்குத் தென்படுகின்றன. அவையும் முற்றிய செய்தி களாகக் காண்பதற்கில்லை.

இவைதான் இங்ஙனமெனின், ஆங்கிலப் படையின் தண் டத்தலைவர் ஸ்ரீ மேக்கன்சி துரைமகனார் ஆராய்ச்சிக்கென்று பொதுமக்களது பொருளைச் சுமார் இரண்டு லட்சத்துக் கதிகம் செலவழித்துச் சேர்த்த ஓலைச்சுவடிகளும் பிறவும் கூட நமது குறையை நீக்குவனவாயில்லை; பழைய கல்வெட்டாராய்ச்சி யாளரும் நமது பெரும் பணத்தை வாரியுண்டும் தொன்மைப் புலவர்களது உண்மை வரலாற்றை ஒழுங்குபடுத்திக் கோவை யாக்கி வெளிப்படுத்தினரில்லை. இந்நிலையில் மிடியால் மெலிந்த தமிழ்ப் புலவர் யாது செய்வர்?

ஆயின், நமக்கு முந்தியவரிருந்த நிலைமையில் நாமில்லா மல் சற்று முன்னேறிப் பண்டைத் தமிழ்ப் புலவர் வரலாறு என்னும் வழிக்குப் புலமை, பேரறிவு, ஆராய்ச்சி முதலிய வற்றாற் சிறந்த கல்வியாளர் சிலர், சிற்சிறு தீபம் ஏற்றி ஆங் காங்கு வைத்திருக்கின்றனர். அவைகளில் நன்றாய்ச் சுடர் விட்டுத் துலங்கும் அகல்களுக்குத் தைலமும் திரியும் துணைப் படச்சேர்த்து எம்மால் முடிந்த வள்வு அவ்வழியை ஒளிரு மாறு செய்ய முயல்வதே எமது முதற் கடமையாகக் கொண்டேம்.

இம்முறையில் முயன்றுள்ள நாம் கூத்தரது வரலாற்றைக் கூடுமானவரை முற்றிய சரிதமாகத் தொகுத்துளேம். எமது தொகுப்பில், 'ஊரும்—இடமும்;' 'புலவர் சிரங்களைச் சேதித்தலும்—மறுத்தற்குரிய ஏதுக்களும்;' 'புகழேந்தி கூத்தரைக் கொல்ல முயன்றாரென்பதும்—அதன் மெய்ம்மையும்'; 'அவ்வையாரும்—கூத்தரும்;' 'கம்பரும்—கூத்தரும்'; 'தக்கயாகப்பரணி பாடியதும்-சங்கமக் கோலை தவிர்ந்ததும்;' 'ஈட்டியெழுபது பாடியதும்—வெட்டிய தலைகள் ஒட்டி யெழுந்ததும்'; 'கூத்தரும் அவர் காலத்துச் சோழ மன்னர்களும்' என்பன முக்கிய பாகங்கள். இப்பாகங்களில் நன்றாக ஆராய்ந்து அறிஞர் ஒப்புமாறு உண்மையை நடுநின்று நிலைநாட்டப்பட்டுள்ளன. இவ்வகையில் யாம் பட்ட சிரமம் மிகுதியெனக் கூறுவது மிகையன்று.

எமது இம் முயற்சியைச் சென்னைப் பாட புத்தகக் கமிட்டியும் தமிழுலகமும் நன்கு மதித்து அபிமானிக்குமாயின் மற்றைய வரலாறுகளும் விரைவில் வெளிவருதற்கு ஊக்கமுண்டாகும். திருவருள் துணை நின்று கூட்டுமாக.

இவ்வரலாறு விரைவில் வெளிவருதற்குத் துணை நின்று புரூப் திருத்தி உதவிய திருவாளர் S. சங்கரலிங்க முதலியாரவர்கட்கும், மயிலாப்பூர் பண்டித ஸ்ரீ. சேஷாத்ரி ஐயரவர்கட்கும், சோழமன்னர் வரலாற்றிற்குப் போதிய குறிப்புக்களும் சில விசேடங்களும் கூறி உதவிபுரிந்த எமது அரிய நண்பர் திருப்புறம்பியம், பண்டித தி. வி. சதாசிவ பண்டாரத்தாரவர்கட்கும், ஸ்ரீமத். பி. வி. ஜகதீச ஐயரவர்கட்கும் எமது நல்லன்பும், மறவா நன்றியும் என்றும் உரியதாகுக.

சிற்றறிவு கொண்டு தொகுத்த இவ் வரலாற்றில் எமது அறிவுக்கெட்டாத விஷயங்கள் பல ஆராயாது விடுபட்டிருத்தலும், கூறிய விஷயங்களுள் வேறுபாடு தோன்றுதலும் கூடும். அக்குற்றம் எமது தவறுதலெனக்கொண்டு அறிஞர் பொறுப்பாராக.

எமது விருப்பத்திற்கு மனமுவந்து இவ் வரலாற்றை அச்சிடுவதற்குப் போதிய உதவிபுரிந்த தமிழறி செல்வர் மதுரை திருவாளர் - இ. மா. கோபாலகிருஷ்ணக் கோனரவர்கட்கு எமது நன்றியை அன்புடன் செலுத்துகின்றேம்.

சாரதா விலாசம்,
கோயமுத்தூர்,
14 - 4 - 1928.

சி. கு. நாராயணசாமி முதலியார்.

சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழாசிரியரும்
'சித்தாந்தப்' பத்திராசிரியரும்
'சித்தாந்தப் பிரகாச சபை'யின் தலைவருமாகிய
திருவாளர்

## மணி-திருநாவுக்கரசு முதலியாரவர்கள் கூறிய

# சிறப்புப் பாயிரம்.



இந்நிலவுலகின்கண் பேதைமை வயப்பட்டு அறிவு துலக்கமுறாத மாக்கண் முதல் அறிவு நனிதுலங்கு நாகரிக மக்கள் ஈறாக வழங்கப்படும் பல்வகைய மொழிகளுள்ளும் மென்மை, தொன்மை, நயம், பொருண்மை முதலிய தன்மைகள் வாய்ந்த தமிழ்மொழியானது தலைசிறந்த தொன்றாம். இம் மொழியின்கண் வெளிப்போந்த அருமருந்தன்ன நூல்கள் அளப்பில. இம்மொழியை வளம்படுத்த முடியுடை வேந்தரும், குறுநிலமன்னரும், நல்லிசைப் புலவரும், இசைப் புலவரும், எண்ணிறந்தவர். இம்மொழியின் அருமை பெருமைகளை எடுத்துரைக்க இயலாது. எனினும், இத்தெய்வத் தனித் திருமொழியின் வரலாறும், புலவர் பெருமக்களின் வரலாறுகளும், பெரும்பாலும் அறியக் கூடாதனவாய்க் கிடக்கின்றன.

அக்காலத்துத் தமிழ்மக்கள் சரித்திரங்கள் எழுதிவையாக் குறைபாட்டினால் இதுபோழ்து அறிதற்குச் சாலவும் அருமையாக இருக்கின்றன. எனினும், இக்காலத்து ஆராய்ச்சியிற் கிடைத்த சிலாசாஸனங்கள் சிலவற்றையும், இன்று வரை இறவாது தமிழ்மக்கள் இயற்றிய சிறிது தவப்பயனால் மிளிரும்

சில நூல்களையும் கருவியாகக் கொண்டு புலவர் சிலர் உண்மை வரலாற்றைஉணரும் ஆர்வமுடையராய் ஆராய்ந்து சில நூல்கள் வெளிப்படுத்தினர். அன்னோர் உண்மை வரலாற்றைக் காணும் மதுகையின்றி குன்று முட்டிய குரீஇப்போ விடர்ப்பட்டு நெகிழ்ந்து போயினர். அவர் தம்முள் ஒரு சிலர், இல்லாத வற்றைப் புனைந்து தம் நுண்ணறிவினால் அறிந்துரைத்தது போல் அவிநயங் காட்டினர். ஒரு சிலர், சாதி, குலம், மதம் முதலியவற்றில் அளவிறந்த பற்றுவைத்து உண்மை நெறி பிறழ்ந்து பொய்ப்பல புகன்றனர். வேறு சிலர், இப்போது பிரபலமாக வழங்கும் வரலாற்றோடும் பிணங்கி, அவையிற்றைச் சுருதி, யுக்தி, அநுபவம் முதலிய வற்றிற்குப் பொருந்தா வென மறுத்துத் தாம் புதுவதாக மேற்கூறிய மூன்றனுள்ளும் ஒன்றற்கும் பொருந்தாவாய் ஏதோ சிலவற்றைக் குழறுபடை யாகக்கூறினர். மற்றுஞ் சிலர், தருக்க சடிலமாக எழுதுவார் போன்று துவங்கி மெது மெதுவாக நெகிழ்ந்து போயினர். இன்னுஞ் சிலர் இப்போழ்து வழங்கப்படும் சரிதங்கள் யாவும் மெய்யன்று பொய்ம்மையே எனப் போக்குக் கூறி மழுங்கினர்.

இவ்வாறெல்லாம் நுண்ணறிவுடைய உண்மைத் தமிழபி மானிகள் ஒருகாலும் கூறார் என்பது திண்ணம். சாதி, குலம், மதம் முதலிய தொடக்குண்டு கிடக்குநர் இத்தகைய ஆராய்ச்சி கட்கு ஒரு சிறிதுந் தக்கவர் அல்லர். அத்தகையினர் தமிழின் கண் அபிமானம் சிறிதும் இல்லாதவரு மாவர் என்க.

தமிழபிமானம் உண்மையின் உளதேல் எத்தகையினரே னும், எக்குலத்தினரேனும், எச்சமயத்தினரேனும் அன்பு செலுத்தல் வேண்டுமன்றே. அவ்வாறு இவர் அன்பு செய்யக் காணாமையின் இவர் அபிமானம் உடையேம் என்று கூறுங் கூற்றனைத்தும் வெறும் போலியாதல் காண்க. இனி ஒன்றன்

பால் விருப்பும், பிறிதொன்றன் பால் வெறுப்பு முடைய இந் நீரர்க்கு உண்மை எங்ஙனம் புலப்படும் என்க.

இப்பெற்றிவாய்ந்த போலி மாக்களினாலேயே நந்தம் தமிழகப் புலவர் வரலாறும், ஏனையவும் ஒருதலைப் படாமற் கிடக்கின்றன. அந்தோ! அந்தோ!! நாகரிகம் ஓங்கிப் பொலிவுறும் இக்காலத்தும், ஆங்கில மக்களின் ஆராய்ச்சித் திறன் முதலியவற்றைக் கண் கூடாகக் கண்டுகளித்தும் இத்தன்மைய பொய் வரலாற்றில் பற்றுதல் வைத்துழலும் அறிவோர் செய்கையை என்னென்பேம்! தமிழ் மகளே! ஈதுன் பேரூழ்வலியோ!

இனி, அன்னார் கூறியவற்றுள் ஐயந் திரிபுடைய வற்றினையும், அபிமானம் பற்றியவற்றினையும் எடுத்துரைப்பின் அஃதோர் நூலாய் விரியுமாகலின், அவையிற்றுள் தாலிபுலாக நாயம் பற்றி ஒன்றனைக்கூறி நிறுத்துவோம். உதாரணமாக, கம்பரைச் சைவரேன்றனர் சிலர். சிலர் வைணவரேன்றே கூறினர். கம்பர் குலத்தில் வன்னியர் என்றும், ஓச்சர் என்றும், அரசர் என்றும் பலரும் பலபட உரைத்தனர். இவற்றுள் எதனைக்கொள்வது? எதனைத் தள்ளுவது? ஒருவரும் பிரபலஆதாரங் காட்டினரல்லர். அவர் கூறியன யாவும் கெதானுகெதிக நியாயம் பற்றியனவேயன்றி வேறல்ல.

இனி, இவ்வுரைப்பிறல்களின் தன்மையை இம்மட்டில் நிறுத்திக் கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் வரலாறு என்னும் நூலின் தன்மைபற்றிச் சில கூறிப் பாயிரத்தை முடித்தும்.

இதனை எமது பார்வைக்கு இதன் ஆக்கியோனாகிய நண்பர் திருவாளர் சி. கு. நாராயணசாமி முதலியார் அவர்கள் அனுப்பினர். அதனைப் படித்தேற்குப் பெரிதும் இன்பம் பயந்தது. அவருடைய ஆராய்ச்சித்திறன் இத்துணைப் பாராட்டற்பாலதென்பது விளங்கிற்று. அவற்றுள் சில ஈண்டு கூறுகின்

றோம். தமிழ்நாவலர் சரிதை, சோழமண்டலசதகம்,தக்கயாகப் பரணி, மூவருலா, கல்வெட்டுக்கள், மெய்க்கீர்த்திகள், தொண்டைமண்டல சதகம் போன்ற பழமையான நூல்களைக் கருவியாகக்கொண்டு நண்பர் அவர்கள் வரைந்துள்ளார்கள். அவற்றுள் சில இன்றுவரை வெளிவராதன. ஒரு விஷயமே னும் பிரமாணமின்றி எழுதப்படவில்லை. இதுகாறும் வெளி வந்த வரலாற்றின்கண் காணப்படும் குற்றங்களை ஆங்காங் கெடுத்துக்கூறி மறுக்கின்றார். பெயர்களுக்குக் காரணமும் ஆண்டாண்டுத் தெரித்துரைக்கப்பட்டுள்ளன. ஊர்கள் இருக்கு மிடமும் குறிக்கப்பட்டிருக்கின்றன.

" மெய்வருத்தம் பாராற் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார் "

என்னும் பாட்டுக் கிலக்காகத் தமிழுலகம் உண்மை உணர்ந்து உறுதி தலைக்கூடி உய்யும்பொருட்டு உள்ளவாறே விளக்க வேண்டி இவர் எடுத்துக்கொண்ட உழைப்பு ஆராய்ச்சி முதலி யவை எம்மாலும் தமிழ்மக்கள் அனைவராலும் போற்றன் மாலையவாம் என்க.

இதுகாறும் வெளிவந்துள்ள பன்னூல்களினும் இதுவே தலைசிறந்ததென்பது எமது கருத்து. அதனையே உலகம் அறிந்து கூறும் என்க. சில இடங்களில் இவர் அறிவின் நுட் பத்தால் நுனித்துக் கூறும் பொருண்மை இறப்பவும் மதித்தற் பாற்று. முதற்கொண்டு முடிவுகாறும் ஒரே தன்மையாய்ச் சொன்னோக்கும் பொருணோக்கும் துறுமி ஒளிர்கின்றது. காலத்தை வரையறுத்துக் கரதாமலகம் போல் காட்டுகின்றது. நடையும் ஆற்றொழுக்குப்போல் மொழுமொழுவென்று நவின்

றோர்க் கினிமை பயக்கும் நன்மொழி புணர்ந்து ஓசைபெற்று இனிது நடக்கின்றது. நிற்க.

இந்நூலானது தமிழ்ப்புலவர் காலம், சோழமன்னர் மூவர், அவர்தம் அரசு, பேரறம், கொடை, மாண்பு முதலியவற்றை உணர்வதற்கு ஒரு நந்தாமணி விளக்காய்ச் சிறக்கின்றது என்பது நட்டார், பகைவர், நொதுமலர் என்னும் முத்திறவரானும் ஒத்துக்கோடற் பாற்றென்க.

இனி, இந்நூலைப்போலப் பன்னூல்கள் தமிழின்கண் வெளிவருதல் வேண்டுமென்றும், இந்நூல் நின்று நிலவவேண்டும் என்றும், இந்நூல் முட்டின்றி முடிந்தமை நோக்கியும் எல்லாம் வல்ல முழுமுதற் செழும்பொருளும், "ஆதியிற் றமிழ்நூ லகத்தியற் குணர்த்திய மாதொரு பாகனுமாகிய சிவபெருமானை" மனமொழிமெய்களான் வணங்குதும் நலம்.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும்—அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு" (வள்ளுவனார்)

'கல்யாண நிலயம்
25, ஆயலூர் முத்தையாமுதலி தெரு,
சென்னை, கி.

இங்ஙனம்:
தாழ்மையுள்ள,
மணி. திருநாவுக்கரசன்.

ஆராய்ச்சி முறையில் விரைவில்

# வெளிவரும் வரலாறுகள்

1. கம்பர்
2. வில்லிபுத்தூரார்
3. அருணகிரிநாதர்
4. அதிவீரராம பாண்டியன்
5. புகழேந்தி
6. காளமேகம்
7. கடையெழுவள்ளல்கள்

தொகுப்பாளர்,

சி. கு. நாராயணசாமி முதலியார்,

126, தாமஸ்வீதி, கோயமுத்தூர்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

கவிச்சக்கரவர்த்தியாகிய

# ஒட்டக்கூத்தர் வரலாறு



## காப்பு

### நேரிசை வெண்பா

உலகம் புகழ்ந்தேத்து மொண்புலவன் கூத்தன்
இலகேர் சரிதை யியம்ப—நிலமேழும்
ஏத்துகந்த னேத்துகந்தங் கேற்பவந்த வோம்பன்
காத்துகந்து நிற்கவந்தென் கண்.

### தோற்றுவாய்

எந்தத் தேசமாயினும், எந்த மதத்தினராயினும், எந்தச் சார்பினராயினும் ஏற்றமடையவேண்டின், தந்தேச சரித்திரமன்றித் தந்நாட்டுப்பெரியோர்சரிதங்களையும் போற்றிப்படித்து அதன்படி யொழுகவேண்டும். என்னெனின், தேச சரிதங்களும், மொழிகளின் வரலாறுகளும், ஜீவியச் செய்திகளுமே நம்மவர்க்குத் தேசாபிமானம், பாஷாபிமானம், உண்மையறிவு ஆதியவற்றைப் புகட்டுமென்பது நாகரிக நாட்டினர் நன்கறிந்த

தோர் உண்மையென்க. இக்கருத்துப்பற்றியே உலகில் சரித்திரங்கள் நிகழத்தலைப்பட்டனவென்று கூறுதலும் மிகையன்று.

தமிழ் அரசர்களும், வள்ளல்களும், பிரபுக்களும், மற்றும் தமிழ் வளர்க்கும் பரோபகாரிகளும் தமிழை நன்கு ஆதரித்ததினால், தமிழ் மடந்தை, தன் ஆதிக்கத்தைத் தமிழ் நாடெங்கணுஞ் செலுத்திப் புகழ்பெருகி யிருந்தனள். அதனால்; அக்காலத்தில், அரிய தமிழ் நூல்களும், அவைகளை இயற்றிய ஆசிரியர்களும், அவர்களது வாழ்நாட் சரிதங்களும் நிரம்பித் தமிழ் நாட்டை அலங்கரித்திருந்தன. இச்செய்திகள் 'சிலப்பதிகாரம்', 'பத்துப்பாட்டு', 'எட்டுத்தொகை', 'சேங்கோன்தரைச் செலவு', 'தகடூர் யாத்திரை' முதலிய நூல்களிற் காணலாகும். அங்ஙனம் காணப்படும் அவைகளில் தனித் தமிழின் இனிய சுவையும், சொல்லழகும், பொருட்செறிவும், ஆசிரியர்களின் தமிழறிவும், மற்றும் அவர்களது சீலம், அன்பு, கடவுட் பத்தி, மெய்ந்நெறி, லோகோபகார சிந்தை முதலியனவும்; அக்கால வியல்பு, தேசம், மதம், நடை, உடை, உண்டி முதலியனவும், அங்கை நெல்லிக்கனி போல் அறியக் கிடக்கும்.

இந்நிலையிலேயே தமிழ் மடந்தை பெருகி யிருப்பளேல், தமிழ்நாடு ஏற்றம் பெற்று உயர் வெய்திருக்கும். இவற்றிற்கு மாறாக வடமொழி நூல்களின் மொழிபெயர்ப்புக்கள் தமிழில் வழங்க ஆரம்பித்தன. அதனால், தமிழ் வளர்ச்சி குன்றத் தொடங்கிற்று. மொழி பெயர்ப்புக்கள் அதிகம் நிலவத் தொடங்கவே, தமிழுணர்ந்த புலவர்கள், வடமொழி நூல்களில் காணும் அளவிறந்த நயங்களில் ஈடுபட்டு விட்டார்களே யன்றி, உண்மையை அறியவும், பிற்காலத்து இயல்பை நோக்கவும் தலைப்பட்டாரில்லை. இதனால், புராண காலந்தொட்டு நிலவிவந்த புலவர்கள், பெரியோர், அரசர், வள்ளல்கள் பிர

புக்கள் முதலியோர் குணம், குறி, செயல், நடை, கல்வி, ஒழுக்கம், இவைகளிற் காணும் ஏற்றங்களை நமக்கு எளிதில் விளக்க நூல்கள் இல்லாது போயின. போகவே இரண்டொன்று நீங்கலாகத் தமிழிலுள்ள நூல்கள் பெரும்பாலும் சரித்திர உண்மையைக் காட்ட இயலாவாகி, இருந்தும் பயனிலவாயின.

இக்குறையை நீக்க இக்காலத்தில் தமிழ் கற்றோர் வெளிவருதல் தக்கதே. சென்ற நூற்றாண்டின் இறுதியில் சில தமிழ் அறிஞர்கள், தாம் கற்ற ஆங்கிலக் கல்வியின் உதவி கொண்டு நமது நாட்டுப் பெரியார் சரிதங்களுள் சிலவற்றை எழுதி வெளியிட்டனர். அவ்விதம் எழுதப்புகுந்தார் நிலை கண்ணைக் கட்டிக் காட்டில் விடப்பட்டவன் நிலைமையை ஒத்திருந்தது. இருந்தும், உழைப்பும், சிரமமும், செலவும், பொருட்படுத்தாமல் விடாது முயன்றதில், சரித்திரங்கள் இன்ன தன்மையில் இருக்கவேண்டுமென்ற வழியைக் காட்ட வல்லராயினர். அவ்வழியைப் பின்பற்றி உழைப்பவர் தோன்றியுள்ளதாகவும், தோன்றுவதாகவும், தெரிவதால் தமிழ் நாட்டுக்குச் சரித்திர விஷயத்தில் தக்க சேம நிதி யிருக்கின்றதென்றே சொல்லலாம்.

சரித்திரம் உண்மையானதாய் இருக்கவேண்டின், பூர்வ சாஸன ஆதாரங்கொண்டும், சரித்திரத் தலைவனால் சொல்லப்பட்ட தன்னுதாரங்கொண்டும், அத்தலைவன் காலத்திருந்தோர் அவனைப் பற்றிச் சொல்லியுள்ள ஆதாரங்கொண்டும் இயலவேண்டும். இவ்வகை ஆதாரங்களைத் தன்னுட்கொண்டு, 'பாடுந் தமிழ்ப் பெருமான் ஒட்டக்கூத்தன்'; 'நித்தநவம்பாடும் புலவர் பணிகொண்ட கூத்தன்'; 'காக்கண்ட சேங்கைக் கவிச்சக்கரவர்த்தி'; 'வல்லான் கவியோட்டக் கூத்தன்' என்று புலவர்களால் புகழ்ந்தோதப்பட்ட கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் வரலாற்றை, நாம் கூற முன்வந்ததென்க

இதற்குமுன்னர் இவரது சரித்திரம், 'விநோதரசமஞ்சரி', 'புலவர் புராணம்', 'தனிப்பாடற்றிரட்டு', 'பாவலர் சரித்திர தீபகம்', 'அபிதானகோசம்', 'அபிதான சிந்தாமணி'' 'யாழ்ப்பாணப் பேரகராதி', மெட்ரிகுலேஷன் தமிழுரைகள் முதலிய நூல்களில் இடம்பெற்று வெளிவந்திருப்பினும், அவை கள் பெரும்பாலும், புனைந்துரைகளினாலும், பொய்ச்செய்திகளா லும் நடுநிலை திறம்பிய வழி நின்றும், நன்கு ஆராயாது மனம் போனவாறு கர்ண பரம்பரைச் செய்திகளைத் தழுவியும், உண்மை வரலாற்றை யொழித்தும், எழுதப்பட்டுள்ளன.

இப்பெரியாரது வரலாறு இங்ஙனம் உண்மைநெறிக்கு மாறாக இயற்கை திரிந்து இந்நாளிலும் விளங்குவது அறிவுடை யோர் அவைக்கும், சரித உலகத்திற்கும் ஏற்றதல்லவென்று கருதி, அக்குற்றங்களைப் போக்கி, மேனாட்டுச் சரிதை முறை யைப் பின்பற்றி, சாஸனங்கள், கால ஆராய்ச்சி முதலியவை களை உடன்கூட்டித் தெளிவாகத் தொகுத்திருக்கின்றோம்.

இத்தொகுப்பில் முன்னாளில் தமிழகம் போற்ற விளங்கிய நமது புலவர் பெருமக்களின் அரிய சரிதங்கள், இக்கால நிலைக் கேற்ப அமைவுறாது ஓரே கதம்பமாய் இருப்பதுபோ லின்றி, புலவர் பிறப்பிடம், மரபு, காலம், களம், நூல் முதலி யவைகள் முறையாக வகுக்கப்பட்டு முற்றிய சரிதமாக்கப்பட் டுள்ளது. இவ்வாராய்ச்சிக்கு நமக்குப் பெருந்துணையாக விருந்தன 'தமிழ் நாவலர் சரிதை', 'சோழமண்டல சதகம்', 'பாண்டிமண்டல சதகம்', 'ஈட்டியெழுபது', 'செந்தமிழ்ப் பத்திரிகைகள்', பற்றும் பல பேரறிஞர்கள் அவ்வப்போது இதுபற்றி வெளியிட்டுள்ள 'குறிப்புக்களும்', பிறவுமாம்.
இனி இவரது வரலாறு வருமாறு:—

## ஊரும்—இடமும்

நமது கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் பிறப்பகத்தைப் பற்றி இதுவரை வெளிவந்த சரிதங்களில் ஒன்றிலேனும் திட்டமாகக் கூறப்படவில்லை. அங்ஙனம் கூறப்படாமற் போனதற்குப் போதுமான ஆதாரங்கிட்டாததும், கவனியா திருந்துவிட்டதுமே காரணம்போலும். நமது நாட்டுப் பழந் தமிழ் வாணர்களில் பெரும்பாலாரின் ஊர், இயற்பெயர் முதலி யன தெளிவின்றி மறைந்து கிடக்கவே காண்கின்றோம். இக் குறைக்கு முக்கிய காரணம், நமது பழந்தமிழ்ப் புலவர்களு டைய வரலாறுகள், நமது முன்னோர் பின்னோர் உணருமாறு போற்றி வைக்காதிருந்ததும், நாமும் அவரது வாழ்நாட் சரி தங்களை ஆராயாது மறந்ததுமேயாம். இந்நிலையிலுள்ள நாம், நமது புலவர் பிறப்பகத்தை விளக்குவ தெங்ஙனம்? எனினும், தற்காலம் வழங்கும் தனிநிலைக் கவிகளில் கூத்தர் பிறப்ப கத்தைப்பற்றிக் காணப்படும் பாடல்களைக் கொண்டும், கர்ண பரம்பரைச் செய்திகளில் உண்மை வரலாற்றைத் தழுவியும், பிற காரணங்களைப் பின்பற்றியும், புலவர் பிறப்பிடத்தை நிர்ணயிக்கத் துணிகின்றோம். இங்ஙனம் துணியும்போது நமக்குக் கூத்தர் பிறப்பகத்தைப்பற்றி அடியில்வரும் செய்யுட் கள் சான்றாகக் காணப்படுகின்றன. அவை,

(1) "குன்றக் கூறன் முதலாங் குறைகளைய வெண்ணியொரு
வென்றிக் கேதன நிறுவி வீண்கவிக டலையறுப்ப
லென்றுத் தாங்கவியர சிவ்விக மெல்லாங் கொண்டதிளங்
கன்றுக்கே யுருகாவின் கருணைமணவூ ரரசே" (1)

(கந்தவிரதவிலாசம்)

(2) "தேனுந்து மலர்ச்சோலைத் திருமணவூர்ச் சிவசங் கக்
கோனந்தச் சிற்சபையெங் கூத்தனருட் கூத்தனெனு

மானந்தச் செல்வ! நின தாசனத்தி லலகுபெறி
ஞனிந்தச் சென்னமுனே நயந்திரத்த லென்கடனே" (7)

(கந்தவிரதவிலாசம்)

(3) "சேலேய் விழிமடவாரிற் செங்காலன்னஞ் சேர்பழனப்
பாலேய் மணவயிற் கூத்த!" (தனிநிலைக்கவி)

(4) "துளைபடு மாமர மோரேழு மெய்தவன் றூதுகவி
யுளைபடு வாரிதி யொன்றே கடந்த தொளிர்தரள
அளைபடு வாவி மணவைமன் கூத்தன் வகுத்தகவி
தளைபடு காலுடனே கடலேழையுந் தாண்டினதே"

(தனிநிலைக்கவி)

எனவருவன வாம். மேற்குறித்த நான்கு பாடல்களும் ஒருமுக மாகவே, கூத்தர் பிறப்பகம், "மணவை" என்னும்ஊரென்றே தெளிவாகக் கூறுகின்றன . இம்மணவை சோழநாட்டில் தென்னிந்திய ரயில் பாதையில், திருவாரூர் சந்தியிலிருந்து திருத்தருப் பூண்டிக்குச் செல்லும் வழியில்ஆலத்தம்பாடி ரயிலடிக்கு நேர்மேற்கு எட்டுமைல் தூரத்தில் * அரிய சந்திரநதியின் தென்கரையி லிருக்கிறது. நாகப்பட்டினத்திலிருந்து தலை ஞாயிறு வழியில் தெற்கே 18 மைல் தூரமும்; திருத்தருப் பூண்டியிலிருந்து பாமணி, கொக்காலடி, நீர்முளை வழியில் வடக்கே 8 மைல் தூரமும் வந்தால் "மணக்குடி" சேரலாம். திருநெல்லிக்கா, திருவாய்மூர் வழி, சுற்றும் இடையில் நதியையுங் கடத்தல்வேண்டும். "மணவை" என்பது மணக்குடியின் மரூஉ. கோயமுத்தூருக்குக் 'கோவை' என்றும், நாகப் பட்டினத்திற்கு 'நாகை' என்றும், தஞ்சாவூருக்குத் 'தஞ்சை' என்றும் வழங்கப்படுதல் போல.

* இது—அரிய சந்திர சோழனால் முள்ளியாற்றினின்றும் பிரிக்கப்பட்டுத் தன்பெயர் நிலவத் தோண்டப்பட்டதோர் சிற்றாறு. தற்காலம் அரிச்சந்திர நதி என்று வழங்கப்படுகிறது.

இம்மணக்குடியே, கூத்தர் பிறப்பகம் என்பதற்குச் சிறந்த சான்று, கூத்தர் பிறந்து வளர்ந்த மனைக்கட்டு இன்றும் அவ்வூரில் காட்சிப் பிரமாணமாய் விளங்கிக் கொண்டிருப்பதேயாம். அம்மனைக்கட்டில், கூத்தர் மரபின் கால்வழியில் வாழையடி வாழையாய் வருகிற சந்ததியார் இன்றும் வாழ்ந்து வருகின்றனர். இன்றைக்கும் அத்தொன்மனையில் வாழ்ந்து வருபவர் 56 வயதுள்ள "ஒட்டக் கூத்த முதலியார்" என்னும் பெயரினர் ஆவர் அம்மனைக்கட்டு, மணக்குடி மேலைத் தெருவில் வடபுறம் திரு. சுப்பையா முதலியார் வீட்டிற்கும், தென்புறம் திரு. க. சு. விஸ்வநாத முதலியார் வீட்டிற்கும், கீழ்புறம் காலி நிலத்திற்கும், மேற்புறம் பொதுத் தெருவிற்கும் மத்தியில், ஓட்டுவில்லைக் கட்டிடமாய் இருக்கிறது. இம்மனையைப்பற்றி அவ்வூரில் எங்கு விசாரித்தாலும் "ஒட்டக் கூத்தர் பிறப்பக" மென்றே கூறுகின்றனர். இவ்வீடு தற்காலம், முன்கட்டு விழுந்து பாழாகியும், இரண்டாங்கட்டு மிகத் தாழ்ந்து ஆறடி உயரத்திலும் இருக்கின்றது. மேற்கு நோக்கிய தலைவாயிலும், வடபுறத்திற் சிறியதொரு கூடமும், ஓர் அறையும், தென்புறம் ஒரு சிறு தாழ்வாரமும், மேற்புறம் இரண்டு சிற்றறைகளும், நடுவில் ஒரு சிறு முற்றமுமே அவ் வீட்டின் அடையாளங்களாம். மொத்தம் ஆறு அங்கணம். இவ்வீடு பழையகாலத்தது என்பதற்கு அதன் கட்டுக்கோப்பு, தோற்றம் முதலியன சான்று.

மேலும், இம்மணக்குடியில், காளி கோவிலிலும், ஐயனார் கோவிலிலும் உள்ள தெய்வங்களுக்கு ஊரரால் படைக்கப்படும் படையல்களில் முதல் வினியோகம், கூத்தர் சந்ததியார்க்கே இன்றும் வழங்கப்பட்டு வருவதும், இங்ஙனம் வழங்கப்படுவதற்குக் கூத்தர் பெரும்புலவராய்ச் சிறந்து பெருமை பெற்று விளங்கியிருந்ததே முதன் மரியாதைக் காரணமென்று

கூறுவதும் புலவர் மணக்குடியினர் என்பதை மேலும் வற்புறுத்துதற்கு ஓர் ஆதாரமாகக் கொள்ளலாம்.

உண்மை இவ்வாறிருக்க, ஒரு சிலர், ஒட்டக்கூத்தர் "மலரி" என்னும் ஊரினர் என்றும், அம்மலரி சேது நாட்டில் இராஜ சேகரமங்கலத்தில் உள்ளதென்றும் அதற்கு

சென்று செவியளக்குஞ் செம்மைவாய்ச் சிந்தையுள்ளே
நின்றளவி லின்ப நிறைப்பவற்று—லொன்று
மலரிவருங் கூந்தலார் மாதர்நோக் கொன்று
மலரிவருங் கூத்தன்றன் வாக்கு" தண்டியலங்காரம்

என்ற வெண்பா ஆதாரமென்றும் காட்டுகின்றனர். சிலர், கூத்தர் சீர்காழியிற் பிறந்தவர் என்றும், அதற்குச் சான்று,

"கம்பனென்றுங் கும்பனென்றுங் காளியோட்டக் கூத்தனென்றுங்
கும்பமுனி யென்றும்பேர் கொள்வரோ—அம்புவியில்
மன்னு வலர்புடைசூழ் வாயிலன தாரியப்பன்
அந்நாளி லேயிருந்தக் கால்" தமிழ்நாவலர் சரிதை

எனவரும் செய்யுளென்றுங் கூறுவர். மேற்குறித்த தண்டியலங்கார வெண்பாக் கருத்து, 'செவியளந்து கொண்டு சிந்தையுள்ளே அளவில் இன்பம் நிறைக்கும் நல்வாக்குடையார் கூத்தர் எனப் புகழ்ந்து பாராட்டப்பட் டிருப்பதே. இதனுல், புலவரின் புலமைத் திறமும், வாக்கின் அழகும் விளங்குவதேயன்றி, 'மலரி' என்னும் ஊர் சேது நாட்டின் கண்ணதென்று விளங்குவதாயில்லை.

இரண்டாவது, தமிழ் நாவலர் சரிதைப் பாடலிலுள்ள 'காளியோட்டக் கூத்தன்' என்னுந் தொடரைக், 'காழியோட்டக் கூத்தன்' எனப் பாடபேதஞ் செய்து கூத்தர் சீர்காழியிற் பிறந்தவர் எனக் கூறப்படுவது. ஆனுல், அச்செய்யுளை ஆக்கிய கவியின் கருத்து அவ்வாறு இருக்குமோ வெனக் கவனிக்கற்

பாலது. இப்பெயர்களே விநோதமானவை எனக் கூறப் புகுந்தவர், இடையில் ஒருவரை மாத்திரம் அவர் ஊரால் விசேடித்தாரென்பது முரண்படுகின்றது. மேலும், கூத்தர், 'வில்லிபுத்தூரர்' என வழங்கப்படுதல் போல, 'காழியோட்டக் கூத்தர், என வழக்கில் இல்லாமையால் உலகவழக்காகக் கூறிய தென்று கொள்ளவும் இடமில்லை. ஆனதால், சீர்காழியும் கூத்தர் பிறப்பகமாக அங்கீகரிக்கக்கூடவில்லை.

மூன்றாவது, தஞ்சை ஜில்லா கும்பகோணம் தாலூகா மாயூரத்திற்குச் சமீபத்திலுள்ள பூந்தோட்டம் ரயிலடிக்கு ஒன்றரை மைலுக்கப்பால் 131 No, எனநல்லூர் வட்டத்தி லிருக்கும் கூத்தனூரே கூத்தர் பிறப்பிடம் என்றும், அதற்கு— அவ்வூர் கூத்தர் பெயரைக்கொண்டே இலங்குவதும், கூத்தர் சோழநாட்டுப் புலவரெனத் தொன்றுதொட்டு வழங்கிவரும் செய்திக்கு ஆதாரமாகக் காணப்படுவதும், சரஸ்வதி தம்ப லங் கொடுக்கக் கவிதையுண்டாகிய கூத்தர் முதலியார் எனத் தமிழ் நாவலர் சரிதையில் பிரயோகமிருப்பதும், அவ ருக்கு அநுக்கிரகஞ் செய்த சரஸ்வதி ஆலயம் அவ்விடத்தில் இன்றும் காட்சிப் பிரமாணமாய் விளங்கிக் கொண்டிருப்பதும், போந்த பிரமாணமாயிருக்க, ஏன் கூத்தனூரை கூத்தர் பிறப் பிடமாகக் கொள்ளலாகாதெனக் கேட்பது ? அதற்கு விடை, ' கூத்தர் அவ்வூரில் தவஞ் செய்து, சாரதா தேவியின் தண்ண ருளால், வரகவி பாடும் வரம் பெற்றதினால், அங்ஙனம் வரம் பெற்ற ஞாபகார்த்தம் என்றும் மறையாமல் இருக்கும் பொருட்டு, இவரை நன்கு ஆதரித்த சோழ மன்னர்களில் முதன்மை பெற்ற விக்கிரமசோழன், இவருக்கு அவ்வூரை முற்றூட்டாகக் கொடுத்துக் கூத்தர் பெயராலேயே நிலவும் படி செய்தனனே யன்றி, கூத்தனூர் கூத்தர் பிறப்பிடம் அல்லவெனக் ' கூறுவதேயாம்.

ஆயின், தண்டியாசிரியர், தமது வெண்பாவினீற்றில் 'மலரிவருங் கூத்தன்' என்று கூத்தர் பிறப்பகத்தைக் குறிப்பிடுவது பொருந்தாதோ வெனின், பாண்டி மண்டலத்தாயின் பொருந்தாது. என்னெனின்,

'இப்புலவர் பெருமகன் பிறந்தது பாண்டிமண்டலத்தாயின், இவர் அம்மண்டல மன்னனைச் சார்ந்து வதியாது யாது காரணத்தாற் சோழனை யடைந்து வாழ்ந்தனர்? என்ற வினவுக்கு விடையிறுக்குங்கால் முட்டுப்பாடேற்படும். பழுமரம் எங்குண்டோ அங்குச்சென்று வதியும் பறவைகள்போலப் புலவர்களும், பயன்றருவார்த் தேடிச்சென்று வதிதல் இயல்பெனின், முச்சங்கங்களை வளர்த்த நாட்டினனான பாண்டியன், கல்வியிற் பெரியராய கூத்தரைப் புரவாது பிறநாடு செல விடுத்தனனென்பது பொருந்தாது. ஆகலின், இவர் சோழநாட்டினரென்பதே பொருத்தமுடையதென்று தோன்றுகிறது. ஆயின், 'மலரி' எனப் பெயரியதோர் ஊர் சோழநாட்டிற் காணப்படவில்லையே யெனின் அற்றன்று; இப்பெயரியதோரூர் சோணாட்டில் பண்டுதொட் டுண்டென்பது இதுபோழ்து திருவரம்பூர் என்று கூறப்படும் திருஎறும்பியூர்க் கோவில் கல்வெட்டில், பாண்டிகுலாசனி வளநாட்டுமீக் கோழை நாட்டிலே ஸ்ரீகண்ட சதுர்வேதி மங்கலமான 'மலரி' (1914-ம் ஆண்டு கல்வெட்டறிக்கை நெ. 136.) என்று காணப்படுவதால் விளங்கும்' என்று இலக்கண விளக்கப் பரம்பரை திரு. சோமசுந்தர தேசிகரவர்கள் தக்க சாஸன ஆதாரங்கண்டு கூறுவதாலென்க. மேலும்,

''ஸ்வஸ்திஸ்ரீ. சரசுவதி தேவியை எழுந்தருளிவித்தார் இவ்வூர் (நஞ்சை) 20-...................ம் காணியுடைய மலரி உடையார் இந்தக் கவிச் சக்கரவர்த்திகள் பேரனார் கவிப்பெருமாளான வரதக்கூத்தன்'' எனக் கூத்தனூர் சரசுவதி பீடக்கல்

வெட்டையும் அவர்களே குறிப்பிடுவதனாலும் 'மலரி' சோழ நாட்டின் கண்ணதென்றே உறுதிப்படுகின்றது. அங்ஙனமா யின் மேற்குறித்த மணக்குடிக்கே முன்னர் மலரி என்று பெயர் வழங்கிக் காலாந்தரத்தில், மருகிப் பின்னர் மணக்குடி யென்று பெயர் பெற்றிருக்கலாமெனக் கருதுவது தவறாகா தென நினைக்கிறோம்.

வண்ணக்களஞ்சியம் ஸ்ரீ. நாகலிங்கமுனிவர், மலரிவருங் கூத்தன் என்ற செய்யுள், சில கையேட்டுப் பிரதிகளிலே,

'மணமமருங் கூந்தலார் மாதர்நோக் கொன்று
மணவைவருங் கூத்தன்றன் வாக்கு.'
(செங்குந்தர் பிரபந்தத்திரட்டு, பக்கம் 68)

என்றிருப்பதாகக் கூறுகின்றனர். உண்மையாயின் நமது கருத்துக்குச் சாலப் பொருத்தமாயிருக்கும்.

நாம் இதுகாறும் ஆராய்ந்தவாற்றால், கூத்தர் பிறப்பகம் சீர்காழி என்பதற்குப் போதுமான ஆதாரமின்மையும், மணவை யென்னும் மணக்குடிக்கே போதுமான ஆதாரமும், காட்சிப் பிரமாணமும், ஐதீகமும் ஒத்திருப்பதாலும், மணக்குடியில் இன்றும் 200 குடிகள் செங்குந்தர்கள் வீடே சிறந்து, மேற் கூறியவற்றிற்குச் சான்றாயிருப்பதாலும், கூத்தர் பிறப்ப கத்தை நாம் சோழநாட்டு மணக்குடியே என்று தீர்மானிக் கின்றோம்.

## இயற்பெயரும்—காரணப் பெயரும்

இவர் இயற்பெயர் "கூத்தர்' என்ப. நந்தமிழ் நாட் டுப் புலவர் பெருமக்களுள் பெரும்பான்மை யோர்க்குப் பெயர் உள்ளபடியே வழங்குவது அபூர்வமாயிருக்கிறது. இணைக்கப் பட்ட பெயராகவும், தோன்றி வளர்ந்த ஊரின் அடியாகப் பிறந்த இடப்பெயராகவும், சுபாவ அடையாளப் பெயராகவும் வழங்கிவருகின்றன. ஆயின், நமது புலவர்க்கு அக்குறை

யின்றிப் பெற்றோர்களால் இடப்பட்ட "கூத்தர்" என்ற பெயரே வழங்கிவந்ததாகத் தெரிகிறது. பின்னர் நிகழ்ந்த காரண விசேடத்தால் 'ஒட்டேதல்' என்ற அடைமொழி கூட்டி "ஒட்டக்கூத்தர்" என்று பெயர் நிலவ, அது வழக்கத்தில் நிலைபெற்றுச் சிறக்க, பின் அதுவே காரணப் பெயராய் வழங்கப்படலாயிற்று. கூத்தர் என்பது, தில்லையென்னும் சிதம்பரத்தின் சிற்சபையில் ஆனந்த நடனமிடும் சபாநாயகருக்கு ஒரு பெயர். இப்பெயர் அக்கடவுளுக்கு உண்டென்பது :—

"தாயிற் சிறந்தன்று நாணுடைய லாருக்கங் நாண்டகைசால்
வேயிற் சிறந்தமென் றோளிதிண் கற்பின் விழுமிதன்றீங்
கோயிற் சிறந்துசிற் றம்பலத் தாடுமெங் கூத்தப்பிரான்
வாயிற் சிறந்த மதியிற் சிறந்த மதிநுதலே."

(திருச்சிற்றம்பலக்கோவை)

"அருளா தொழிந்தால் அடியேனை
'அஞ்சல்' என்பார் ஆர்? இங்குப்
பொருளாய் எனையும் புகுந்தாண்ட
பொன்னே! பொன்னம்பலக்கூத்தா" (திருவாசகம்)

"பாங்குடைத் தொண்டர்கள் பணிந்துய்யும்
தேங்குநீர் வயல்சூழ் தில்லைக்கூத்தனே" (தேவாரம்)

என வருவனவற்றால் அறியப்படும். கடவுளர் தந் திருப் பெயர்களைப் பெற்றோர்கள் தம்மக்களுக்கு இட்டு வழங்குவது நமக்குள் வழக்கம். இவ்வழக்கத்தை அநுசரித்தே இவருக்குக் கூத்தர் என்ற பெயரை இவர் தம் பெற்றோர்கள் வைத்து வழங்கினராவர். 'ஆனந்தக்கூத்தர்', 'பகழிக்கூத்தர் சேந்தன்கூத்தர்', என்ற பெயர்களும் வழக்கத்திலிருப்பது காண்க. இவர் இயற்பெயர் "அம்பலக்கூத்தர்" என்றும், தந்தை பெயர் 'சிவசங்கரன்', தாயார்பெயர் 'வண்டார்குழலி' என்றும், செங்குந்

தர் பிரபந்தத்திரட்டும் ; 'ஆனந்தக் கூத்தர்' என்று 'அவத்தா ரண்ய தகன'மும் கூறுகின்றன. உண்மையை ஆராய்ந்தறிதல் வேண்டும்.

இனி, ஒட்டக்கூத்தர் என்ற சிறப்புப் பெயர் இவருக்கு வழங்கியதற்குரிய காரணங்களை ஆராய்வாம் கூத்தர், சரஸ்வதி தம்பலங் கொடுக்க வரகவியாய்ச் சிறந்த பின் விக்கிரம சோழனது போர்த்திறமையையும், வெற்றிச் சிறப்பையும் பற்றி * "அரும்பகைத் தொள்ளாயிரம்" என்னும் பிரபந்தம் பாடி அவ்விக்கிரமனது பேரவையில் அரங்கேற்றும்போது தமிழறிவுடைய அச்சோழன் கேட்டு மகிழ்ந்து, அதில் ஒரு செய்யுளைத் தனக்கு ஒட்டப் பாடச் சொல்ல, அவன் விருப்பத்தின்படியே கூத்தர் :—

கலித்துறை.

"நடித்தது நச்சர வுச்சியி னுச்சி மதிலிலங்கை
பிடித்தது வென்ற திருபதுதோள் பதினெண்பகலே
முடித்தது பாரதம் வீரப்புலிவைப்ப மூரிச் சென்டால்
அடித்தது பொற்கிரி 'விக்கிரம சோழ' வகளங்கனே.

என்று ஒட்டப் பாடினதினலும், மற்றொரு சமயம், இவ்விக்கிரம சோழனது பவனியைச் சிறப்பித்து உலாப் பாடும்போது, அவ்வுலாவிலும் இரு கண்ணிகளை யிணைத்து ஒரு வெண்பாவாக ஒட்டப்பாடச் சொல்லச், கூத்தர் :—

---

* இந்நூல், 'முத்தொள்ளாயிரம்,' 'வச்சத்தொள்ளாயிரம்,' என்பனபோன்று தொள்ளாயிரம் பாடல்களில் சோழன் பகை வென்றதைப் புகழ்ந்து பாடுவது. "இலக்கண விளக்கப் பாட்டியல் 88-ஆம் சூத்திர உரைக்கண் அரும்பகைத் தொள்ளாயிரம் என ஒரு நூல் காட்டப்பட்டது" இதுவேபோலும். (செந்தமிழ்த் தொகுதி 2, பக்கம் 318)

"கையு மலரடியுங் கண்ணுங் கனிவாயுஞ்
செய்ய கரிய திருமாலே—வைய
மளந்தா யகளங்கா வாலிலைமேற் பள்ளி
வளர்ந்தாய் தளர்ந்தாளிம் மான்"

எனப் பொருத்திப் பாடியதினலும், இங்ஙனம் இருமுறை பாடிய காரணத்தால், "ஒட்டக்கூத்தர்" என்று பெயர் சிறந்த தென்ப தொன்று; மற்றென்று—செங்குந்தர் தலைப்பிள்ளைகள் ஆயிரத்தெண்மரது அற்ற தலைகளாகிய சிரச்சிங்காதனத் திருந்து ஈட்டி யெழுபது என்னும் 'பிரபந்தம்பாடிப் பின், அவ்வற்ற தலைகள் ஒட்டப்பாடியதனல் ஒட்டக்கூத்தர் என்ற காரணச் சிறப்புப் பெயர் பெற்றனர் என்பது; இதற்கு:—

"நிலைதந்தார் புவியினுக்கு; யாவருக்கு
மானமதை நிலைக்கத் தந்தார்;
கலைதந்தார் வணிகருக்குச் சீவனஞ்செய்
திடவென்றே கையில்யாண்டும்;
விலைதந்தார் தமிழினுக்குச்; செங்குந்த
ரென்கவிக்கு விலையா கத்தான்
தலைதந்தா; ரெனக் 'கோட்டக்கூத்த' னெனும்
பெயரினையுந் தாந்தந் தாரே" (எழுப்பெழுபது)

வெட்டத்தா மிருகூறாகி விழுந்தவர் தம்மையெல்லாங்
கிட்டப் பார்த்திருந்தோர் மெச்சக்கிளர்ந்த வேலவனைப்போற்று
மிட்டத்தாற் பழையவண்ண மிலங்கிடப் பொருத்தி விட்டா
'னெட்டக்கூத்த'னெனு நாமமுலகமுற் றுரைத்த தன்றே"
(புலவர் புராணம்)

எனவருவன ஆதாரங்களாம். பின்னென்று—'ஒட்டம் என்பது பந்தயப் பொருளாதலின், கூத்தர் பிற புலவர்களுடன் பந்தயம் வைத்துப் பாடுதலில் வல்லாரானதால் ஒட்டக்கூத்தர் என்று பெயர் சிறந்தா'ரென்று கூறப்படுவது.

மேலே காட்டிய மூவகை ஆதாரங்களும் ஒட்டக்கூத்தர் காரணச் சிறப்புப்பெயர் பெற்றதற்குப் பொருந்துவனவாக வுள்ளதால், புலவர் இயற்பெயரும், காரணப்பெயரும் ஒட்டக் கூத்தரென்று நன்கு அறியப்பட்டன.

## நாடும்—மண்டலமும்

நமது புலவர் பிறந்து, வளர்ந்து, புகழெய்திய நாடு, சோழமண்டலம் அல்லது சோழ நாடென்றே ஆன்றோரால் கூறப்படுகிறது. இந்நாடு, காவிரியின் நீர்வளத்தாற் சிறந்து, நெற்பயிர் மிகுதியாய்ச் செழித்து, 'சோழவள நாடு சோறு டைத்து' என்னும் பெருமைக் குன்றவிடமாய் விளங்கும் தகுதியுடையது.

"தண்ணீரும் காவிரியே தார்வேந்தன் சோழனே
மண்ணாவதுஞ் சோழ மண்டலமே"

என்ற தமிழ் மூதாட்டியின் சிறப்புரையும்; இதற்கு எடுத்துக் காட்டாக வமைந்த

"எந்த நதியைப் புகழ்ந்தாலு மிதுகா வேரிக் கிணையென்பார்
எந்த வரசைப் புகழ்ந்தாலு மிவனே சோழற் கிணையென்பார்
எந்த நாட்டைப் புகழ்ந்தாலு மிதுவே சோணாடென வியம்ப
வந்த விசிட்ட மோங்கியது வளஞ்சேர் சோழமண்டலமே"

என்ற சோழமண்டல சதகச் செய்யுளும், இதன் உண்மையை வலியுறுத்தும் ஆதாரங்களாம். மற்றும் 'பொன்னி நாடு,' 'புனல் நாடு' என்பனவும் இதற்குச் சான்றாம். பின்னும், கூலவாணிகன் சாத்தனார் தமது மணிமேகலையில்:—

"அமர முனிவ னகத்தியன் றனாது
கரகங் கவிழ்த்த காவிரிப் பாவை
கோணிலை திரிந்து கோடை நீடினும்
தானிலை திரியாத் தண்டமிழப் பாவை"

எனக் கூறுவதாலும்,

"வசையில் புகழ் வயங்கு வெண்மீன்
றிசை திரிந்து தெற்கே கினும்
தற்பாடிய தளியுணவிற்
புட்டேம்ப் புயன் மாறி
வான் பொய்ப்பினுந் தான் பொய்யா
மலைத்தலைய கடற் காவிரி
புனல் பரந்து பொன் கொழிக்கும்
விளைவரு வியன் கழனி"

என்ற பட்டினப்பாலையின் சொற்றொடர்களாலும்,

"வான் பொய்யாது தீம்பெயல் பெய்து
மால் யாறு போந்து கால்சுரந்து பாய்ந்து
சுரை பொய்யாது நிரைவளஞ் சான்று
வரையாது வந்து பலாப் பழுத்து வீழ்ந்து
பாம்பு கொள்ளாது வீங்குசுடர் நீண்டு
வித்து நாறு வாய்த்து முத்துக் கரும்பு பூத்து
வரம்பு கொள்ளாது நிரம்பு பெருங்கூட்டு
விசும்பு நீங்குமஞ்சு துயின்று பெயர்ந்து போந்து
வாழை யோங்கிய கோழிலைப் பாக்குந்
தண்டா யாணர்த் தென்ப வென்றும்
படுவது கூட்டுண்டு கூவாது நோக்கிக்
குடிபுறந்து தரூஉம் வேந்த
னெடுநிலைத் தண்குடை நிழற்று நாடே"

என்ற தொல்காப்பியத்தாலும்,

"புனிதத் தன்மைவாய்ந்து கோள்நிலைமாறி-குற்றம்பட்டு, வான் பொய்ப்பினும் தான் பொய்யாது பெருமை மிக்குடைய காவிரிநதி என்றும், சோணாட்டின் கண் நீர் அறாது நிரம்பிப் பொன் கொழித்துப் பெருக்கெடுத்துப் பாய்தலும், பெரும் பரப்பாய் விளங்கும் வயல்களெல்லாம் விளைவறாது, என்றும் பசுமைநிறங்கொண்ட செந்நெற் பயிர்களாற் சிறந்து, காண்

போர் கண்களுக்குப் பசுங்கடல் பரந்ததோவெனக் கருதச் செய்யும் செழிப்பு மிகுதியும், மருதத்திற்கே உறைவிடமெனக் கருதும் நன்னிலமாய், கரும்பாலைகளிற் கரும்பை நறுக்கிப் பாகு காய்ச்சும் பான்மைத்தாய், எருமைக்கன்றுகள் நெற்பயிர் களின் நிழலிலே ஆங்காங்கு உறங்கிக் கிடத்தலும், குலைநெருங் கின தென்னை, நீண்ட தாருடைய வாழை, பாக்குக் காயையுடைய கமுகு, தீங்கனி செறிந்த மா, நீண்ட பனை, நறியமஞ்சி, நல்ல இஞ்சி, வளமுள்ள சேம்பு முதலியன மிகவும் செழிப்புடைத் தாய் அடர்ந்து வளர்ந்திருத்தலுமான சிறப்புக்களை யுடையது' என்ற அதன் உரையாலும், காவிரியின் சிறப்பும், நாட்டின் நலன்களும் நன்கு தெளிவாம்.

அம்மட்டோ!

" மன்ற வாணன் மலர்திரு வருளாற்
றென்றமிழ் மகிமை சிவணிய செய்த
வடியவர் கூட்டமு மாதிச் சங்கமும்
படியின் மாப்பெருமை பரவுறுஞ் சோழனுஞ்
சைவமா தவருந் தழைத்தினி திருக்கு
மையறு சோழ வளநா டென்ப"

என்ற இனிய செய்யுளால், தமிழ்ச் சிறப்பும், சங்க நிகழ்ச்சி யும், தண்டமிழ் வாணரின் பெருக்கமும், சோழனது பெருமை யும், சைவத்திருவும் தெற்றெனத் தெரிதலால், குற்றமற்ற சோணாட்டின் பெருமை கூறுதற் கரிதே. எல்லா நலனும் இனி துறச் சிறந்த இந்நாட்டில், கூத்தர் தோன்றினா ரென்னின், அவர் புகழ்தற்குரிய பெருமை மிக்காரே யாவர்.

## மரபு அல்லது குலம்

இப்புலவர், திருக்கைலாய பரம்பரையாரெனும் செங்குந் தர் மரபில், அம்மரபுசெய் தவப்பயனாகத் தோன்றிய கீர்த்தி யாளராவர். இவர் செங்குந்த மரபினர் என்பது, 'கந்த விரத விலாசம்' ஒட்டக்கூத்தர் தோத்திரம்,

"ஈட்டி யெழுபதென்னு மீர்ங்கவிநீ சொல்லுங்கா
லூட்டமிர்தஞ் செவிவாயி லுண்டவருங் கண்டவரும்
வேட்டத் தவமீதென்ன வேதனுக்குஞ் சொலவெளிதோ
தேட்டமிகுங் கூத்தனென்னுஞ் செங்குந்த மரபணியே!"

எனவரும் 7-ஆவது கவியாலும்;

* "மங்காத கீர்த்தி மறைநெறி யாற்றின் மனுமுறைகள்
பொங்கா நிற்பக் கவிச்சக்கர வர்த்தியெனத் திறைகள்
தொங்கா தவைதரச் சத்தியச் செங்கோல் சுமந்துசிரச்
சிங்கா தனத்திவர்ந் தாள்வோர் செங்குந்த சிலாக்கியரே"

எனவரும் செங்குந்தர் சிலாக்கியர் மாலைத் திருவிருத்தத்தாலும் அறியப்படும். மற்றும் இம்மரபினுக்கு, ஒழுக்க நலத்தைக் கைக்கொண்ட காரணத்தால் 'கைக்கோளர்' என்றும்; யாவர்க்கும் முதன்மையுடையாரதுபற்றி 'முதலியர்' என்றும் பெயர் வழங்கும். இப்பெயர்கள் இம்மரபினுக்கு வழங்கப்படும் உண்மை அடியில் வரும் செய்யுட்களாலும் உணரலாகும். அவை:—

"சலம்பெற்ற செஞ்சடை யார்கயி லாசர் தமதுநெற்றி
நலம்பெற்ற மூவிரு கட்பொறிக் கஞ்சிய நாயகிபின்
புலம்பிப் பெயர்ந்த வந்நாளவள் பாதத்திற் பூட்டியபொற்
சிலம்பிற் பிறந்தவர் 'கைக்கோள ராகிய செங்குந்தரே"

கலித்துறைமாலை 2.

"தக்கோர்கள் வந்தசிவ சந்தான வழிகண்ட
மைக்கோல விழிமடவாள் மாடிருந்த நம்பரனார்
திக்கோர்கள் போற்றுநவ திறல்வீரர் தமைவிளித்துக்
'கைக்கோள' ரென வழைத்தாள் கன்னியவள் மகிழவன்றே"

கந்தபுராணம் 6000.

என்பனவற்றால் கைக்கோளப் பெயரும்,

---

* 'மறைநெறியாறை' 'கவிச் சக்கரவர்த்திப் பெயர்பூண்டு' என்பன பாடபேதம்.

" இந்திர னயன்மா றேவர் யாவர்க்கு முதன்மை யாக
வந்தபான் மையினூற் சூல மழுப்படை யத்தனூர்க்கு
முந்திய நாமந்தானு முதலிய ராகை யாற்செங்
குந்தர் சந்ததிக்கு மப்பேர் முதலிய ரென்றுகூறும்."

ஈட்டி யெழுபது 29.

" மந்திரத் தலைமை வாய்ந்த மக்களுள் முதல்வ ரென்ற
குந்தரைச் சோழ வேந்து கொண்டநன் முறைமை தன்னால்
இந்தநற் புவியி னூடே இருந்தவம் பெரிதுங் கண்ட
சந்தமா முனிவ ராஞோர் சாத்தினர் முதலியென்றே"

, கந்தபுராணம் 6000

என வருவனவற்றால் 'முதலியர்' பெயரும் வந்தவாறு காண்க.

மற்றும், வாழையடி வாழையாய்ப் பல பெரியோர் கூத்தரை, செங்குந்த மரபின் சீரியரென்றே வழங்கி வருவதாலும்,

" எந்தையா மம்மை பாகத் திறைவனை வணங்கி யாமே
பைந்தமிழ்ப் பரணி செய்தப் பாடலோடு " (63)

எனக் கூத்தர், ' ஈட்டி யெழுபது ' என்னும் தமது நூலில், சிவபெருமானைத் தம் தந்தையென வாழ்த்துக் கூறுதலானும், செங்குந்த மரபோர் சிவகுமாரரும், செவ்வேளின் துணைவருமென கந்தபுராண முதலிய நூல்களிற் காணப்படுவதாலும் நமது புலவர் செங்குந்த குலத்தினர் என்பது செவ்விதின் உணரப்படும்.

## சமயம் அல்லது மதம்

கூத்தர், செங்குந்தமரபின் சிறப்புடைப் புலவரென்று மேலே கூறினோம். செங்குந்தமரபு சிவபெருமானை மெய்யன்புடன் வழிபடும் நியமமுடையதும், அத்தெய்வத்திற்குரிய சமயமாகிய சைவத்தையே பற்றுக்கோடாகக் கொண்டு அன்பு

செலுத்தி வழிபடும் நியமமுடையதும் உலகறிந்த வழக்கு. இவ்வுண்மை இன்றைக்கும், இம்மரபின் பெரும் பகுதியாரிடத்துப் பிரபலமாய் விளங்குவதைக் கண் கூடாகக் காணலாம். தாங்கள் சைவசமயத்தினர் என்பதற்குரிய அடையாளங்களாகிய திருவெண்ணீற்றையும், உருத்திராக்க மாலையையும் எப்பொழுதும் இவர்கள் அணிந்த வண்ணமாகவே விளங்குவதும், சமயதீட்சை, நிருவாண தீட்சை, விசேட தீட்சை முதலியன தம்மரபின் ஆசாரியர்களால் பெற்றுக் கொண்டு சிவத்தொண்டு செய்துவருவதும்; சிவலிங்கத்தை வெள்ளிச்சிமிழில் அமர்த்தி மார்பிலும், கையிலுங் கட்டிக் கொண்டு பூசிப்பதுமே போதிய சான்றும். இக்காரணங்களால், செங்குந்த மரபினர் சிவபரம்பரையாரென்றும், சைவசீலரென்றும், உம்பர் நாயகர் தங்கழல்களல்லது நம்பு மாறறியாத அன்பர்களென்றும் நன்கு தெளியப்படும். இந் நன்மரபின் வழித்தோன்றலே ஒட்டக்கூத்தரென்று மீண்டுங் கூறுகின்றோம்.

இதுவன்றி ஒரு நூலாசிரியர் மதம் இன்னதென்று வேறு காரணத்தால் விளங்காமல் அவர் செய்துள்ள நூல்களைக் கொண்டே அறியவேண்டிய விடத்து அவர் பாடிய கடவுள் வாழ்த்துச் செய்யுட்களும், அவர் நூலின் இடையிலே சில சொற்றொடர்களும் யாவராலும் ஆதாரமாகக் கொள்ளப்படும். அவ்வாறே இவரது கடவுள் வாழ்த்துக்களைப்பற்றிப் பார்க்குமிடத்து தாம் பாடிய ஈட்டிபெழுபது என்னும் சத்திய நூலில்,

"நாட்டிலுயர் செங்குந்த நாயகர்மீ திற்சிறந்த
ஈட்டி யெழுபதினைப் பாடக்—கோட்டில்
பருமா வரையதனிற் பாரதநூல் தீட்டும்
கரிமா முகன்கழலே காப்பு" ஈட்டியெழுபது

என விநாயக வணக்கமும்,

" புயல்வாழி நெடிதூழி புவிவாழி முதலீறு புகல்வேதநா
லியல்வாழி யுமையாளை யொருபாக ரிருதாளி னிசைபாடுவாம்"
தக்கயாகப்பரணி

—" முன்னை
மறைக்கொழுந்தை வெள்ளி மலைக்கொழுந்தை மௌலிப்
பிறைக்கொழுந்தை வைத்த பிரானைக்—கறைக்களத்துச்
செக்கர்ப் பனிவிசும்பைத் தெய்வத் தனிச்சுடரை
முக்கட் கனியை முடிவணங்கி "  விக்கிரமசோழனுலா

—" நவநிதிது
யேத்தற் கருங்கடவுள் ளெல்லையி லநனந்தக்
கூத்தைக் களிகூறக் கும்பிட்டு" குலோத்துங்கசோழனுலா

—" நிரம்பப்
பவளச் சடையோன் பணித்த படியே
தவளத்ரி புண்டரஞ் சாத்தி "

—" பார்த்திபர்தந்
தொல்லைத் திருமரபுக் கெல்லாந் தொழுகுலமாந்
தில்லைத் திருநடனஞ் சிந்தித்து "  இராசராசசோழனுலா

எனச் சிவபெருமான் துதியும்,

" ஒருதோகை மிசையேறி யுழல்சூரு மலைமார்பு முடனூடறப்
பொருதோகை சுரராச புறமேற விடுகோளை புகழ்பாடுவாம் "
தக்கயாகப்பரணி

எனக் குமாரக்கடவுள் தோத்திரமும்,

" உரக கங்கணந் தருவன பணமணி
யுலக டங்கலுந் துயிலெழ வெயிலெழ
உடைத விர்ந்ததன் றிருவரை யுடைமணி
யுலவி யொன்றொடொன் றலம்வர விலகிய
கரதலந்தரு தமருக சதிபொதி
கழல்பு னைந்தபைம் பரிபுர வொலியொடு

•கலக லன்கலன் கலனென வருமொரு
கரிய கஞ்சுகன் கழலிணை கருதுவாம்"

தக்கயாகப்பரணி

என வைரவக்கடவுள் வாழ்த்தும்,

"வழுவெறுகு கூடல் வடபாறு வழிமாற வமணீரர் போர்சழுவோ
வமண்மூகர் கருமாள வருமீளி கழல் பாடுவாம்" (ஷை)

எனச் சமயகுரவர் ஞானசம்பந்தர் வணக்கமும் கூறுவதால், இவருக்கு ஐங்கரக் கடவுள், அந்திவண்ணன், அறுமுகவேள், வைரவர் முதலிய தேவர்களிடத்துள்ள மெய்ப்பக்தியும், சமயாசாரியரிடத்துள்ள மெய்யன்பும் இனிது விளங்கும். மற்றும் :—

'உருக்கொடு பணியா தாரை யுளத்திலெந் தெழுத்தை யுன்னிப்
பெருக்கொடு தவள நீற்றைப் பேணியே யணியா தாரைத்
தருக்கொடு நின்று கண்ணீர்த் ததும்பமுன் னுடா தாரைத்
திருக்கோயில் வலம்வா ராரைச் சினத்தொடு பொருஞ்செங் குந்தம்"

"கூவிளை யிதழி தும்பை கொண்டருச் சித்த பேர்க்கும்
மூவர்தம் பாட லோதி முன்னின்று பணிந்த பேர்க்கும்
ஆவலோ டைந்தெ ழுத்தை யகத்துள்ளே நினைந்த பேர்க்கும்
தேவநா டாள வைக்குந் திருக்கைவேற் றுணைச்செங் குந்தம்" (24)

"ஆலமார் மிடற்று ராடு மாடலே யாட லம்மை
ஏலவார் குழலா ளங்கைத் தாளமே தாள மேந்தும்
சூலமா குவதன் னுன்கைச் சூலமே சூல மற்றிக்
கோலம் வாழ்வீரர் கையிற் குந்தமே குந்த மாகும்" (25)

எனவரும் ஈட்டி யெழுபதின் செய்யுட்களில், வில்வம் கொன்றை, தும்பை முதலிய மலர்மாலைகளை யணிந்து, விஷத்தைக் கண்டத்தில் அடக்கி, தில்லையில் திருநடனஞ் செய்தருளும் பரமசிவனை அவனுக்குரிய சிவச் சின்னங்களாகிய திரு

நீறிட்டு, உருத்திராக்கமணிந்து, பஞ்சாட்சரமோதி, சமயகுரவர்களது தேவாரப்பண்களை முறையுடன்பாடி, சிவாலயத்தை மெய்யன்புடன் வலம் வந்து, சந்நிதிமுன் நின்று மனமுருகத் தோத்தரித்துத் தொழுதெழுவார்க்கு எளிதில் முத்தி வீடு சித்திக்கும் என்பதை விளக்கமாகக் கூறுவதால் இவர் சைவ சமயத்தவரே என்பது நன்கு தெளியப்படும்.

இவரது 'உத்தர ராமாயணம்,' 'மூவருலா' முதலிய நூல்களிலும், தனிநிலைக் கவிகளிலும், காத்தற் கடவுளாகிய திருமாலுக்கு வணக்கமும், பரத்வமும் கூறியிருப்பதனால் இவர், 'அரனதிகன் உலகளந்த அரியதிகன்' என்ற சமயத்வேஷம் பாராட்டாமல், இரு கடவுளர்களையும் ஒப்பநோக்கும் உயர்ந்த சமயத்தவ ரென்றே கொள்ளத் துணியலாம். அல்லாமல், இவர் காலத்தில் மதத்வேஷம் அவ்வளவாகப் பரவாமலும், பாராட்டப்படாமலும் இருந்திருக்க வேண்டுமென இவரது கொள்கையைக் கொண்டு ஊகிப்பதும் தவறாகாது.

பேரறிவும், பெரும் புலமையும் படைத்த உத்தம கவிகள், சமயத்வேஷமும், கடவுள் விகற்பமும் கொள்ளாரன்றோ? கூத்தர் திருமால் விஷயமாய் வணக்கங்கூறிய பாடல்கள் அடியில் வருமாறு :—

"வெள்ளியங் கிரியை மீதே வேரொடு மெடுத்த வீரர்
கள்ளவன் புயநா லைந்துங் கனகமா மவுலி பத்தும்
துள்ளியம் புவிமேல் வீழ வொருகணை தொடுத்து விட்ட
வள்ளலம் புயமே யன்ன மலரடி வணக்கஞ் செய்வாம்"

உத்தரராமாயணம்

"ஒன்றாய்ப் பலவா யுளவா யிலவா யுரைப்போர்க்
கன்றா யாமா யருவா யுருவாகி மெய்ம்மை

குன்றாத ஞானக் கொழுந்தாய்க் குணமூன் றிறந்து
நின்றா னியாவ னவனீள்கழ னெஞ்சில் வைப்பாம் "

(ஷை)

" ஒருமுத லாகிக் கவடுமூன் றாகி
உயர்பெருஞ் சாகைகள் பலவாம்
தருவென நின்றாய் தலைபுலை தெரியாச்
சமயநூல் யாவையுந் தந்தாய்
அருவினை யாகி அருவினைப் பயனாய்
அருவினை அனுபவிப் பவனாய்
அருவினை யாக்கி அருவினை அருக்கும்
அற்புத யாருனை அறிவார் ?"

உத்தரராமாயணம்.

" ஆரேனு மொன்று சொல்லத்
தொடங்கினு மவ்விடத்துன்
பேரே வருமென்ன பேறுபெற்
றேன்பெரு நான்மறையின்
வேரே மிதிலையின் மின்னுட
னேவெய்ய கானடந்த
காரே கடல்கொளுந் தச்சிலை
வாங்கிய காகுத்தனே "

தமிழ் நாவலர் சரிதை

" திக்குளெட்டுக் கயர்துக்க முற்றுத்
திடுக்கிட் டலற
மைக்கடற்குட் சாந்தைக்க விட்டோற்
கிடமா மதுர
இக்குமுற் றிக்கணுச் சற்றுவிட்டுத்
தெறித்திட்ட முத்தைக்
கொக்கு மொக்கிக் கக்கி
விக்குமச் சோலைக் குறுங்குடியே"

தனிநிலைக்கவி

## இளமையும், அடப்பைத் தொழிலும்

இவர் தம் பிறப்பும், அதுபற்றிய சிறப்பும், வளர்ந்து பெருகிய தன்மையும், தாய் தந்தையர் இன்னார் என்பதாதிய வரலாறும் நாம் விவரமாய் அறிவதற் கின்றி அந்தகாரப்பட்டிருக்கின்றன. இவரது இளமைபற்றி நாமறிவதெல்லாம், கல்வி நிறைவில்லா இளம் பருவத்தே புதுவையின்கண் (புதுச்சேரி) 'குணங்கோள் சடையன்', "புதுவைச் சடையன்', புதுச்சேரிக் கோனடையன்', 'புதுவைத் திரிகர்த்தன்', 'வெண்ணெய்த் திரிகர்த்தன்" என வழங்கப்படுகின்ற சிறப்புப் பெயர்களுக் குரியவரும், தமிழ் காத்தல், பேணுதல், பெருக்குதல்களில் மிக்காரும், வரையாதளிக்கும் வள்ளலும், பெருநிலக் கிழவரும், வேளாண் செல்வருமாகிப் புகழுக்கோர் எல்லையாகவும் விளங்கிய திருவெண்ணெய்ச் சடையனது தந்தை "சங்கரன்" என்னும் பெருஞ் செல்வரிடத்துச் சென்று, அவரது அன்பு பெற்று, அவருக்கு வெற்றிலைச் சுருள் மடித்துக் கொடுக்கும் அடைப்பைத் தொழிலில் அமர்ந்து இருந்தாரென்பதே. இவர் இத்தொழிலில் அமர்ந்திருந்தாரென்பதற்கு,

"புதுவைச் சடையன் பொருந்து சங்கரனுக்
குதவித் தொழில்புரி யொட்டக் கூத்தனை"

என்ற 'தமிழ் நாவலர் சரிதைச் செய்யுளே தக்க சான்றும்.

இவ்வளவே கூத்தர் இளமையில் அடைப்பைத் தொழிலில் அமர்ந்திருந்த செய்தியாம்.

## கல்வியினுயர்வும்—புதுவைக் காங்கேயனும்

இங்ஙனம் கூத்தர் இளமையில் அடைப்பைத் தொழில் புரிந்து வருகையில், இவரது விநயகுணம், புத்திகூர்மை, உற்

சாக சிந்தை, மடியாவூக்கம், திறந்தெரிந்து செய்யும் செயல், சமயோசிதமாய் நடந்துகொள்ளும் சமர்த்து, சுதந்திரயூகம், கல்வியில் விருப்பம், தெய்வ சிந்தை, பெரியோரிடத்தன்பு, பெருமிதகுணம், வீரச்செறிவு முதலிய உயர்நலங்களையும், உத்தமச் செயல்களையும் 'சங்கரன்' என்பார்க்கு உறவினரும், நெருங்கிய பந்துவும், தனக்கென வாழாப் பிறர்க்குரியாளரு மாகிய "காங்கேயன்" என்னும் பேருபகாரி நன்கறிந்து, கூத்தர் விஷயத்தில் பேரன்புகொண்டு, அவரை நல்லறிஞராக்கி உயரச் செய்யின், உலோகோபகாரமாமென உளத்திலுன்னி, நன்னு ளொன்றில், கல்வியாதுயர்ந்த கணக்காயர் ஒருவரிடம்சேர்த்துக் கல்வி புகட்டும்படி ஏற்பாடு செய்தனர். ஆகூழும், பூர்வ புண் ணியப் பயனும் கூத்தரது முன்னேற்றத்திற்கு நல்லெழுச்சியாய் முனைந்திருந்ததால், அவைகளின் செயல்களுக்கேற்ப, இவர், அமிழ்தினுமினிய தமிழ்மொழியில் தமக் கொப்பாரு மிக்காரு மின்றி உயர்ந்து சிறந்து விளங்குவாராயினர். இதுகண்ட அறி வின் மிக்கார் பலரும், இவரது பூரண கல்விக்கும், புலமை மிகுதிக்கும், அருங்கவியிசைக்கும் அருமைக்கும் அதிசயித்து மிக்க மகிழ்ந்ததுமன்றி, அக்காலத்துப் புலவரெல்லாம் திடுக் கிட்டு அஞ்சுமாறு கவி பாடும் பேராற்றலையும் நோக்கி "கவி ராட்சதன்" "கௌடப்புலவன்", எனவும் புகழ்ந்துகூறிக் கொண்டாடினர். இக் கொண்டாட்டமும், புகழ்ச்சியும் தமிழ்நா டெங்கணும் விரைந்து பரவியதால், கூத்தர் பெருமை பிரசித்தமடைந்தது. இதுகேட்ட காங்கேயனும் களிப்பெனுங் கடலில் ஆழ்ந்தனன். இத்தகைய பெருமையும், புகழும் தமக்கெய்துதற்குக் காரணபூதர் புதுவைக் காங்கேயன் ஆனதால், அப்பேருபகாரியின்மீது தமது செய்ந்நன்றி பாராட்டி "நாலாயிரக்கோவை" என்னும் பெயரிய இனிய

பிரபந்தம் ஒன்றியற்றி அதனை அவரது பேரவையில் அரங்கேற்றி, அப்பிரபுவை இன்புறுத்தினர். அப்பிரபந்தத்தின் செய்யுள்களில் ஒன்று அடியில் வருமாறு:—

"பதிநோக்கி யன்னையைத் தண்டனிட் டேனெனும் பாங்கியரை
எதிர்நோக்கி நின்று தழுவுகின் றேனெனு மென்றுபொன்னி
நதிநோக்கி வாழு நவபுதுச் சேரிநன் னுட்டிலென்றன்
விதிநோக்கி காளைபின் மேவுகின் றேனெனும் வேதியரே" (94)

இங்ஙனம் புலமையால் கூத்தரை உயரச்செய்தவன் புதுவை மகோபகாரி காங்கேயன் என்பதற்கு அடியில்வரும் "சோழ மண்டல சதக"மும், அதன் மேற்கோட் செய்யுளும் உதாரணங்களாகக் காணப்படுகின்றன. அவை வருமாறு:—

"கோலா கலமன் னரிலவன்போற் கொடுத்தே புகழுங் கொண்டாரார்
மேலார் கவுடப் புலவனெனும் விழுப்பேர் கூத்தன் முழுப்பேராய்
நாலா யிரக்கோ வையும்புனைய நவில்கென் றிசைத்து நாட்டுபுகழ்
மாலா மெனுங்காங் கையன்வாழ்வு வளஞ்சேர் சோழ மண்டலமே"

"புதுவைச் சடையன் பொருந்து சங்கரனுக்
குதவித் தொழில்புரி யொட்டக் கூத்தனைக்
கவிக்களி றுகைக்கும் கவிராக்ஷ தனெனப்
புவிக்குயர் கவுடப் புலவனு மாக்கி
வேறுமங் கலநாள் வியந்துகாங் கயன்மேற்
கூறுநா லாயிரக் கோவைகொண் டுயர்ந்தோன்."

'கௌடம்' என்பது ஒருவகைக் கவிமார்க்கம். அது பொருள் புலப்படத் தொடுப்பதினும் சொல்வளம்படத் தொடுப்பதே சிறப்பெனக் கருதுவதாம். 'இடுக்கட் புண்படு', 'பத்துக்கொண்டன' 'விக்காவுக்கு' என்பன இக்கௌட நெறிப்பாடல்களே.

தமிழ் நாவலர் சரிதையில், "சரஸ்வதி தம்பலங் கோடுக் கக் கவிதையுண்டாகிய கூத்த முதலியார்" என்ற தலைக் குறிப்புக் காணப்படுவதுகொண்டு யாரும் அதன் வரலாறு அறிய முற்படுவர். அவ்வரலாற்றின் விளக்கம் "வாணி யருளும்—வரகவி பாட வாய்த்ததும்" என்ற தலையங்கத்தின் கீழ்க் காண்க.

கூத்தருக்குக் கல்வி யெய்தியதும், கவிபாட வாய்த்ததும், இங்ஙனமாகக் கூத்தர் சரிதம் சிலவற்றில், இவருக்குக் கலைமக ளார் 'கனதனப்பாலருளி' 'சகலகல்லா நிலயம்' என்ற சுவடியொன்றும் கையீற்றர அதனால் புலமையெய்தி வரகவி யாய்ச் சிறந்தாரென்று காணப்படுகின்றது. இது மேற்குறித்த வற்றோடு முரண்படுகின்றது. அன்றியும், அவைகளில் இச் செய்திக்குரிய ஆதாரங்களும் காட்டப்படவில்லை. உண்மை வரலாற்றுக்கு உற்ற ஆதாரம் காட்டப்படவேண்டுவ தவசியம். இல்லையாயின், அறிஞர் அங்கீகரிக்கத் துணியார். பட்சபாத மின்றி உண்மை வரலாறு எழுதுவோர் இயற்கைமுரண், அபூதவருணனை, அலங்கார ரூபகம் இவைகளை விடுத்துக் கல்வியுடையாரும், ஆராய்ச்சியாளரும் ஏப்புமுறையில், சுருதி யுக்தியனுபவங்கட்குப் பொருந்த விஷயங்களை ஆராய்ந்தே எழுதவேண்டும். அதுதான் சரித்திர முறைக்கும், இக்கால நிலைமைக்கும் ஏற்றதாகும்.

## வறுமையுற்றதும்—வளவன் வரிசை யளித்ததும்.

இங்ஙனம் கூத்தர் கல்வியறிவும், புலமை உயர்வும் பெற் றச் சிறப்பெய்திய சில காலத்திற்குள், தம்மை அபிமானித் துக் காத்து ஆதரவை புரிந்து உயரச் செய்த பெருநிலக் கிழ வரும், வேளாண் செல்வரும், மகோபகாரியுமாகிய 'காங்கேயன்'

இம்மண்ணுலக வாழ்வை நீத்து விண்ணுலகெய்தினர். தமது கல்வியுயர்வுக்கும், புலமை மேம்பாட்டிற்கும் உறுதுணையும் உபகாரியுமாயிருந்த பிரபு, திடீரென உயிர் நீத்தமைக்கு கூத்தர் ஆற்றாது சித்தம் நொந்து, மிகவும் வருந்திச் செய்வதறியாராய் மனத்தளர்வுற்றனர். தருணமறிந்து வறுமை நோய் இவரைச் சட்டெனத் தொடர்ந்து பீடித்தது. குடும்பத் துன்பம் இவரைக் கொடுமையாய் வருத்திற்று. புலவர் பெருமக்களை நல்குரவணுகி இங்ஙனம் நலியச் செய்வது அவர் தம் கவியருமையும், கதித்த பெருமையும், உலகினர் நன்றாக உணர்தற் பொருட்டுப் போலும். மிடி என்னும் தீயிலே யிட்டுப் பொன் போலும் நன்மக்களை ஆராய்ந்து தெரிதல் அருட்பெருஞ் செல்வன் திருவுளப் பான்மையோ? திருவேறு தெள்ளியராதலும் வேறு என்ற நியதியை அகிலத்தோர் அறியும் பொருட்டோ? மற்றும் யாதோ? அறிகிலேம். மிடியின் இடிபட்டார் யாரே மனந்தளரார்? அதிலும் வறுமையே வந்தறியாத வண்டமிழ் வாணராகிய கூத்தருக்கு வறுமை வந்து துன்புறுத்தித் துயர் செய்யுமாயின், அத்துயர் சொல்லுந் தரத்ததோ?

பெரும் புலவர்களைப் பீடித்துப் பெரிதும் அலைத்துத் துன்புறச் செய்யும் நல்குரவு, தமிழ் நாட்டுத் தண்டமிழ் வாணர்களோடு நில்லாது, கடலுக்குப் பன்னூறு மைல்களுக்கப்பாலுள்ள மேனாட்டு ஆங்கிலப் புலவர்களையும் வாதித்திருப்பதாக அறியப்படுகிறது. அவருள், 'கோல்ட் ஸ்மித்' (Gold Smith) என்னும் ஆங்கிலக் கவி, கடன்காரரால் துன்புற்றதும்; 'ஷெரிடன்' (Sheridon) என்னும் கவி சிரேஷ்டர், பெருங்கடனுள் சிக்கிக் கடன் தீர்க்க வகையின்றி, மானத்திற்கஞ்சி யாருமறியாது மறைந்துகொண்டு நடு நிசியில் வீட்டுக்கு

வந்து; வைகறையாமத்தில் எழுந்து வெளியில் சென்று காந்து வாழ்ந்ததும் ; 'ஸர் வால்டர் ஸ்காட்' (Sir Walter Scott) என்னும் பெரும்புலவர், பட்டகடன் தீருமளவும் எழுதுகோலும் கையுமா யிருந்துவந்ததும் யாரே அறியாதார் ? இராமாயணம் என்னும் தீஞ்சுவை அமிழ்தைத் தமிழுலகுக் களித்த செந்தமிழ்ச் சிங்கவேறாகிய 'கம்பர்பெருமான்' வறுமை வாய்ப்பட்டு வருந்திய வரலாறு தமிழ்நாடறிந்த செய்தியன்றோ. கம்பநாடர், கடன்படுவோர் அடையும் துன்பத்தை நன் குணர்ந்தவரென்பது :—

"விடங்கொண்ட மீனைப் போலும் வெந்தழல் மெழுகு போலும்
படங்கொண்ட பாந்தள் வாயிற் பற்றிய தேரை போலும்
திடங்கொண்ட ராம பாணஞ் செருக்களத் துற்ற போழ்து
கடங்கொண்டார் நெஞ்சம் போலக் கலங்கினன் இலங்கை
[வேந்தன்"

எனத் தாம் பாடிய இராமாயணத்தில் இடமறிந்து பொருத்திப் பாடிய இனிய செய்யுளால் நன்கு உணரப்படும்.

இவ்வாறு வறுமைவாய்ப்பட்ட கூத்தர், அவ்வாதை நீங்குதற்கு யாது செய்வதெனப் பலவாறு எண்ணமிட்டனர். முடிவாக அடியில்வருமாறு செய்வதுதான் நலமென்ற தீர்மானத்திற்கு வந்தனர். அஃதாது—" கல்விச்செல்வம் பொன்மலரையொக்கும். பொருட்செல்வம் அதன் இனிய மணத்தை நிகர்க்கும். ஆகையால், கல்வியுடைமையோடு பொருளுடைமையும் இவ்வுலக வாழ்க்கைக்கு இன்றியமையாததே. ஆனதால், இதனிடத்து நாம் மிகக் கவனஞ் செலுத்தவேண்டும். இன்றேல் வாழ்வில்லை. செல்வப்பொருளை நாம் எளிதில் இனிதடைவதற்குக் கல்லாத கயவரிடத்தும், இறப்போர் இன்முகம் பாரா

மல் செல்வர்க்கே செம்பொன்னளித்துச் சிறப்புச்செய்யும் செல்வரிடத்தும் செல்லாமல், புலவர் பெருமக்களது நன் பொருளமைந்த இனியபாக்களை இன்பமுறச் செவியாரப் பருகி, அவரது கவியருமைக்கும், கற்பனை யமைந்த விற்பன விவேகத்திற்கும் காதலித்து, அவர்தந் தகுதிக்கேற்பப் பெரும் பொருள்களைப் பிடிபிடியாய் அள்ளிக்கொடுக்கும் வள்ளன்மை படைத்த பிரபுவை ஆய்ந்துதேடி அவர் பக்கத்திற் சென்று அவ ரது உயர்நலங்களையும், உண்மைக் குணங்களையும், உள்ளபடி உயர்த்திப்பாடி அவரால் அன்புடன் தரும் பெரும் பரிசைப் பெற்றுப் பெருமையாக வாழவேண்டு மென்பதே."

இங்ஙனம் புலவர் கருதியதற் கிணங்க அக்காலத்தில் புல வர் புகழ்ந்து பாடும் சீரும், சிறப்பும், செல்வமும் உடையவ னைச், சோழநாட்டு அரசுரிமையைக் கைக்கொண்டு, நன் னீதிக்கே ஓர் நாயகமாய்ச் செங்கோலோச்சியவன் 'விக்கிரம சோழனே'. யாவன். இவ்வேந்தர்பிரானைக் கண்டு தமது புலமையைக் காட்டி, வறுமை போக்கி, இனிமை யெய்தக் கருதிய கூத்தர் நன்னாளொன்றில் புதுவை நீங்கிப் பிரயாணப் பட்டு உறையூரடைந்து, அரண்மனை யணுகி, அரசர்பெரு மான் அரியாசனத்திருக்கச் சென்று கண்டனர்.

கூத்தர் பெயரையும், அவரது அரிய புலமையையும் முன்னரே விக்கிரம சோழன் கேள்வியால் நன்கு உணர்ந் திருந்தானாகலின், புலவர் வரவுக்கு உளமுவந்து, நல்வர வேற்று, இருக்கை நல்கி, இன்சொல் மொழிந்து, அருமை மிகப் பாராட்டிப் பெரிதும் உபசரித்தனன். அதுகண்ட கூத் தர், அவனது அன்புடைமைக்கு அகமிக மகிழ்ந்து, தமது திருந்திய நாவால் சீரிய தமது பெரும் புலமையின் அருந்

திறமையை இன்பநலம் ஊற்றெடுப்ப, அறிவிற்குணவாய்ச் செவிக்கின்பம் பயப்ப, அழகுறப்புகன்று சோழர்பிரானை ஆனந்த வெள்ளத்தில் ஆழ்த்தினர். கல்வியறிவும், புலமையுணர்வும், கொடைக்குணமும், தகுதியறிந்து சன்மானிக்கும் தன்மையும் ஒருங்கே வாய்ந்த விக்கிரமன், புலவரது கல்வித் திறமையையும், கவிபாடும் அருமையையும், கற்பனையையும், விற்பனமும் கதிக்க வாசாம கோசரமாய்ச் சொற்பொழிவு நிகழ்த்தும் வன்மையையும் உணர்ந்து, மிக மகிழ்ந்து, வியந்த சிந்தையனுய்த் தனது தகுதிக்கும், புலவரது பேராற்றலுக்கும் ஏற்பப் பதக்கு நிறை குங்குமம், படுக்கக் கம்பளம், கையிலணிந்துகொள்ள பொற்கங்கணம், காதிலணியக் குண்டலம், ஏறிச்செல்ல யானை, விருதுமுழக்கச் சங்கு, கிளிக்குப் பஞ்சரம், மார்பில் அணிய மாலை ஆகிய இப்பொருள்களை வெகுமதியாக வரிசைப்பட நல்கிச் சிறப்புச் செய்தனன். இது, தமிழ் நாவலர் சரிதையில் "சோழன் வரிசையளித்து விடுத்தபோது கூத்த முதலியார் கூறிய வகுப்பு" என்னும் தலைப்பின் கீழ் :—

"இடுக்கட் புண்படு நிரப்புக் கொண்டுழன்
றிரக்கச் சென்றவின் றெனக்குச் சிங்களந்
திடுக்கிட் டஞ்சும்வெஞ் சினத்துச் செம்பியன்
திருக்கைப் பங்கயஞ் சிறக்கத் தந்தன
படுக்கக் கம்பளம் பதிக்கக் குங்குமம்
பதிக்கக் கங்கணம் பரிக்கக் குஞ்சரங்
கடுக்கக் குண்டலங் கலிக்கச் சங்கினங்
கவிக்குப் பஞ்சரங் கவிக்குத் தொங்கலே"

எனக் காணப்படுகிறது.

"வருத்தமாகிய புண்களைத் தோற்றுவிக்கிற வறுமை மிகக்கொண்டு வருந்தி யாசிக்கச் சென்ற எனக்கு இன்று

சிங்கள தேசம் திடுக்கடைந்து அஞ்சத்தகுந்த கொடுங் கோபத்தையுடைய சோழனது அழகிய கைகளாகிய தாமரை, படுக்கக் கம்பளமும், அக்குங்குமம் பதக்கும், பதிந்துகொள்ளக் கங்கணமும், தாங்கிச் சுமப்பதற்கு யானையும், காதிலணியக் குண்டலமும், முழங்குதற்குச் சங்கினமும், என் கவியைச் சொல்லும் கிள்ளைக் கூடும், என் கவிக்கு மாலையும் பெருமை படத் தந்தளித்தது " என்பதாம்.

இதனால் கூத்தர் வறுமையுற்ற செய்தியும், அது நீங்க வளவன் அளித்த பொருள் வரிசையின் சிறப்பும் நன்கு உணரலாகும்.

இவ்விக்கிரம சோழன் கல்வியையும், அது கற்றோரையும் ஆதரிப்பதில் மிக்கானென்பதும், பேரரசனும், பெருங்கொடையாளனென்பது மல்லாமல், மாபெரும் வீரனும், திக்கெலாம் புகழும் செல்வனும் ஆவன். இவன் இத்தகையானென்பது இவனது பல கல் வெட்டுக்களால் அறியப்படுகின்றது. அவற்றில் உதாரணத்திற்கு இதன் கீழ் ஒன்று தருகின்றோம்:—

" பூமாலை மிடைந்து பொன்மாலை திகழப்
பாமாலை மலிந்த பருமணித் திரள்புயத்
திருநில மடந்தையொடு சயமக ளிருப்பக்
கனவரை மார்வந் தனதெனப் பெற்றுத்
திருமக ளொருதனி யிருப்பக் கலைமகள்
சொற்றிறம் புணர்ந்த கற்பின ளாகி
விருப்பொடு நாவகத் திருப்பத் திசைதொறுந்
திகிரியொடு செங்கோல் நடப்ப வகில
புவனமுங் கவிப்பதோர் புதுமதி போல
வெண்குடை மீமிசை நிழற்றக் கருங்கலி
யொழித்துவன் பிலத்திடைக் கிடப்பக் குளத்திடைத்

தெலுங்க வீமன் விலங்கல்மிசை யேறவுங்
கலிங்க பூமியைக் கனலெரி பருகவும்
ஐம்படைப் பருவத்து வெம்படை தாங்கியும்
வேங்கை மண்டலத் தாங்கினி திருந்து
வடதிசை யடிப்படுத் தருளித் தென்றிசைத்
தருமமுந் தானமுந் தழைப்ப
வேதமும் மெய்ம்மையு மாதியுகம் போலத்
தலைத்தலை சிறப்பவந் தருளி வெலற்கரும்
போர்ப்புலி யாணை பார்த்திவர் சூட
நிறைமணி மகுட முறைமையிற் சூடி
மன்னுயிர்க் கெல்லாம் இன்னுயிர்த் தாய்போற்
றண்ணளி பரப்பித் தனித்தனி பார்த்து
மண்முழுதுங் களிப்ப மனுநெறி வளர்த்துத்தன்
கோயிற் கொற்ற வாசற் புறத்து
மணிநா வொடுங்க முரசுகள் முழங்க
விசயமும் புகழு மேன்மே லோங்க
செழியர்வெஞ் சுரம்புகச் சேரலர் கடற்புக
அழிதரு சிங்கள ரஞ்சினெஞ் சலமரக்
கங்கர் திறையிடக் கன்னடர் வென்னிட
கொங்கர் ஒதுங்கக் கொங்கணர் சாயமற்
றெத்திசை மன்னருந் தத்தமக் கரணெனத்
திருமலர்ச் சேவடி யுரிமையி னிறைஞ்சச்
செம்பொன் வீர சிங்கா சனத்துத்
திரிபுவன முழுதுடையா ளொடும்வீற் றிருந்தருளிய
கோப்பர கேசரி வன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள்
விக்கிரம சோழ தேவர்."

## வாணியருளும்—வரகவிபாட வாய்த்ததும்.

விக்கிரம சோழன் வியந்தளித்த பெருவரிசையால் கூத்தர், வறுமை நீங்கிப் பெருங்களிப் பெய்தினர். அது முதல்

இவருக்கு நல்வாழ்வு நலனுறத் தொடங்கிற்று. ஒருவருக்கு நற்காலம் கைகூடி நன்மை செய்யுமாயின், அது மேன்மேலும் பெருகிப் பெருஞ்சிறப்பையே செய்யும்; செய்விக்கும். இஃது ஆகூழின் அருஞ்செயல். இச்செயலுக் கேற்பக் கூத்தருக்கு விரைவில் நாமகளார் நல்லருளும் சிறக்க வாய்த்தது. திரு மடந்தை ஆம்போது எவையும் ஆமன்றோ?

கூத்தர் புதுவைக் காங்கேயனால் கல்வி கற்பிக்கப்பட்டுப் பெரும்புலமை யெய்தி, 'கௌடப்புலவன்,' 'கவிராக்ஷதன்' என்ற சிறப்புப் பெயர்களைப் பெற்றுக் கவிபாடும் வல்லவராயி னார் என்ற விஷயம் மேலே கூறினோம். இனி, இவர் வரகவி பாடுவதில் வல்லவராக விரும்பி வாணிதேவியை வந்திக்க, இவர் வந்திப்புக்கு சரசுவதிதேவி அருள் சுரந்து எதிர்தோன்றி வித் தைக்குரிய தம்பலம் உதவ, அதனால் கவிபாடும் வன்மை வாய்க் கப்பெற்றாரென்ற செய்தி கூத்தனூர் முதலிய விடங்களில் மிகுதியாக வழங்கப்படுகின்றன. அவ்வரலாறு அடியில் வரு மாறு:—

"தமிழ் வளர்த்தல், காத்தல், ஆதரித்தல், புலவர் களுக்கு வேண்டும் பரிசும், வரிசையும் அளித்து இலக்கியம் பெருக்குதல் முதலிய நலன்களில் பெருவிருப்புடைய விக்கிரம சோழன், கூத்தருக்கு வரிசை யளித்தபின், அவர் அருந்தமிழ்ப் புலமைக்கு ஆசைப்பட்டுத் தனது ஆஸ்தானத்தின் தலைமைப் புலவராய் இருக்குமாறு வேண்டி அமர்த்திக்கொண்டு தமிழ்க் கலா விநோதனை விருந்து வந்தனன். இங்ஙனம் சில காலம் சென்றபின், கூத்தர் வரகவிபாடும் வன்மைபெற விரும்பி; வாணியை நோற்பதற்கு நினைந்து அக்கருத்தை அரசர்பிரா னிடத்து அறிவித்தனர். அவனும் அவ்வாறே நோற்கும்படி அனுமதித்தனன். கூத்தர் அதற்குத் தக்கவிடம் எதுவென

ஆராய்ந்தபோது, தற்காலம் மாயூரத்திற்கும், திருவாரூருக்கும் செல்லும் தென்னிந்தியா புகைரதப்பாதையில் பூந்தோட்டம் என்னும் ரயிலடிக்கு மேற்கில் திருவீழிமிழலைக்குச் செல்லும் வழியில் (அரிசொலவந்த நதி) அரிசிலாறு என்ற நதிக்கரையின் தென்பால் கமலாட்சியம்பாள் சமேதராய்க் கோயில் கொண்டருளும் 'அரிநாதேசுரமே' சிறந்ததலம் எனத் தெரிந்தனர். அத்தலத்தைக் கூத்தர் விரைந்தடைந்து தட்சிண வாகினியாய் ஓடும் நதியில் நீராடி, அங்குள்ள மகாகணபதியை வணங்கி வித்தை விருப்புவோர் கைக்கொள்ள வேண்டிய விதி முறையைக் கைக்கொண்டு, அமைதியாயிருந்து வரகவிபாடும் வன்மையருளும்படி வாணிதேவியை நோக்கி அருந்தவம் புரிந்தனர்.

இவருக்கு முன்னரேயே அத்தலத்தில் கும்பகோணவாசியும், பிராமணோத்தமரும், சதுர் சாஸ்திரப் பண்டிதருமாகிய சாரங்கபாணி தீக்ஷதரின் தவப்புதல்வன் புருஷோத்தமன் என்பவன் தக்கவயதடைந்தும் கல்வியறிவு பெறாத காரணத்தால் பெற்றோர்களால் புறக்கணிக்கப்பட அவன் மிகவருந்தி ஒருவாறு தேறி ஸ்ரீ மகாவிஷ்ணுவைப் பணிந்து உறுதிபெற்ற வைராக்கியத்துடன் அக்கடவுளை நோக்கி, 'அன்று அறுபது நாழிகைக்குள் தன்னை வித்தியாபாரங்கதனாகச் செய்யாதிருந்தால் தனது ஆருயிரை அத்திருமாலின் திருவடியிலேயே அர்ப்பணம் செய்து விடுவதாகக் கடுமையான சபதஞ் செய்து கொண்டு தியானபரனாகி இருந்தனன்.' அவனது கருத்தையும், கடுமையான சபதத்தையும் அறிந்த கமலக் கண்ணன், புருஷோத்தமனது தியான நிலையில் தோன்றி, 'அன்பனே! உன்னுடைய விருப்பத்தை யுணர்ந்தோம். நீ கோரும் வரம் தவஞ்செய்து பெறவேண்டுமே யன்றிப் பிடிவாத குணத்தாற்

பெறுவதன்று. ஆனதால், நீ வாணியை நோக்கித் தவஞ்செய் வாயாக. உனது தவத்திற்கு இரங்கிச் சகலகலாவல்லியாகிய சரசுவதிதேவி வந்து அருள்பாலிப்பள்' என்று கூறி மறைந் தனன். புருஷோத்தமன் அரியின் ஆணைப்படியே கலைமகளாரை நோக்கிக் கடுந்தவம் செய்துகொண் டிருந்தனன்.

இங்ஙனம் இருவரும் அத்தலத்தில் நெடுநாள் அருந் தவஞ் செய்துகொண் டிருக்கையில், நாவின் கிழத்தி அவர்கள் தவத்திற்குவந்து அருள் சுரக்க நினைந்து, மானிட வடிவு கொண்டு, கன்னியாரூபத்தில், மேற்குறித்த அரிசொலவந்த நதியின் பிரதேசத்தில் அருந்தவம்புரியும் புருஷோத்தமன் முன் தமது திருவுருவத்தைத் தோற்றுவித்து 'ஹே! புரு ஷோத்தமா! உன் தவத்திற்கிரங்கி வரமளிக்க வந்தோம். உன் வாயைத்திற! நமது வாயின் தம்பலத்தை உமிழ்கின் றோம். அதனை நீ விழுங்குவாயாயின், நீ விரும்பியவாறு வித்யாபாரங்கதனாகத் திகழ்வாய்' என்று தமது செம்பவளவாய் திறந்து செப்பினள். புருஷோத்தமன் போகூழாலும், தவக் குறைவாலும் அங்கு மானிடவடிவில் பெண் கோலத்தில் தன் முன் வந்திருப்பவள் நான்முகன் தேவியாகிய நாவின் கிழத்தி யென்றுணராது, நல்லொழுக்கந் தவறிய நடையுடைய நங்கை யொருத்தியெனப் பிழைபடக் கருதி, கடுத்தமுகத்தில் சினக் குறிப்பில் நீ யார்? * தாசியைப்போல் தோன்றுகிறாய்; என் எதிரில் நில்லாதே. விரைந்தப்புறம் விலகுதி' என்று கூறி மீண் டும் தவத்தின்மீது நாட்டங்கொண்டனன்.

அல்லியந்தேவி உடன் அவனைவிட்டு நீங்கி, அப்பிரதே சத்தின் மற்றோரிடத்தில் தமது பேரருளைநாடிப் பெருந்

* தொண்டரின் அன்பின்திறத்தைச் சோதிக்க இவ்வாறு தெய்வங்கள் பலவித கோலம்பூண்டு காட்சியளிப்பது நம்மில் கண்டு வரும் பண்டை வழக்கு.

தவஞ் செய்துகொண்டிருந்த கூத்தருக்குத் தரிசனந்தந்து, தமது திருவாய் மலர்திறந்து 'ஹே! கூத்த! நின் தவத்திற் குவந்தோம். நின் வாயைத்திற! நமது வாய்த்தம்பலத்தை உமிழ் கின்றோம். விழுங்கிவிடின் நினக்கு வரகவிபாடும் வல்லமை வாய்க்கும்' என்றனள். ஆகூழாலும், தவநலத்தாலும் கூத் தருக்கு வந்தவர் விஷயத்தில் விகற்பமும் அருவையும் தோன்றா மல், வித்தைக்குரிய நாமகளே இக்கோலம் புனைந்து நம் மெதிரேதோன்றி அநுக்கிரகிக்க வந்திருக்கின்றனள் என்ற உணர்ச்சிதோன்ற க்ஷட்சணமே வாய்திறந்தனர். தேவியார், வித்தைக்குரிய தம்பலத்தை, முன்னம் காளமேகப்புலவர் வாயில் திருவானைக்கா † அகிலாண்டநாயகியார் உமிழ்ந்தது போலக் கூத்தர் வாயிலுமிழ்ந்து, நல்லருள் பாலித்தனள். அப் பொழுதே கூத்தருக்கு வாணியின் தரிசனபலத்தாலும், அருள் நோக்கத்தாலும், ஆசீர்வாதப் பயனாலும் முன்னிலும் பேரறி வும், பெருகிய ஞானமும் உண்டாயின. அருந்தமிழ் மொழியில் புத்தம் புதிய சுவை அவர் நெஞ்சகத்தே அரும்பித் துளிர்த்தன. அளவிலா வானந்தமடைந்த கூத் தர், எழுந்து அஞ்சலியஸ்தராய் நின்று, மிக்க விநயமாய்ச் செழுமலர்த் தவிசுறையும் தேவியே! எளியேன் வேண்டு தலுக்கிரங்கி, என்னால் இங்கு எடுப்பிக்கப்படும் ஆலயத்தில் எழுந்தருளிப் பிரதிஷ்டைபெற்று, யாவரும் வணங்கி விரும்பி யன கைவரப்பெற்று உய்யுமாறு அநுக்கிரகம் செய்யவேண்டு மென்ற வேண்ட, தேவியும் கூத்தரின் அன்பான வேண்டு கோட்கு மகிழ்ந்து, அங்ஙனமே ஆலயங்கொண்டருள்வதாகக்

---

† ஆசுகவி காளமேகப்புலவரும் இப்படியே அகிலாண்டநாயகி யாரருளிய தம்பலம்பெற்று வரகவியாய் விளங்கினாரென்பது அவரது சரிதத்தால் அறியப்படுகிறது.

கூறி மறைந்தனள். கூத்தர் விரைவில் அங்கு ஆலயம் எடுப்பித்து அவ்வாலயத்தில் வாணிதேவியை வேதவிதிப்படி பிரதிஷ்டை செய்து திருவிழாக் கொண்டாடினர்" என்பதே.*

* இங்குக் குறிக்கப்பட்ட சரசுவதி ஆலயம் கூத்தனூரில் இன்றுமிருக்கிறது. இதுமிகப் பழமையான ஆலயமென்பது அதன் தோற்றத்தாலறியப்படும். மேற்குறித்த வரலாற்றால் இவ்வாலயம் கூத்தனாலேயேஎடுப்பிக்கப்பட்டிருக்கவேண்டுமென்றேகருதுகின்றோம். பொது மக்களும் அப்படியே கருதுகின்றனர். வழக்கமுமிருந்து கொண்டிருக்கிறது. ஆண்டுதோறும் நடைபெறும் நவராத்திரி விழாவும், அதுபற்றி வெளிவரும் விழாப் பத்திரிகையும் கூத்தராலே கோவில் நிர்மாணிக்கப்பட்டு விழாவும் தொடங்கியதென்று கூறுகின்றன. நாமும் சுபகிருது ஆண்டு ஆவணித் திங்கள் 17-ம் நாள் கும்பகோணம் வைதிக வர்த்தனி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்ட கூத்தனூர் நவராத்திரி உற்சவப் பத்திரிகையைப் பார்த்தே மேற்குறித்த விஷயத்தை எழுதினோம். ஆனால், செந்தமிழ்ப் பத்திரிகை தொகுதி 25 பகுதி 11-ல் 'கூத்தநும்-கல்வெட்டும்' என்ற வியாசத்தில் 345-348-ஆம் பக்கங்களில் இவ்வாலயம் கூத்தனூர் பேரன் கவிப் பெருமாள் வரதக் கூத்தனால் கட்டப்பட்டதெனச் சாஸன ஆதாரங்கண்டு திரு சோமசுந்தர தேசிகர் அவர்கள்எழுதுகின்றனர். அது உண்மையாயிருக்கலாம். ஆயின், அவர்களே அச்சாஸனம் பழைய எழுத்துக்களைப்போற் காணப்படவில்லை; இக்காலத்து எழுத்துக்களைப்போற் காணப்படுகின்றன என்று ஐயமுற்றுக் கூறுகின்றனர். அவர்கள் அங்ஙனம் ஐயமுறுவதால், பாட்டனார் கட்டிய கோவிலைப் பேரன் பழுது பார்த்துத் தன் பெயரால் கல்வெட்டி யிருக்கலாமென நாம் கருதுவதால் தவறுதலிராதென நினைக்கிறோம். கூத்தனூர் சரசுவதி ஆலயம் முழுதும் வளைவுகள் போட்ட செங்கற் கட்டிடமேயன்றிக் கருங்கல் கட்டடமல்ல. சாஸனம் கோவிற் சுவற்றில் வெட்டப்படவுமில்லை. அங்ஙனமிருப்பின் மறுக்க முடியாது. ஆனால் இச்சாஸனம் சரசுவதி பீடத்தில் வெட்டப்பட்ட டிருக்கிறது. அதனைப் பிற்காலத்

சீகாழித் தோணியப்பர் திருவருட்கு அன்பராகிய திருஞான சம்பந்தர் மூவாண்டில் பெரிய நாயகியாரின் அருந் தனப் பாலுண்டு தமிழ் மறையோதும் புலமை பெற்றனரென் றும், திரு ஆனைக்காவில் சுயம்பாகியாயிருந்த விப்பிரற்கு அகிலாண்ட நாயகியார் தம்பலமளிக்க, ஆசுகவி காளமேக மெனப் பெயர் சிறந்தனரென்றும், அண்ணாமலையிலிருந்த அருணகிரிநாதருக்கு அறுமுகவேள் எதிர்தோன்றி நாவில்

---

திலும் வெட்டப்பட்டதாக இருந்தாலு மிருக்கலாம். கோவில் கட்ட வேண்டிய அவசரம் கூத்தருக்கு ஏற்பட வேண்டியதேயன்றிப் போ ணூர்க்கு ஏற்பட அவ்வளவு அவசரமில்லை. மேலும் அக் கல்வெட்டை நாமும் நேரில் படித்துப் பார்த்தோம். அதில், 3, 4-ம் வரிகள்,

3. காணியுடையமலரி உடையார்
5. இந்தக் கவிச் சக்கரவர்த்திகள் போனார்
கவிப் பெருமாளான வொத்தக் கூத்தர்
ஸ்வத்தி ஸ்ரீ. தி தேவன் கையெழுத்து

என்றிருக்கின்றன. திரு. தேசிகரவர்கள், வொத்தக் கூத்தர் (ஒட் டக் கூத்தர்) என்றிருப்பதை வரதக் கூத்தன் எனக் கருதி யிருக்க லாமெனக் கருதுகின்றோம். நாம் கருதுவ துண்மையாயின், அவ் வாலயம் கூத்தரால் எடுப்பிக்கப்பட்டதென்பது உறுதிப்படும். நாம் கண்ட அந்தச் சாஸனத்தை இதன்கீழ் யாவருங் காணுமாறு வெளி யிட்டிருக்கிறோம். அறிஞர்கள் நடுநின்று உண்மை யுணர்ந்து உறுதி கொள்வாராக.

கல்வெட்டிலுள்ளபடி.

| |
|---|
| காணியுடைய மலரியுடையார் |
| இந்தககவி சககவததகாபொ |
| ஞாவிப பொளளன வொததக கூத்தா |
| ஸ்வததி ஸ்ரீ. தி தேவின் கையெழுத்து |



கூத்தனூர் சரஸ்வதீ ஆலயம்.

பீஜாட்சரம் பொறிக்கத் திருப்புகழ் பாடினுரென்றும், துறை யூர் பொய்யாமொழிப் புலவருக்குக் காளிகாதேவி அநுக்கிர கிக்க மெய்க்கவி பாடினுரென்றும் நம்முள் ஒப்பி வழங்குவன போலக் கூத்தருக்கும் அவர் உபாசித்துவந்த உபாசனு மூர்த்த மாகிய சாரதாதேவி, அவர் தம் மெய்பன்புக் குவந்து, அவர் முன்தோன்றித் தரிசனந் தந்து தம்பல மளித்து வரகவியாய் விளங்கிப் புகழ்பெறுமாறு தண்ணருள் பாலித்தன ளென்றும், அதனுல் வரகவியாய் விளங்கினுரென்றும் கொள்க.

இச்சம்பவம் உண்மையென்பதற்குச் சான்ருக சுமார் 150 வருடங்கட்கு முன் தொகுத்த "தமிழ் நாவலர் சரிதை" என்ற நூலில், "சரசுவதி தம்பலங் கோடுக்கக் கவிதை யுண்டாகிய கூத்த முதலியார்' என்ற தலைப்புக் காணப்படுவது கவனித்தற் குரியது.

ஒரு துறையில் சிறப்பான வல்லமை வாய்ந்த ஒருவரை தெய்வப் பிறவி, வரகவி என்று கூறுவது நமது முன்னேர்க ளது வழக்கம். உடையாலும், உணவாலும், தெய்வீகக் கடமையாலும் உலகலெலாம் ஆண்டவன் வடிவமாக நோக்கும் நம்மவர்கட்கு, வாணி தேவியால் கூத்தர் வரகவியாஞரென்பது அதிசயமாகத் தோன்ருு அத்யாத்ம வழியில் அதிகம் ஈடு படாதவரும், அவதாரத்தில் அசிரத்தை கொண்டவருமான நவீன ஆங்கில நாகரிகர்கட்கு இது வியப்பைத் தரும். "எதெது விசேஷ குணத்துடன் விளங்குகிறதோ, அததில் நமது அம்சத்தை அறிவாய்" எனக் காண்டீபனுக்கு அறி வித்த கண்ணபிரான் வாக்கில் பூர்ண நம்பிக்கை கொண்ட வர்கட்குக் கூத்தர் வரகவியென்பதை ஆதரிக்க யாது தடை? வரகவியென்பதற்கு சாபாநுக்கிரக சாமர்த்தியம் என்பது பொருள். 'தெய்வஞ் சாலாப் புலமையில்லை' யென்று கூறும்

ஆன்றோர் அறவுரை புலவரது தெய்வீகத்தன்மையை நிலை நாட்டுகிறது.

## ஆசிரிய பதவியும்—அதிகாரப் பட்டமும்.

புலமைப் பெருக்குடன் சாபானுக்கிரக சாமர்த்தியமும் பெற்றுத் திரும்பிய கூத்தப்புலவரை விக்கிரம சோழன் எதிர் கொண்டழைத்துத் தகுதிக் கேற்றபடிப் போதிய உபசாரம் புரிந்து எப்பொழுதும் தனது அரியாசனத்தருகே அமர்ந் திருக்கும்படி வேண்டினன். விக்கிரமன் தமிழறிவுடையவனா தால், புலவரது புலமையாற்றல், வித்துவ சமர்த்தி, சொல் வன்மை, கற்பனை நிறைவு, விற்பன விவேகம் முதலியவை கட்கு மிகவியந்து, மேலும் மேலும் கொண்டாடித் தக்க சன் மானஞ்செய்து மகிழ்ந்தனன். இங்ஙனம் சிலகாலம் புலவரு டன் *கலாவிநோதனாயிருந்து வருகையில், இரண்டாங் குலோத் துங்கன் கல்விகற்கும் பருவமடைந்தனன். அஃதுணர்ந்த விக்கிரமன் தன் புதல்வன் குலோத்துங்கனைக் கூத்தரிடத்துக் கல்விகற்கும்படி நன்னாளொன்றில் நியமித்தனன். குமார குலோத்துங்கன், ஆசிரியராணைக் கடங்கி அவர் மனமுவக்க நடந்து அருந்தமிழ் பயின்று வந்தனன். ஆசிரியர் செந் தமிழ்ப் புலமையும், தெய்வவருளும் சிறக்கப்பெற்றவரானதால்,

---

* புலவர்களுடன் அரசர்கள் கலாவிநோதரா யிருந்து வந்த னர்களென்பதற்குக்

"கலையினொடுங் கவிவாணர் கவியினொடு
மிசையினொடுங் காதன்மாதர்
—னொடு மனுநீதி முறையினொடு
மறையினொடும்"

என்ற கலிங்கத்துப்பரணி காண்க.

மாணவனாகிய குலோத்துங்கனுக்குத் திறமையாகத் தமிழறி வுறுத்தி அருந்தமிழில் பெருங்காதல்கொளச் செய்தனர். இத் தருணத்தில் விக்கிரமசோழன் மண்ணாடு நீங்கிப் பொன்னாடு புகுந்தனன். இளவரசுப்பட்டம் தமது அருமைச் சீடனுக்கு வாய்த்தது. குலோத்துங்கன் இளவரசுப்பட்டம் எய்தியும் கல்வியிலுள்ள காதலால், பயில்வதை விடாது முறையாகப் பாடங்கேட்டு வந்தனன். ஆசிரியரிடத்துத் தனக்குள்ள அன் பின் மிகுதிக்கும், அவரிடத்து விளங்கும் மெய்ப்புலமைக்கும், தகுதிக்கும் மகிழ்ச்சிமீக் கூர்ந்து அவரைத் தனது சமஸ் தானத்தை நாடிக் கவிபாடிப் பரிசுபெற்று வருகின்ற இயல்—இசை—நாடகம் என்னும் முத்தமிழுணர்ந்த வித்தகப் புலவர் களுடைய கல்விகளைப் பரிசோதிக்கின்ற அதிகாரமாகிய முற்காலத்திருந்த சமஸ்தான வித்துவான் என்னும் உத்தியோ கப் பதவியினும் உயர்ந்த "கவிச்சக்கரவர்த்தி"ப் பட்டம் அளித்து, அவருக்கு வேண்டிய செல்வம், வாகனம் முதலிய வைகளை வேணமட்டுந் தந்து, தனது தந்தையினும் அதிகமாக மதித்துத்தானும் அவர் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து அவரைப் பெரு மதிப்புடன் கொண்டாடி வந்தனன். பாவலரும், நாவல ரும் அவரைப் பணிந்து கொண்டாடித் தணிந்து மன்றாடினர். கல்வி மதிப்புடன் செல்வப்பொருளும் நாளு மதிகரித்தன.

"பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் பாடழிந்து
அல்ல லுழப்ப ரறிதிரேல்—தொல்சிறப்பின்
நாவின் கிழத்தி யுறைதலாற் சேராளே
பூவின் கிழத்தி புலர்ந்து" நாலடியார்.

என்ற செய்யுட் கருத்திற்கிணங்கக் கல்வியிருந்தால் செல்வ மில்லாமலும், செல்வமிருந்தால் கல்வியில்லாமலுமான வழக்க மிருப்பினும், அவ்விதிக்கு விலக்காக நமது புலவரிடம் இரு

வகைப் பொருளும் அமைந்து சிறப்புற்றிருந்தன. என்னே! தமிழ் கற்றதனால் வந்த கனப்பெருமை! இப்பெருமையும் செல்வமும் கல்வியும் நந்தமிழ் நாட்டுப்புலவர்கட்கு மீண்டு மொருக்கால் என்று வருமோ?

இங்ஙனம் கல்விச் செல்வமும், பொருட்செல்வமும் ஒருங்கே பெற்றுச் சிறந்தவன் "ஜீவக சிந்தாமணியின்" கதா நாயகனான ஜீவகன் என்பது,

"நாவீற் றிருந்த புலமா மகளொடு நன்பொற்
பூவீற் றிருந்த திருமாமகள் புல்லநாளும்
பாவீற் றிருந்த கலைபாரறச் சென்ற கேள்விக்கோ"

என்ற சிந்தாமணிச் செய்யுளால் அறியப்படுகிறது. அப்பெருமையை நமது கூத்தரும் பெற்றிருந்தா ரென்னின், இவரது கல்வி எத்துணை மேம்பட்டிருந்ததாகக் காண்கின்றது. இதனை

"எத்தனை புலவரோமுன் னிறைவரை வயஞ்செய்துற்று
ரத்தனை பேருளாரு மருந்தமி ழொட்டக் கூத்தன்
ஒத்தவர்........................ தில்லையில்லை
யித்தனை யதிட்ட மன்னேற் கிசைந்தமை யேற்றந்தானே."

என்ற 'புலவர் புராண'ச் செய்யுள் வலியுறுத்தா நின்றது.

## முடிசூட்டுதலும்—நன்றிபாராட்டுதலும்.

கூத்தருக்கு மாணவனாக விளங்கிய குலோத்துங்கன், உபயகுலோத்தமனாகிய அபயன் பேரனும், விக்கிரம சோழன் மகனுமாகிய குமார குலோத்துங்கனே யாவன். இவனே, 'இரண்டாங் குலோத்துங்கன்' 'சென்னி அநபாயன்' எனவும் கூறுவர். இவனை கூத்தரால் உலாவும், பிள்ளைத் தமிழும், மாலையும் பாடப் பெற்றவன். இது:—

—பாடிய
வெள்ளைக் கவியுலா மாலையொடு மீண்டுமவன்
பிள்ளைத் தமிழ்மாலை பெற்றோனும் ”

எனவரும் சங்கரசோழனுலாவால் அறியப்படும் இவன் காலம் கி. பி. 1135 முதல் 1146 வரையெனக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. இக்காலத்தே விளங்கிய குமார குலோத்துங்கன் தனது இளமைக் காலத்தில் தமிழ் ஆசிரியரிடத்துக் கற்க வேண்டிய கலைகளனைத்தும் முறைப்படிகற்றும், அரசாட்சிக்கு வேண்டிய அம்சங்கள் யாவும் ஐயந்திரிபற வுணர்ந்தும், படைப் பயிற்சியில் மிக்கானுப் தக்கவயதடைந்தனன். ஆளுந்திறமைக் குரிய அருநலங்கள்பலவும் இவனிடத்து ஒருங்கே சிறந்துவிளங் குவது கண்ட அறிஞர்பலரும், இவனை அரியணை யேற்றித் திரு முடிசூட்டிச் செங்கோலளித்துப் பாராளும்படி செய்யவேண்டு மெனச் செப்பினர். அமைச்சர்களும் அவ்விதம் செய்வதே நன் றென்றனர். உடனே முடிசூட்டுதற்குவேண்டிய முயற்சியி லீடுபட்டனர். இம்மங்கலச் சடங்கை நன்றாய் நடாத்துதற்குத் தகுதியுடையார் பலரும் கூத்தரைத் தலைமை வகித்து வினையை முடிக்குமாறு வேண்டினர். இப்பெரும் பதவிக்குத் தாம் உரிய ரல்லராயிருப்பினும் உடன்பட்டது, விக்கிரமசோழன், தனது மரணகாலத்தில் தனது ஆஸ்தான புலவராகிய கூத்தரிடத் துத் தன் புதல்வன் குலோத்துங்கனுக்கு இளவரசையும், பட்டாபிஷேகத்தையும், மணத்தையும் உரியகாலத்திற் சிறப் பாகச் செய்து முடிக்கும்படி கட்டளையிட்டுச் சென்றதினு லென்க. குறித்த நன்னுளொன்றில் நன்கு ஆராய்ந்து செய்யப் பட்டிருந்த யேற்பாட்டின்படி எல்லாவித மங்கள வைபவத் துடன் சுபமுகூர்த்த வேளையில் குலோத்துங்கனுக்குப் பட்டா பிஷேகம் செய்யப்பட்டது. அச்சமயத்தில் பல பெரியார்

ஆசீர்வதிக்க, பாவலர்கள் பாமாலை சூட்டி வாழ்த்த ஒட்டக்கூத்தர், அரசனுக்கு மங்கள முண்டாகும்படி தாம் ஓர்துதி கவி பாட நினைந்து,

'ஆடுங் கடைமணி நாவசை யாம லகிலமெல்லாம்
நீடுங் குடையிற் றரித்தபிரா னென்றும்—

என்று தொடங்கிப் பாட்டு முடியுமுன், அச்சோழன், தனக்கு ஆசிரியர் முறையிலுள்ள புலவர்பிரான், தன்னைத் துதித்தல் மரபல்லவெனக் கருதிப் பாடுந் திறம்வாய்ந்த அச்சோழன் எஞ்சிய பகுதியை,

நித்தநவம்
பாடும் புலவர் பணிகொண்ட கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங் குலோத்துங்க சோழனென்றே யெனைச்சொல்லுவரே''

எனப் பாடிமுடித்துத் தனது நன்றியறிதலை விளக்கினன்.

இதுகண்டு அவையிலுள்ள ஆன்றோர் பலரும், பிறரும் குலோத்துங்கனுடைய அருங் குணத்திற்கும், அருஞ்செயலுக்கும், அன்புடைமைக்கும் மிகவியந்து, களங்கமிலான் என்பதன் அறிகுறியாக * அகளங்கன் என்ற பெயரை முன்னரே ஆய்ந்துவைத்த பெரியாரின் அறிவுடைமையைப் பாராட்டி அப்பெயர் இவனுக்குத் தகும் எனக்கொண்டாடிப் புகழ்ந்

* இச்சோழனுக்கே 'அகளங்கன்' என்னும் பெயர் சிறப்பாக வழங்கப்பட்டதற்குத் 'தமிழ்நாவலர் சரிதையில்' மூன்று செய்யுட்கள் ஆதாரமாகக் காணப்படுகின்றன. அவை, 'அடைந்தாரைத் தாங்கும் அகளங்கா' (121) 'சென்னி, அகளங்கா' (123) 'தலைகாவெம துடல் காவெம துயிர்காவக ளங்கா' (130) என்பன. 'அநபாயன்' என்ற பெயரும் இவனுக்குண்டென்பது: 'ஆழிப்பெருமாளபயனன பாயன்' என்ற குலோத்துங்க சோழனுலாக் (317) கண்ணியால் அறியப்படும். 'சென்னி' என்ற பெயர் இராமாவதாரம் பிலநீங்குபடலம்.

தனர். என்னே ! இவனது ஆசிரியபக்தி! என்னே ! இவனது தமிழன்பு !

இச்சம்பவம் உண்மையென்பதற்குப் படிக்காசுப்புலவர் தனிநிலைக்கவியும், புலவர்புராணச் செய்யுளும் சான்று கூறுகின்றன. அவை வருமாறு:—

"கூடுந் திரைகொண் டிவன்வேளை பார்த்துக் குறுகலர்கள்
தேடுந் தென்மாவைக் கறுப்பனெங் கோனெஞ்சி லினைதனைப்
பாடுந் தமிழ்ப்பெரு மானொட்டக் கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங் குலோத்துங்க சோழனைப் போலச் சுமந்தனனே"

பழங்கவித்திரட்டு

"மாதவர் முனிவர் தாமும் வழுவில் வேதியரு மன்பாற்
போதவெண் ணீறுமஞ்ச ளரிசியும் போட்ட பின்னர்
காதல்கூ ரொட்டக் கூத்தன் கடைமணி நாவாடாமற்
பூதல முழுதுந்தன்னோர் குடையினுட் புரப்பக் கொண்டான்."

புலவர்புராணம், 13

"பிரானென வலக்கை தூக்கிப் பேசரைக் கவிமுற் றுமுன்
னிராகவ னனையான் போது மெனத்தடுத் தியற்பா வல்லீர் !
பாரவுமின் னவன்றாள் சூடும் பண்பினின் றுனென் றென்னைச்
சுராசுரர் சொல்வ ரென்றப் பாதியுஞ் சொன்னான் மன்னே."

புலவர்புராணம், 14

பின்னும், ஸ்ரீ முருகதாசர், தமது புலவர் புராணத்துள், "மூவகைத் தமிழுமுணர்ந்த அவ்வொட்டக்கூத்தப் புலவரை விளித்து, அவர் முன்னிலையிற் சொன்ன அந்த சொற்றவறாமல், மேலோர்பலர் கொண்டாடும்படி வருடந்தோறும், ஒருநாளில், வலிய தலையையுடைய யானையின்மீது, அங்ஙனமே, (தன்முடிமேல் ஒட்டக்கூத்தர் அடியை வைத்துக்கொண்டே) தான் ஊர்வலம் வந்தும் (தன் சொல்லை நடாத்திக்) காண்பித்

தான் " என்பதற்கு மூன்று செய்யுட்களை உதாரணங் காட்டு கின்றனர் அவை:—

" மதத்தவா ரணமேல் வளவனுற் றவன்மணி
முடிமிசை யொட்டக் கூத்தன்
பதத்துணை புனைந்து வருடத்தி லொருக்காற்
பவனிவந் திடுதின முதித்தது "

" அத்தகைப் புலமை தோயா ரரியசொற் சுவைதேருரே
முத்தமிழ்ப் புலவர்க்கூவி மொழியுமம் மொழிவழாம
லுத்தமர் பலர்கொண்டாட வொருவருடத்துக் கோர்நாண்
மத்தகக் களிற்றவ்வாறூர் வலம்வந்துங் காட்டி னானே." (15)

" வன்னியை நம்புந் தெய்வ மறையவர் மறைநீ ராடும்
பொன்னியன் மகுட மீது புலவர்பூங் கழல்கள் சூடுஞ்
சென்னியே சென்னி யன்னத் திகழ்தரு நிமித்தஞ் சோணாட்
டின்னிசை வேந்தர்க் கப்பே ரிம்பரார் புகல்வார் போலும்" (16)

(மூன்றுவது செய்யுளின் பொருள்)

" அக்கினியைத் (தேவர்கட்கு முகமென்று) நம்பி (அதனிடத்து) ஓமஞ் செய்கிற தெய்வத்தன்மையுள்ள அந்தணர்களால் புரோக்ஷிக்கப்படுகிற வேத மந்திரோச்சாரணத்துடன் கூடிய புண்ணிய தீர்த்தத்தில் நனைகிற பொன்னாலமைந்த கிரீடத்தின் மேல் வித்வான்களுடைய தாமரை மலர்போன்ற பாதங்களைக் கொள்ளுகிற தலையே சிறப்புடைய தலை என்று கொண்டு, (அங்ஙனம் புலவர்களடியைத் தமது முடிமேற் கொண்டு) விளங்குகிற காரணத்தால் கேட்டற்கு இனிய கீர்த்தியையுடைய சோழ நாட்டு அரசர்க்குச் (சென்னியென்னும்) அந்தப் பெயர் இவ்வுலகத்தார் சொல்வார்கள் போலும்."

உறுப்புக்களில் உத்தம அங்கமாகிய தலைபோல அரசர்களிற் சிறந்துவிளங்குதலாற் 'சென்னி' யென்று சோழவா

சருக்கு வழங்கும்பெயருக்கு, இச்செய்யுளில், குலோத்துங்கன் புலவர் அடியைச் சூடும் முடியுடைமையால் அப்பெயர் வந்தது போலும் என வேறு காரணங் கற்பித்துக் கூறியது இச்சோழனுக்குக் கூத்தராகிய ஆசிரியர்பாலுள்ள பேரன்பின் காரணமே எனத்துணிதல் வேண்டும். இது 'நிருக்தி' என்னும் அலங்காரத்தின் பாற்படும்.

" எத்தனை புலவ ரோமுன் னிறைவரை வயஞ்செய் துற்று
ரத்தனை பேரு ளாரு மருந்தமி ழொட்டக் கூத்த
னுத்தவர் முடிமேற் றந்தா ளுறவைத் தில்லையில்லை
யித்தனை அதிட்ட மன்னேற் கிசைந்தமை யேற்றந் தானே "

என்பதும் கவனித்தற்குரியது.

## சக்கரவர்த்திப் பெயரும்—ஆதாரங்களும்.

சக்கரவர்த்தி யென்பவர், உலகிலுள்ள சிற்றரசுகள் தமதாணைக் கடங்கி, முடிவணங்கித் திறைசெலுத்தத் தாம் யாருக்கும் அடங்காமல், முழு அதிகாரத்துடன் சிறப்பாய் விளங்கி உலகினை ஆள்பவர். இதுபோலவே, கவிச்சக்கரவர்த்தியும், புலவர்களனைவரும் தமதாணைக் கடங்கித் திறைசெலுத்திக் கழல்வணங்குமாறு தமது புலமைத் திறத்தாற் செய்து, தாம் ஒருவருக்குந் தாழாது கவிதா உலகத்தில் தமது அதிகாரத்தைச் செலுத்தி வருவரென்ப. இது பண்டைத் தமிழ்நாட்டுச் சம்பிரதாயம். இச்சம்பிரதாயத்திற்கேற்ப, அக்காலத்தில், புவியரசனாகிய குமார குலோத்துங்கனது பெருஞ்சபையில், கவியரசாகக் கூத்தர் சிறந்து விளங்கினர். இப்பெயரும், பெருஞ்சிறப்பும் இவருக்குப் பெரிதும் பொருந்தி நிலவியதென்பது நூல்களால் அறியக்கிடக்கின்றது. "தக்கயாகப் பரணி" இறுதிக்கண், "வாழிகவிச் சக்கரவர்த்தி

கூத்தனே," "கூத்தன் கவிச்சக்கரவர்த்தி வாழியே" என வருவனவே போதிய சான்றும். அப்பரணி இவரேபாடிய தென்பதும், இவருக்குக் கவிச்சக்கரவர்த்தி என்னுமொரு சிறப்புப்பெயர் உளதாமென்பதும் உணரப்படும். 'சயங்கொண்டார்,' 'கலிங்கத்துப்பரணி' பாடியும், செட்டிகண்மேல் 'இசையாயிரம்' பாடியும், அபயனால் கவிச்சக்கரவர்த்தி என்னும் சிறப்புப் பெயர் பெற்றதுபோல, இவரும், 'அரும்பகைத் தோள்ளாயிரம்' பாடியும் 'தக்கயாகப்பரணி' பாடியும் 'உலா', முதலியன பாடியும் குலோத்துங்கன் முதலியோரால் அச்சிறப்புப்பெயர் பெற்றனராவர்.

கவிச்சக்கரவர்த்திப் பெயருக்கு உதாரணச் செய்யுட்கள் வருமாறு:—

'பாடும் புலவர் பணிகொண்ட கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங் குலோத்துங்க சோழனென்றே யெனைச் சொல்லுவரே"

தமிழ்நாவலர் சரிதை

"தேடுந்தென் மாவைக் கறுப்பனெங்கோ னெஞ்சிவிகைதனைப்
பாடுந் தமிழ்ப்பெருமா னொட்டக் கூத்தன்"

பழங்கவித்திரட்டு

"காக்கண்ட செங்கைக் கவிச்சக்கரவர்த்தி"

தமிழ் நாவலர் சரிதை

"இன்னும் புவியிற் புன்கவிக ளில்லை யுண்டேற் றலையறுப்ப
மென்னுங் கொடிக ளெழுந்தார்ப்ப வீட்டி பாடி யரிந்ததலை
முன்னுந் திதிப்ப வெழுப்புமருண் மூர்த்தி யாகும் புலவர்
[பிரான்

வல்லான் காவியம்

"பூவுலகிற் கவியரசு புரிந்த பெரும் புகழுடையோய்"

கந்தவிரதப்படலம்

"கல்விக் கரசு கவிராஜ சிங்கங் கலைச்சலதி
வில்விக்கும் வாட்கை யபயன் சஞ்சீவி விமலமுத்தி
புல்விக்கு மாகமப் பொக்கசம் வேதப் புயல்கமலச்
செல்விக்குச் சேயொட்டக் கூத்தனல் லாற்புவி செப்பரிதே"

செங்குந்தர்மாலை

" புல்வகைக் குலத்திலுள்ள பாவலர் தாமும் வந்து
நல்வசனங்கள் கூறி நாடொறும் பணிய வாழ்ந்தான் "

புலவர்புராணம்

" கல்லார் கசடற வீணே கவிஞரெனத் திரிவார்
எல்லா மறிந்தவர் போலிறு மாப்பர் இவர்களிடம் [வோர
வல்லான் கவியொட்டக் கூத்தனைப் போற்றிறை வாங்கிடு
ரில்லாமை யாலல்ல வோவெங்கு மிப்படி யெய்தினரே"

தனிநிலைக்கவி

" கோட்கவி கொண்டு மாக்கள் கொடுந்தமிழ் கூற நீத்துத்
தாட்கவிப் புதிய வாட்டந் தலைக்கடை துரந்து சாட
வாட்கவி கொண்ட மன்னன் வளவனு மகிழ நாமே
நாட்கவி பாடு நாட்போ விருப்பது பெரிய நாடே"

ஈட்டி யெழுபது 2

மேற்கூறிய செய்யுட்களில், 'பாடும்புலவர் பணிகொண்ட கூத்தன்' 'பாடுந்தமிழ்ப்பெருமானொட்டக்கூத்தன்' 'செங்கைக் கவிச்சக்கரவர்த்தி' 'புலவர்பிரான்' 'கவியரசு' 'கவிராஜ சிங்கம்' 'பாவலர் பணிய வாழ்ந்தான்' 'வல்லான் கவியொட்டக் கூத்தனைப்போற் றிறைவாங்கிடுவோர்' வாட்கவி என்ற சொற்றொடர்களால், இவருக்குக் கவிச்சக்கரவர்த்திப் பெயரும், திறைவாங்கும் அதிகாரமும் இருந்ததாக நன்கறியப்படுவதால், தொன்றுதொட்டே இப்பெயர் இவருக்கு வழங்கிவந்ததென்பது றுதிப்படுகின்றது. பழந்தமிழரசர் காலத்தில் புலமை சிறந்து

பெருமைப்பட வாழ்ந்த பெரியார்களுக்குத் 'தமிழ்வேள்' என்ற ஒரு பட்டம் அளித்து வந்ததாகத் தமிழ் நூலில் அறியப்படுவதால் புலவர்கட்குப் பட்ட மளித்துச் சிறப்புச் செய்வதுண்மையென உறுதிப்படுகிறது.

## குலோத்துங்கன் மணப்பேச்சும்—எதிர்வாதமும்.

குலோத்துங்கன் பட்டாபிஷேகம் நிகழ்ந்து சில திங்கள் கழிந்ததும், விவாகத்தையும் முடித்துவிட வேண்டுமென்ற விருப்பம், குலோத்துங்கனது சுற்றத்தாருக்கும், அமைச்சருக்கும் உண்டாயிற்று. அதுபற்றி யாவரும் ஒன்றுகூடிச் சோழனுக்கேற்ற மணமகள், யாவள்? எங்குளாள்? என்று ஆராய்ந்தனர். அக்காலத்தில், சோழர் சோழர் குலத்திலும், பாண்டியர் பாண்டியர் குலத்திலும், சேரர் சேரர் குலத்திலும் தான் பெண்கொள்ள வேண்டுமென்ற ஒரு கட்டுப்பாடின்றி, ஒழுங்கும், கல்வியும், தகுதியும் எங்கு பொருந்தி நிறைந்திருக்கின்றதோ, அங்கே பெண்கொள்வதென்ற முறையிருந்தது, குலோத்துங்கன் உறையூரில் அரசாட்சி புரிந்தகாலத்தில் பாண்டிநாட்டு மதுரையில் வஜ்ராங்கத பாண்டியன் அரசனாயிருந்தனன். அவன் அருமைப் புதல்வி, ஒழுக்கம், குணம், கல்வி, விநயம், அழகு முதலியவைகளில் ஒப்புவமையற்ற பேரணங்கென அறிந்தனர். யாவருக்கும் அச்சம்பந்தம் விருப்பமாயிருந்ததால், அவளையே மணமுடிப்பதென உறுதிகொண்டனர். ஊடல் தணிவிப்பதையும், மணம் பேசுவதையும் அக்காலத் தமிழரசர் தமது ஆஸ்தானப் புலவர்களைக் கொண்டு முடிப்பது வழக்கமானதால், அதனையொட்டி மணம் பேசுவதற்குக் கூத்தரை மதுரைக் கனுப்பவதெனத் தீர்மானித்தனர். அதன்படி கூத்தர் நன்னாளொன்றில், உறையூர்விட்டு

மதுரைக்குப் பிரயாணமாயினர். கூத்தர் நல்வரவுக்குப் பாண்டியன் மகிழ்ந்து அவர்தந் தகுதிக்கேற்பப் புலவரை எதிர்கொண் டழைத்து உபசரித்து, நலம் விசாரித்து அளவளாவிய பின்னர்ப் பாண்டியன் புலவரை வரவின் காரியத்தை அறிவிக்கும் படி வேண்டினன். கூத்தர் மகிழ்ந்து, அவனது தவப்புதல் வியைச்சோழர்குலத் தோன்றலாகிய குமாரகுலோத்துங்கனுக்கு மணமகளாகக் கொள்வதற்கு வந்ததாகக் கூறினர். பாண்டியன் அதுகேட்டு மனத்துள் மகிழ்ந்ததுமன்றி உறையூர் வேந்தனது உயர்வையும், கல்வியறிவையும், கட்டழகையும், போர்த்திற மையையும், வீரச்செயலையும், மற்றும் பல நலங்களையும் முன்னரே தக்கோரால் நன்கறிந்திருந்தானனதால், மகட்கொடைதர மனமிசைந்தனனெனினும், அதனை அத்துணை எளிதாகக் காட்டிக்கொள்ளக் கூடாதெனக் கருதி, அவ்வுறந்தை வேந்தன் 'எங்கள் குலத்துப் பெண்ணை ஏற்கத் தக்கவனோ? எங்களினும் ஏற்றமுடையவனோ?' என்று வினவினன். அதுகேட்ட கூத்தர், 'தாங்கள் அவைகளை அறியீர்கள் போலும். அறியக் கூறுகிறேன் கேட்பீராக' வென்று, தமது அரசனுடைய குதிரை, நதி, மாலை, குலம், பராக்கிரமம், கொடி, நகரம், நாடு, முதலியவைகளை உயர்த்தி இவைகளுக்குப் பாண்டியனது குதிரை முதலியன சமமாக மாட்டா என்னுங் கருத்தமைத்து,

"கோரத்துக் கொப்போ கனவட்ட மம்மானே
கூறுவதுங் காவிரிக்கு வையையோ வம்மானே
ஆருக்கு வேம்புநிக ராகுமோ வம்மானே
ஆதித்த னுக்குநிக ரம்புலியோ வம்மானே
வீரர்க்குள் வீரனொரு மீனவனோ வம்மானே
வெற்றிப் புலிக்கொடிக்கு மீன்கொடியோ வம்மானே
ஊருக் குறந்தைநிகர் கொற்கையோ வம்மானே
ஒக்குமோ சோணாட்டைப் பாண்டிநா டம்மானே"

என்ற கவியொன்றைக் கூறினர்,

அச்சமயத்துப் பாண்டியன் அருகிருந்த அவனது சமஸ்தானப் புலவர் புகழேந்தியார் எதிரிட்டு, கூத்தருக்கெதிர் மாற்றமாகப் பாண்டியனது மலை, நகரம், கொடி, குலம், நதி, மாலை, சிறப்பு, பராக்கிரமம் சோழரது மலை முதலியவைகளினும் மிகச் சிறந்தவை என்னுங் கருத்தையடக்கி,

"ஒருமுனிவ னேரியிலோ வுரைதெளித்த தம்மானே
ஒப்பரிய திருவிளையாட் டுறந்தையிலோ வம்மானே
திருநெடுமா லவதாரஞ் சிறுபுலியோ வம்மானே
சிவன்முடியி லேறுவதுஞ் செங்கதிரோ வம்மானே
கரையெதிரல் காவிரியோ வையையோ வம்மானே
கடிப்பகைக்குத் தாதகியங் கண்ணியோ வம்மானே
பரவைபணிந் ததுஞ்சோழன் பதந்தனையோ வம்மானே
பாண்டியனார் பராக்கிரமம் பகர்வரிதே யம்மானே."

என்று பாடினர். உடனே கூத்தர் சோழனது வீரத்தை விளக்க நினைந்து,

"வென்றிவளவன் விறல்வேந்தர் தம்பிரான்

என்று முதுகிற் கிடான்கவசம்—துன்றும்

என்றுகூறி மேலே பாடுதற்குமுன், புகழேந்திப்புலவர் குறுக்கிட்டு, அவ்வெண்பாவை வெட்டிப்பாடிப் பாண்டியனது வீரத்தை யெடுத்துக் கூறினர்.

காரணமின்றித் தம்மோடு மாறுபட்டுத் தமது கருத்துக்கெதிராகத் தமது பாடல்களை ஒட்டியும் வெட்டியும் பாடியதற்குக் கூத்தர் மனம் வருந்தினர். கருமமேகண்ணாயினர் எவ்வித இடையூறுகளுக்கும் மனந்தளராரானதால், அதனைக் காட்டிக் கொள்ளாமல், தமது வாக்சாதுர்யம், சமயோசித புத்தி விஷயத்தைத் திறமாய் எடுத்து மொழிதல் முதலியவைகளால்

பாண்டியன் மனதைத் தம்வசப்படுத்தினர். பாண்டியனும் பெண் கொடுக்க இசைந்து உறுதிமொழிந்தனன். இங்ஙனம் பாண்டியன் உள்ளம் மலர்ந்து, பெண்கொடுக்க விசைந்ததற்குக் கூத்தர் பெரிதும் மகிழ்ந்தனர். பின்னர் திருமணநாளைக் கணித வல்லாரைக்கொண்டு கணித்து முகூர்த்தபத்திரிகை எழுதி முடித்தனர். அன்று பாண்டியன் கூத்தருக்கும் பிறருக்கும் பெருவிருந்தளித்து இரவலர்க்கும், புலவர்க்கும் பெரும் பரிசில் நல்கி மகிழ்வித்தனன். மணச்செய்தி கேட்ட மதுரைப் பதியார் யாவரும் இன்பவாரிதியிலாழ்ந்தனர். மறுநாள் கூத்தர் பாண்டியனிடத்து விடைபெற்றுச் சோணாடு சென்றனர்.

## அரசன் மண ஏற்பாடும்—கூத்தர் அரசுரிமை ஏற்றலும்.

பாண்டியனிடம் விடைபெற்று மதுரை நீங்கிய கூத்தர், உறையூரடைந்து, திருமணப்பத்திரிகையைச் சோழனுக்குக் காட்டினர். மணவுறுதியைக் கேட்ட யாவரும் ஆனந்தத்திலாழ்ந்தனர். உடனே அமைச்சர்கள் அரசனாணை பெற்று மணவினைக்குரிய காரியங்களை விரைந்து சிறப்பாகச் செய்யும்படி அரண்மனைக் காரியஸ்தர்களுக்கு ஆணையிட்டனர். குடிகளுக்குக் கலியாணச் செய்தியை யானைமீதேறிப் பறைசாற்றி யறிவிக்கப்பட்டது. தமிழரசர் காலத்தில் அரண்மனையில் நிகழும் சுபகாரியங்களை யானைமீதேறிப் பறைசாற்றிக் குடிகளுக் கறிவிப்பதே பண்டைய வழக்கு. அரசரின் திருமாளிகையில் நடைபெறும் கொண்டாட்டங்களைக் குடிகளும் ஒருங்கிருந்து கொண்டாடுதலே பதிவு. அந்நடை முறைப்படி சோணாட்டுக் குடிகளனைவரும் சோழன் கோயில் புக்கு விவாகச் சடங்கினுடன் கலந்து உண்டுடுத்து உவகை யெய்தினர். பொன்னும் பொருளும் பெற்றுப் பூரித்தனர். நாடெங்கும் மணப்

பேச்சே பெரும் பேச்சா யிருந்தது. மணவிழாவை முன்னிட்டு அரசன் குடிகளை ஈராண்டு இறைசெலுத்த வேண்டாமெனக் கட்டளை பிறப்பித்தனன்.

திருமணக்காலம் சமீபித்ததும். குமார குலோத்துங்கனுக்குச் சுற்றத்தார் செய்யவேண்டிய மங்கலச் சடங்கனைத்தும் விதிவழுவாது செய்துமுடித்தனர். ஆணையனைய சோழன் சிறப்பான ஆடையாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு மணமகனாக விளங்கினான். பின் காப்புநா லணிவித்து தெய்வந் தொழச் செய்து பட்டத்து யானைமீது எழுந்தருளுவித்தனர். மங்கலமுரச மோங்கின. சோழனது சுற்றத்தாரும், பந்துக்களும் சூழவந்தனர். மற்றும், அமைச்சர், அந்தணர், சேனைபதியர், தூதுவர், சாரணர், என்னும் ஐம்பெருங் குழுவும், காணத்தியல்வர், கருமாதிகாரர், கடைகாப்பாளர், கனகச் சுற்றம், நகரமாந்தர், படைத்தலைவர், யானைவீரர், இவுளிமறவர், என்னும் எண்பேராயமும், எட்டி, காவிதி முதலிய பட்டதாரிகளும், வேளாண் செல்வரும், வணிகப் பிரபுக்களும், உடன் தொடர்ந்தனர். உறையூரில் தான் வருமளவும், தனது தானத்திருந்து, அரசுரிமையேற்று நடாத்துதற்குத் தக்கார் யாரும் அப்பொழுது காணப்படாமையால் தனது ஆசிரியரும், ஆஸ்தானத்துத் தமிழ்ப்பெருந் தலைவருமான ஒட்டக்கூத்தரைச் சோழன் மிகவும் வணங்கி அரசுரிமையேற்று நடாத்துமாறு வேண்டினன். புலவர் மாணவனது மணவினையைக் கண்டு களிப்பதற்கு விரும்பினரெனினும், சமயத்தையும், அவசியத்தையும் உணர்ந்து, மாறுகூறாது, அரசேற்றனர். சோழன் மகிழ்ச்சி மீக்கூர்ந்து ஆசிரியரை வணங்கி விடைபெற்றுச் சேனைசமூகம் பேரிகை முழக்கிப் பெருந்திரளாக முன் செல்ல, வந்தியர்கள் வாழ்த்தெடுப்ப, மாகதர்பாட, அந்தணர் ஆசீர்வதிக்க, வெகு சம்பரமத்துடன் மதுரைக்குப் பிரயாணப்பட்டனன்.

கூத்தர்க்குப் புலமை அறிவுடன் அரசியலறிவும் நிருவாகத் திறமையும், ராஜ தந்திரச் சூழ்ச்சியும், வீறுபெற்ற புலமையும், ஒப்பற்ற சாமர்த்தியமும், அடக்கியாளுந் திறமையும் ஒருங்கே சிறந்திருந்தன வென்பதற்கு இஃதோர் சான்றாகும். பண்டைப் புலவர் பல்லோர் அரசியலறிவில் மிகுதியும் பயிற்சி பெற்றிருந்தாரென்பது சங்கநூல்களைக் காண்பார்க்குத் தெற்றென விளங்கும். அவர்களில், கோவூர்கிழார், அரிசில்கிழார், பரணர் முதலியோர் முதன்மையுடையவராவர்.

## சோழன் திருமணமும்—பாண்டியன் சீதன வரிசையும்.

எட்டெட்டுத் திருவிளையாடல் புரிந்து, அங்கயற்கண்ணியாரொடு கோவில்கொண்ட சோமசுந்தரக்கடவுள் இனிதமர்ந்துறையும் மதுரையம்பதியின் மாண்பை யாவரே வருணிக்க வல்லார்? இயற்கையிலேயே பல மங்கலவளங்களும் சிறந்த நான்மாடக் கூடல், இப்பொழுது குடிகளின் இருகண்ணெனமிளிரும் பாண்டியன் அருந்தவப் புதல்வியின் திருமணமென்றால், நகரின் அலங்காரம் இத்தகையதென்று உரைத்தலுங் கூடுமோ? அதிலும், தன்னினுஞ் சிறந்தானும், சோழநாட்டுச் சக்கரவர்த்தியும், தனது அருமை மருகனுமாகிய சோழனை மணக்கோலத்துடன் வரவேற்பதற்குச் செய்யும் சிறப்பு எத்தகையதா யிருக்கும்? சுருங்கக்கூறின் சிற்பம் வல்லார்பலர் ஒருங்குகூடித் தங் கைத்திறனெல்லாங் காட்டிக் கண்டோர் இருகண் போதா! ஆயிரங்கண் வேண்டுமென்று வியந்து புகழ்ந்து கூறும்படி நகரையும், அரசன் மாளிகையையும், கலியாணப் பந்தரையும், அழகெலாம் ஒருங்கே அமைந்து சிறக்குமாறு அலங்கரித்திருந்தன ரென்றறிவதே சாலும்.

சோழன் மதுரையடுத்தான் என்ற செய்திகேட்டதும் பாண்டியன் தனது சுற்றத்தார், பந்துக்கள், அமைச்சர் முதலி

யோருடன் தந்தகுதிக்குரிய எல்லாச் சிறப்புக்களுடன் எதிர்கொண்டழைத்துப் போதியபடி உபசரித்து ஏற்ற இருக்கையில்கொண் டினிதமர்த்தினன்.

பாண்டியன் மதுரைப் பதியெங்கும் பல்வேறு விநோதங்களும், பல பெருவிருந்துகளும், களியாட்டங்களும், கணக்கில் வேடிக்கைகளும், செவிக்கினிய பண்ணோசைகளும், கண்விருந்தனைய காட்சிகளும், பரந்து சிறந்து யாவரையும் இன்பத்திலாழ்த்தின. மறுநாள் மங்கலச்சடங்கனைத்தும் மாண்புடன் நிறைவேற, நல்ல சுபகாலவேளையில் சோழர்தோன்றலுக்கும், பாண்டியன் பைந்தொடிக்கும் திருமணம் எல்லா வைபவங்களுடனும் இனிது நிறைவேறிற்று. சோழன் சின்னாட் கழிந்ததும், தன்னூருக்குச் செல்லவேண்டிய காலத்தைக் குறிப்பிட்டனன். பாண்டியன், மகளுக்கும், மருகனுக்கும் நடைமுறைப்படி செய்யவேண்டிய சீர் வரிசைகளைச் சிறக்கச்செய்து, அதனுடன் தனதருந்தவப் புதல்விக்கு ஏற்ற சமயங்களில் புத்தி புகட்டுதற்குப் புலமை மிக்க புகழேந்திப் புலவரையும் சீதனமாகக் கொடுத்தனன். பின்னர் சோழன் பாண்டியனிடத்துப் பிரியாவிடைபெற்றுத் தன்னுடன்வந்த பரிசனர்களுடன் உறையூரடைந்தனன்.

பாண்டியன் புதல்விக்குப் புலவரைச் சீதனங்கொடுத்த செய்தி 'பாண்டிய மண்டல சதகத்தில் கூறப்பட்டிருக்கிறது. அது வருமாறு :—

"நளனைப் புகழ்கின்ற வெண்பாவைப் பாடி நன்னாட் கவிதை
கழகத்தின் மிக்க புகழேந்தி யாங்கவி ராசன்தன்னைத்
தளவப் பெருநகை மாதொடு தென்னவன் தான்மணஞ்செய்
வளவற்குச் சீதன மீந்தது பாண்டியன் மண்டலமே."

இந்நூல், பாண்டிநாட்டின் சிறப்பனைத்தும் தொகுத்துக் கூறு

வதில் கவனமுடையதானதால், இச்சீதனச் செய்தியை விளக்கியதுபோலும். 'புலவர் புராணம்' இப்பாகத்தைக் கூறவில்லை. தமக்குடன்பாடில்லையோ, செய்தி தெரியாமல் விட்டதோ, உண்மை யறியக்கூடவில்லை. 'பாவலர் சரித்திர தீபகம்,' 'விநோதரசமஞ்சரி' முதலியவற்றில் இவ்விஷயம் காணப்படுகின்றது. இதனால் இவ்விஷயம், மேற்காட்டிய நூலாசிரியர் கர்ணபரம்பரைச் செய்தியை ஆதாரமாகக்கொண்டு, தத்தமது நூல்களில் இடம்பெறச் செய்திருக்கின்றனரெனக் கருதுகின்றோம். கர்ணபரம்பரைச் செய்திகளில் சில உண்மையுள்ளதும் உண்மையில்லாததுமிருக்கின்றன. ஆயின், விஷய சம்பந்தத்தையும், சரிதவமைப்பையும் ஆராய்ந்து உண்மை காணவேண்டும். புகழேந்திப்புலவர் சோழநாடு வருவதற்கும் ஏற்றதோர் ஏதுவாக இச்செய்தி மேல் நிகழப் போகின்ற விஷயங்கட்கும் எழுந்ததென்றே நிச்சயிக்கின்றோம். இஃது உண்மையென்பது பின்னர் காணப்படும் விஷயங்களால் தெள்ளிதின் உணரலாகும்.

இனிக் குமார குலோத்துங்கனுக்கு மகட்கொடை தந்த பாண்டியன் யாவன் எனத் தெளிவாய் வரையறுத்துக் கூறுதல் சிரம சாத்தியமாக விருக்கிறது. இப்பாண்டியனை காலஞ்சென்ற ஸ்ரீமான். வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் பி. ஏ. அவர்கள், வரகுணபாண்டியன்' II இரண்டாமவன் என்றும், சிலர் 'கருணாகரபாண்டிய'னென்றும் கூறுகின்றனர். அங்ஙனம் கூறினோர் தங்கள் நூல்களில் தக்க ஆதாரங் காட்டினாரில்லை. சரித்திரம் எழுதுவோருக்கு உறுதுணையாயுள்ள, 'தமிழ் நாவலர் சரிதை'யும் 'மண்டல சதகங்க'ளும்' இதனை விளக்காது விட்டன. உண்மை காண்பதில் கவலைகொண்ட நாம் இவ்விஷயமாக பல ஆராய்ச்சி நூல்களைக் கவனித்தபோது,

காரைக்குடி "கம்பநாடர்" பத்திரிகையில் "கம்பர்காலம்" என்ற தலையங்கத்தின், 53—54 ஆம் பக்கங்களில், அப்பாண்டியனது பெயர், அடியில் வருமாறு குறிக்கப்பட்டிருக்கிறது. அதனை அன்பர்கள் அறியுமாறு ஆசிரியரனுமதியுடன் பிரசுரிக்கின்றோம். அது:—

"கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்தி என்னும் கவிஞர்கள் மூவரும் சமகாலத்தவர் என்பதைத் தமிழ்ப்புலவர் ஒப்புக்கொண்டு பேசுகிறார்கள். இவ்விஷயத்தில் ஸ்ரீமான் 'கால்டுவெல்' துரையும் விலக்காடவில்லை யென்றே அறிகிறோம்.

இம்மூவருள், புகழேந்திப்புலவர், வஜ்ஜிராங்கத* பாண்டியன் காலத்தில் அவனது சமஸ்தானத்து வித்துவானாக இருந்தவரென்றும், அப்பாண்டியன் தனது மகளை, உறையூரில் ஆட்சிபுரிந்துகொண்டிருந்த குலோத்துங்கசோழ மன்னனுக்கு விவாகஞ் செய்து கொடுக்க, அவளுடன் அவரது சமஸ்தானப் புலவராகிய புகழேந்தியும் அனுப்பப்பட்டாரென்றும் தெரிகின்றது. இந்த வஜ்ஜிராங்கத பாண்டியன் பராக்கிரம பாண்டியனுக்கு முற்பட்டதோரரசனென்றும், பராக்கிரம பாண்டியன் சுமார் 891—ஆண்டுகட்கு முன் மகம்மதிய அரசர்களால் முறியடிக்கப்பட்டவனென்றும் ஆராய்ச்சியாற் கிடைக்கின்றது. இந்தப் பராக்கிரம பாண்டியன், சுமார் 45 வருடகாலம் நல்ல ஆட்சிபுரிந்திருக்கிறானகையால், எவ்விதத்தினும், வஜ்ஜிராங்கத பாண்டியனுடைய காலம் இற்றைக்குச் சுமார் 936 ஆண்டுகட்கு முற்பட்டே யிருத்தல் வேண்டுமென்பது கிடைக்கின்றது; தவிர வஜ்ஜிராங்கத பாண்டியன் பராக்கிரம பாண்டியனுக்கு அடுத்து முற்பட்ட அரசனாகவுமில்லை யென்றும், வஜ்ஜிராங்கதனுக்குப் பின், இரண்டு அரசர்கள், ஆண்டபின்னரே பராக்கிரம பாண்டிய

னது ஆட்சி ஆரம்பிக்கப்பட் டிருக்கின்றதென்றும் தெரிவதால், 936 ஆண்டுகளுடன், குறைந்தது இன்னும் 90 ஆண்டுகளையும் கூட்டிப் பார்த்தல் வேண்டியதாகிறது. இப்படிப் பார்க்கும்போது, புகழேந்திப் புலவருடைய காலம் இற்றைக்குச் சுமார் 1000 ஆண்டுகட்கு முற்பட்டதாகவே ஏற்படுகிறது" என்பதே.

## புகழேந்தியின் சிறையும்—குலோத்துங்கன் பவனியும்.

திருமணமுடித்துச் சீதன வரிசைபெற்று உறையூரடைந்த குமார குலோத்துங்கன், அரசேற்றுங் நடத்தாமல், அந்தப்புரத்தே தங்கிக் களியாட்டிலும், விருந்து வேடிக்கையிலும், பூம்பொழில்சென் றுலாவுதலிலும், சங்கீத சிரவணத்திலும் மூன்று மாதமளவும் உல்லாசமாயிருந்து வந்தனன். இஃதிவ்வாறாக, முன்னர் மதுரையில் காரணமின்றித் தம்முடன் மாறுபட்ட புகழேந்திப்புலவர், உறையூரடைந்திருப்பதைக் கூத்தர் கண்டு, பழம்பகைமை பாராட்டித் தமக்குள்ள பூர்ண அதிகாரத்தைக் கொண்டு அரசனது அநுமதிபெறாமலே அரண்மனைக் காவற்கூடத்தில் சிறை செய்வித்தனர். புலவருக்குள் எப்பொழுதும் பொறாமை உண்டென்பது பிரசித்தம். தாயாதிகளுக்கு இயல்பாக ஏற்படும் பொறாமையினையே இதற்கு உவமை சொல்லலாம். அரசுரிமை தமது அதிகாரத்தின் கீழ் அப்பொழுதிருந்ததால், தாம் அரசனது அநுமதிபெற்றுப் புலவரைச் சிறை செய்யவேண்டுமென்ற அவசியமில்லாது போயிற்று. புகழேந்தி சிறைப்பட்ட செய்தி அந்தப்புரத்திற் கெட்டவேயில்லை. ஊழ்வினை என்னும் விதி உயர்வுதாழ்வு கருதாது, எவரையும் ஒரு தன்மையாகவே கருதி துன்புறுத்தும் வன்குண முடையது. இதற்கு,

"ஒள்ளியர் தெள்ளிய ராயினும் ஊழ்வினை
பைய நுழைந்து விடும்"

என்பதே போதிய சான்றாகும். இவற்றிற்குப் புகழேந்தியும் உட்பட்டவரானதால் விதியை நொந்து வாளா விருந்தனர். (புகழேந்தி சிறைப்பட்டதை எல்லா நூல்களும் ஒப்புக் கொண்டே பேசுகின்றன.)

இங்ஙனம் புலவர் சிறையில் மூன்று மாதமளவும் தங்கி வருந்தினர். இக்காலத்தில் நிகழ்ந்த கதைகள் பல. குலோத்துங் கன் அந்தப்புரம் நீங்கி அரசேற்ற காலமும், வருஷத்திற்கொரு நாள் அரசன் நகர்வலம் வரும் காலமும் ஒன்றாயிருந்ததினால், அன்று வழக்கத்தை யொட்டி நன்றாய் அலங்கரிக்கப்பட்டிருந்த பட்டத்து யானையின்மீ திவர்ந்து பலவித சிறப்புக்களுடன் குலோத்துங்கன் பவனி வந்தனன். தனது ஆசிரியராகிய கூத் தரும் யானைமீதிவர்ந்து உடன்வந்தனர். பவனிவரும் தெரு வழியே சிறைக்கூடமிருந்ததால், அதனருகே சோழனடுத்ததும் அரசனருகிருந்த மெய்காப்பாளன், சிறைக்கூடதளத்தின் மேல் வாடிய முகத்துட னின்றுகொண் டிருந்த புகழேந்திப் புலவரைச் சுட்டித், 'தங்கள் பட்டமகிஷிக்குச் சீதனமாக வந்த புலவர் அதோ பார்த்தீர்களா?' என்று காட்டினன். அதுகேட்ட சோழன் அதிசயித்து 'அப்புலவர் அங்குவர நேர்ந்ததென்னை யென்றனன்?' மெய்காவலன் 'தங்கள் ஆசிரியர் ஆணையென்ற னன்.' குலோத்துங்கன் உடனே ஆசிரியரை நெருங்கி, 'ஐயனே! புகழேந்தியார் சிறைப்படற்குற்ற குற்றம் யாது?' என்றனன். கூத்தர், தாம் மதுரை சென்றிருந்தபோது, 'இவர் மணவினைச் சம்பாஷணையில் குறுக்கிட்டு உம்மை உயர்த்திப் பாடிய செய்யுட்களை வெட்டியும் ஒட்டியும் பாடி எனக் கிடையூறு செய்ததோடு உம்மையும் தாழ்த்திக் கூறினன்.

அதனை யுட்கொண்டே சிறைப்படுத்தினேன். உம்மை மதியாத அவர் நமக்கெம்மாத்திரம்' என்று கூறி, அவரை இகழ்ச்சிக் குறிப்பாக,

" மானிற்கு மோஅந்த வாளரி வேங்கைமுன் வற்றிச்செத்த
கானிற்கு மோஅவ் வெரியுந் தழல்முன் கனைகடலில்
மீனிற்கு மோவந்த வெங்கட் சுறவமுன் வீசுபனி
தானிற்கு மோஅக் கதிரோன் உதயத்திற் றூர்மன்னனே "

என்னும் செய்யுளைப் பாடினர். இச் செய்யுளைச் செவிமடுத்த புலவர் புகழேந்தியார், அரசனைப் பார்த்து, 'அரசர் பெருமானே! சிபியின் வழித் தோன்றலே! இச்செய்யுளை நான் வெட்டிப் பாடுவதா? ஒட்டிப் பாடுவதா? ஆணை தந்தருள்க' என்றனர். குலோத்துங்கன், ஆடுங் கடைமணி நாவசையாமல் அகில மெங்கும் நீடுங்குடையானாதால் ஆசிரியரிடத்துப் பேரன்பிருப்பினும் நடு நிலை திறம்பாது எதிர்விடை கூறுதற்குப் புலவருக்கு அநுமதிதர வேண்டுவது முறைமையானது பற்றி, 'ஒட்டிப் பாடுதிர்' என்று கூறினன். உடனே புகழேந்திப் புலவர்,

" மானவன் நான்அந்த வாளரி வேங்கையும் வற்றிச்செத்த
கானவன் நான்அந்த எரியுந் தழலுங் கனைகடலின்
மீன்அவன் நான்அந்த வெங்கட் சுறவமும் வீசுபனி
தானவன் நான்அக் கதிரோன் உதயமுந் தார்மன்னனே "

என்றுபாடித் தம் புலமையை விளக்கிக் காட்டினர்.

மேற்கூறிய இரண்டு செய்யுட்களும் 'தமிழ் நாவலர் சரிதை'யிற் காணுததென்னையோ? குலோத்துங்கன் யாதுங் கூறுது தனது பவனியை நடாத்தி அரண்மனை சேர்ந்தனன்.

## அரசி கதவடைப்பும்—புகழேந்தி சிறை நீக்கமும்.

குலோத்துங்கனது அரசாட்சி செவ்வனம் நடைபெற்று வந்தது. சோழன் பவனிவிழாவின்போது காவற் கூடத்

தருகே நிகழ்ந்த புலவர் வாதம், சிறிது சிறிதாக அரண்மனை யின் அந்தப்புரத்திலுள்ள அரசன்மாதேவி செவிக்கெட்டியது. அவள் துணுக்குற்றுச் சினமிக்கவளாய் 'அந்தோ! அருமை மிக்க எனது ஆசிரியருமா சிறையிடப்பட்டனர்? ஆயின், எனது கவனம் மிக நன்று. எனது சீதனப் பொருளாய்வந்த செந்தமிழ்ச் செல்வர் சிறைப்படுதற்கா இங்கு வந்தனர்? இது மிக்க அநீதம். சிறைவாசத்தால் எத்துணை சிரமமுற்றனரோ! அரசனது ஒருதலைப்பட்சம் இன்றுதான் அறிந்தேன் என்று பலவாறு கூறிச் சினத்தீயால் வெதும்பி அக்கொதிப்புடன், அர சன் தனது அந்தப்புரத்துக்கு வருகையில், பள்ளியறையைக் கதவடைத்துத் தாழிடுவதே சிறை நீக்கத்திற்கு உபாயமென்று தீர்மானித்து' அவ்வாறே ஏற்பாடு செய்திருந்தனள். குலோத் துங்கன் இரவு 10 நாழிகைக்குமேல் அரசியின் அந்தப்புர சயன அறைக்குச் சென்றனன். தோழிகள் யாருமின்றி அறை யின் கதவு அடைக்கப்பட்டிருந்தது. காரணமறியாது, தனது மெல்லிய தளிர்க்கரம் வருந்தப் பன்முறையும் பலக்கத் தட்டி னன். கதவு திறக்கப்படவில்லை. பல இன்மொழி புகன்றனன், தேவி இறங்கினுளில்லை. பின்னர்ச் சோழன் கவன்ற மனத்தனுகி அந்தப்புரம் நீங்கி, தனது கோவிலடைந்து பலவாறு ஆலோ சனை செய்தனன். பட்டத்தரசிக்கு ஏதேனும் இன்னா நேரு மாயின் பிணங்கிக் கதவடைத்தல் அக்காலவழக்கம். அப் பிணக்கை யொழிப்பதற்கு அரண்மனைப் புலவர், பாணர், பாடினி முதலியோர் செல்லுவர்.

அதன்படி விடிந்ததும் குலோத்துங்கன், தனது ஆஸ்தா னத்துப் புலவர் தலைவராகிய ஒட்டக்கூத்தரை அழைப்பித்து நிகழ்ந்த விஷய முணர்த்தி தேவியின் ஊடலைத் தணிப்பிக்கும் பொருட்டு அரசியிடம் அவரைச் செல்லுமாறு வேண்டினன்.

புலவரும் இராக்கினியின் அந்தப்புரஞ் சேர்ந்து தாழிட்ட பொற்கதவி னருகிருந்து,

"காத்துஞ் சிரத்துங் களிக்குங் களிற்றுடைக் கண்டன்வந்தான்
இரத்துங் கபாட மினித்திறப் பாய்பண் டிவனணங்கே
உரத்துஞ் சிரத்துங் கபாடந் திறந்திட்ட துண்டிலங்கா
புரத்துங் கபாட புரத்துங்கல் யாண புரத்தினுமே" (125)

என்னும் இனிய கலித்துறைச்செய்யுளொன்று பாடினர். இது, தமிழ்நாவலர் சரிதையில் 'தேவி ஊடலாய்க் கதவடைத்தபோது பாடியது' என்ற தலைப்புடன் காணப்படுகிறது. இக்குறிப்பால் பாண்டியன் புதல்வி ஊடலாய்க் கதவடைத்த துண்மை யெனத் தெரிகிறது. இச்செய்யுளில் சோழனது சிறப்பே காண்கிற தன்றித் தன் சிறப்பின்மைகண்ட அரசி, தோழியை விளித்து 'இப்போது பாடியோர் யாவர்?' எனக் கேட்டனள். அவள் ஆஸ்தானப் புலவர் கூத்த ரென்றனள். அதுகேட்டவுடனே சிறைக்குக் காரணர் அவரே யானதால், மேலும் வெகுண்டு, மற்றோர் தாழ்ப்பாளிடச் செய்தனள். இது, பின்னர் "ஒட்டக் கூத்தர் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள்" என்று இழிந்த முறையில் வழங்குவதாயிற்று. கூத்தர், புகழேந் தியைச் சிறை செய்வித்த காரணமாகத் தேவி தம்மீது முனிவு கொண்டிருக்கின்றா ளென்பதை யறிந்து யாதுங் கூறாது திரு ப்பி அரசனிடத்து நிகழ்ந்தவற்றை யுரைத்து அமர்ந்தனர்.

சோழன் விஷயமுணர்ந்து சிறையிலுள்ள புகழேந்திப் புலவரைச் சிறைநீக்கிக் கொணருமாறு செய்து, தேவியின் ஊடலையுணர்த்தி அவரை அந்தப்புரம் செல்லுமாறு விடுத்த னன். அப்புலவர் நன்றெனக் கொண்டு மன்னன் தேவி வசிக்கு மிடம் விரைந்தடைந்து,

"தூபங் கமழும்பைங் கோதையன் விக்ரம சோழன்மன்னர்
தீபன் புறங்கடை வந்துநின் றானின் திருப்புருவச்

சாபங் குனிய விழிசிவப் பத்தலை சாய்த்துநின்ற
கோபந் தணியன்ன மேயெளி தோரங் குடிப்பிறப்பே.''

"இழையொன் றிரண்டு வகிர்செய்த வற்றொன் றிணையுமிடைக்
குழையொன் றிரண்டுகட் கொம்பனை யாய்கொண்ட கோபந்தவிர்
மழையொன் றிரண்டுகைம் மான பரன்கண்டன் வாசல்வந்தால்
பிழையொன் றிரண்டு பொறுப்பதன் றோகடன் பேதையர்க்கே''

"நானே யினிச்சொல்லி வேண்டுவ தில்லை நளினமலர்த்
தேனே கபாடந் திறந்துவிடாய் செம்பொன் மாரிபொழி
மானே ரபய னிரவி குலோத்துங்கன் வாசல்வந்தால்
தானே திறக்குநின் கைம்மல ராகிய தாமரையே''

தமிழ் நாவலர் சரிதை.

என்ற மூன்று செய்யுளைத் தமது திருந்திய நாவால் செஞ்சொலமைப்பில் இனிமைபெற அழகாய் அவளது அருங்குணம், எழில், செம்மை, உயர்குடி முதலியவற்றை நன்கு புனைந்து பாடினர். அவைகளைச் செவிமடுத்த அரசி தோழியால் பாடிய புலவர் தமதாசிரியர் புகழேந்தியா ரென்றறிந்து தமது கருத்து நிறைவேறியதற்கு மிகவும் மகிழ்ந்து, கதவுதிறப்பிக்கச் செய்து எதிர்வந் துபசரித்து இருக்கை நல்கி, தனது குற்றத்தை மன்னிக்குமாறு குறையிரந்து வேண்டினள். புலவர் பொறுமைக் குணமிக்கவரானதால், அதனை மறந்ததாகக்கூறி மகிழ்ச்சிமேற் கொண்டனர். அதுமுதல் கூத்தரும், புகழேந்தியும் அன்பொத்த நட்பினராயிருந்தனர். இங்ஙனம் அன்பொத்த நட்பினராவதற்குத் தமிழறிவுடைய சோழன் பலவாறு முயன்றிருக்க வேண்டுமெனக் கருதுகின்றோம்.

இதன் பின்னரே புலவர்களிருவரும் குலோத்துங்கன் மகிழ்வுறும் பொருட்டு அவ்வப்போது, அவன் விருப்பத்திற் கேற்பச் சில பாடல்கள் பாடியிருப்பதாக அறியப்படுகிறது.

அப்பாடல்களும், அதததற்குரிய ஏதுக்களும் அடியில் வருமாறு:—

ஒருசமயம், சோழர் பெருமான் குமார குலோத்துங்கன், தஞ்சைக்கு ஏழுமைலிலுள்ள திருவையாற்றுக்கு ஒருமைல் தூரத்திலுள்ளதும், சப்தஸ்தான க்ஷேத்திரங்களில் ஒன்றாயதும், சரஸ்வதி பூசித்துப் பேறுபெற்றதும்,

“ தேய்ந்திலங் குஞ்சிறு வெண்மதி யாய்நின் றிருச்சடைமேல்
பாய்ந்தகங் கைப்புனல் பன்முகமாகிப் பரந்தொலிப்ப
ஆய்ந்திலங் கும்மழு வேலுடை யாயடி யேற்குரை நீ
ஏந்திள மங்கையு நீயுநெய்த் தானத் திருந்ததுவே”

என்று திருநாவுக்கரசரால் பாடப்பெற்றதுமான தில்லைஸ்தானம் என்ற ‘ திருநெய்த்தானத்தில் ’ கோயில் கொண்டருளும் ‘ நெய்யாடியப்ப’ரைத் தரிசிக்கச் சென்றபோது, தன்னுடன் வந்த புகழேந்தி யொட்டக்கூத்தரை நோக்கி, ‘நீங்களிருவரும், இத்தலத்துச் சிவபிரானைச் சுட்டி, “ நெய்த்தானத்தானைச் சேவித்தே ” என்பது ஈற்றடியில் வருமாறு ‘ சந்த விருத்தத்தில் பாடுக’ என வேண்டினன். உடனே கூத்தர்,

“ விக்கா வுக்கா வித்தா விப்போய்
விட்டார் நட்டார் சுட்டூர் புக்கார்
இக்கா யத்தா சைப்பா டுற்றே
யிற்றே டிப்போய் வைப்பீர் நிற்பீர்
அக்கா டப்பேய் தொக்கா டச்சூ
ழப்பா டத்தீ வெப்பா டப்பூண்
டெக்கா டக்கா னத்தா டப்போ
நெய்த்தா னத்தா னைச்சே வித்தே ”

என்று பாடினர். தொடர்ந்தே புகழேந்தியும்,

“ தற்கோ விப்பூ சற்பா சத்தே
தட்டா மற்சா கைக்கே நிற்பீர்

நூற்கோ விக்கோ லிப்பூ சித்தே
முட்டா மற்சே வித்தே நிற்பீர்
வற்று நெட்டோ டைப்பா ரைச்சேன்
மைப்பூ கத்தே நித்தா விப்போய்
நெற்று ளூற்று லைப்பா இற்சேர்
நெய்த்தா னத்தா னைச்சே வித்தே"

எனப் பாடினர்.

இவற்றிற்கு எடுத்துக் காட்டாகத் தொண்டைமண்டல சதகத்தில்,

" நூலார் கலைவல்ல செம்பியன் கேட்க நொடித்து மிக்க
கோலா கலவொட்டக் கூத்தனை யன்றுதற் கோலியென்று
மேலார் கவிசொல்லி நெய்த்தானத் தேசென்று மேவிக் கொண்ட
மாலார் களந்தைப் புகழேந்தி யுந்தொண்டை மண்டலமே" (35)

எனவரும் செய்யுள் கவனித்தற் குரியது. சிலர், 'வென்று கொண்ட' எனப் பாடபேதங் காட்டுவர். இது மேற்காட்டியவற்றிற்கு முரணாகும்.

மற்றொரு சமயம், பாண்டிநாட்டுள்ளதும், வைணவாசாரியர்களாகிய நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார்களால் மங்களாசாசனம் பெற்றதுமான திருக்குறுங்குடியில் வைணவ நம்பி என்னும் திருப்பெயர் பெற்றுக் கோயில்கொண்டருளும் பெருமானைச் சோழன் சேவித்தபோது அப்பெருமானைச் சுட்டிப் புலவர்களிருவரையும் வல்லோசை மிக்க கலித்துறைப்பாவில் கவியிசைக்குமாறு பணித்தனன். அவர்கள் அவ்வாறே பாடினர். அவை வருமாறு:—

" திக்குவெட் டுக்கயந் துக்கமுற் றுத்திடுக் கிட்டலற
மைக்கடற் குட்சரந் தைக்கவிட் டோற்கிட மாமதுர

இக்குமுற் றிக்கணுச் சற்றுவிட் டுத்தெறித் திட்டமுத்தைக்
கொக்குமொக் கிக்கக்கி விக்குமச் சோலைக் குறுங்குடியே"
ஒட்டக்கூத்தர்.

"எட்டெழுத் தைக்கருத் திற்குறித் திட்டுகித் தம்பரவுஞ்
சிட்டர்கட் குத்திருப் பொற்பதத் தைச்சிறக் கத்தருமவ்
வட்டநெட் டைப்பணி மெத்தையத் தற்கிடம் வாரிசப்பொ
குட்டினத் துக்குலந் தத்திமுத் தீனுங் குறுங்குடியே"
புகழேந்திப் புலவர்.

சோழன், துலாபுருடதானம் செய்தபோது புலவர்கள் சிறப்பித்துப் பாடியது.

கலித்துறை.

"தொழுகின்ற மன்னர் சொரிந்திட்ட செம்பொற் றுலாத்திடைவண்
டுழுகின்ற தார்க்கண்ட னேறிய தோன்றி னுவாமதிபோய்
விழுகின்ற தொக்கு மொருதட்டுக் காலையில் வேலையில்வந்
தெழுகின்ற ஞாயிறொத் தான் குலதீப னெதிர்த் தட்டிலே" (124)
ஒட்டக்கூத்தர்.

வெண்பா.

"பொருந்த வொருதட்டு மேருப் புகினும்
இருந்த வொருதட் டெழாதால்—திருந்து
மறைபுக்க சொல்லபயா வன்புறவுக் காக
நிறைபுக்க தெவ்வாறு நீ" (141) புகழேந்தி.

சோழன் பட்டத்து யானை நிகளம் (சங்கிலி) விடுவித்தபோது கூத்தர் பாடியது:

வெண்பா.

"இன்னங் கலிங்கத் திகல்வேந்த ருண்டென்றோ
தென்னன் றமிழ்நாட்டைச் சீறியோ—சென்னி
அகளங்கா வுன்ற னயிரா வதத்தின்
நிகளங்கால் விட்ட நினைவு" (123)

சூதில் சோழன் தேவியைப் புகழேந்தி உயர்த்திப் பாடியது:

கலித்துறை.

" பழியும் புகழு மெவர்க்குமுண் டாமிந்தப் பாரினுனக்
கழியுஞ் சிலையுங் கயலுமன் றோவக ளங்கதுங்க
மொழியும் பொழுதெங்கள் பெண்சக்ர வர்த்தி முகத்திரண்டு
விழியும் புருவமு மாகியிப் போதுன்னை வெல்கின்றவே"(143)

## புலவர் சிரங்களைச் சேதித்தலும்—மறுத்தற்குரிய ஏதுக்களும்.

நமது பழந் தமிழ்நாட்டுச் செந்தமிழ்ப் புலவர்களின் அரிய இனிய குணநுபவங்களை நாம் ஆராய்வோமாயின், அவர்கள் பெருந்தன்மை, ஜீவகாருண்யம், தேசாபிமானம், நடுவு நிலைமை, ஆழ்ந்த யுத்தி, இனிய வசனம், பரிந்துருகும் தயாளம், விரிந்த சிந்தை, மேலான செல்வாக்கு, வறுமையிற் செம்மை முதலிய நற்குண நற்செயல்களை நன்கு காணலாம். பிற்காலங்களில் தோன்றிய புலவர்கள் சிலர் ஏதோ காரணங்களால் மேற் காட்டிய சில குணஞ் செயல்களிற் சிறிது தவறியிருக்கக் கூடு மாயினும் கொடுமைக் குணமுடைய தொழிலைக் கொண்டிருக்க மாட்டார்களென்பது மறக்கக் கூடாத விஷயம். இன்சொல் லும், இனிய குணமுமே படைத்துத் தமிழரசர் பெருஞ் சபை யில் மேம்பட வாழ்ந்திருந்தார் புலவரெனச் சரிதம் பல கூறு வதா யிருக்கத் தீயகுணம் படைத்திருந்தார் எனக் கதை கற் பித்து வழங்குவது தகுதியாமா? புலவர் தன்மைகளை விளக்க வந்த ' புற நானூறு ' ' அக நானூறு ' ' சிறு பாணாற்றுப்படை ' முதலிய நூல்களெல்லாம் அவர்கள் அரிய குண சீலங்களையே புகழ்ந்து கூறியிருக்கின்றன. உதாரணத்திற்கு இதன் கீழ் ஒன்று தருகிறோம்:—

" வள்ளலா யுள்ளவர்களை நினைத்துப் பழுத்த மரங்களை நோக்கிச் செல்லும் பறவைபோலச் சென்று, கடத்தற்கரிய வழிகளை யெல்லாம் தூரமென்று கருதாமற் கடந்து, தம் மாற் கூடியபடி பாடி, அங்கே பெற்ற சன்மானத்தால் மகிழ்

ந்து, தம் சுற்றத்தை உண்பித்துத் தாமும் பொருளைக் காவாமல் உண்டும், உண் மகிழ்ச்சியுடன் பிறர்க்குக் கொடுத்தும், தம்மைப் புரக்கும் செல்வரால் பெருஞ் சிறப்புக்கு ஏதுவாக வருந்தும் இப் பரிசிலான் வாழும் வாழ்க்கை பிறர்க்குத் தீங்கு நினைக்குந் தன்மையதன்று. தம்மோடு எதிர்த்தோரைக் கல்வியால் வென்று அதனால் செருக்குதலுடைமையால் உங்களைப்போன்ற அரசருடைய பெருமையுமுடைத்து" (புறநானூறு 47-ஆம் செய்யுளின் பொருள்)

இதனால் புலவர்கள் கல்வி மதமடைந்து செருக்குற்றுப் பெருமையில் இறுமாந்திருந்தனரென விளங்குவதன்றி எவரையும் வருத்தற்குரிய கொலையாதிய கொடுஞ் செயல்களைக் கொண்டிருந்ததாகக் காண்பதற்கில்லை. இங்ஙன மிருக்க ஒட்டக்கூத்தர் மட்டும் அமிழ்தினுமினிய அருந் தமிழை இனிதுறக் கற்று அதன் பயனை நன்குணர்ந்து களித்தவரெனக் கண்டிருந்தும் அரச சபையில் தமது கல்வித் திறங்காட்டிப் பரிசுபெற வருகிற புலவர்களைக் குடுமியுடன் குடுமி முடியிட்டு இரங்கிற்ப, தலைவெட்டும் கொடிய வழக்கத்தை மேற்கொண்டிருந்தாரெனச் சிலர் கூறியும் 'விநோதரச மஞ்சரி' 'புலவர் புராண உரை' மெட்ரிகுலேஷன் தமிழ்ப்பாட உரை நூல்கள் முதலியவைகளில் அச்சிட்டும் கூத்தரை வசைமொழிந்து வருகின்றனர்.

நமது புலவர் பெருமான் சோழர்களது நல்லரசாட்சியில் குமார குலோத்துங்கனது அதிகாரத்தில் அவனது ஆஸ்தானத்தில் கவிச் சக்கரவர்த்திப் பெயர் சிறந்து விளங்கிய காலத்துத் தமிழுக்கோர் பேருதவி செய்தா ரென்பது அவரது நூல்களினின்றும் அறியப்படுகிறது. அத்தகைய உதவியை ஏதோ சில காரணங்களால் உருவகப்படுத்தி உயர்வுவிற்சியாய்க் கேட்போர் வெறுக்குமாறு செய்திருப்பது உண்மையில் வருந்தக் கூடியதே.

தமிழில் அரைகுறையாய்க் கல்வி கற்று, புலவர்களெனப் பெயர் வைத்துக்கொண்டு வெகுமதிபெற வருகிறவர்களை அரச சபையிற் கூட்டிப் பரீட்சித்து உண்மைக் கவிகளாயின் உயரிய சன்மானஞ் செய்துவித்தும், போலிக் கவிகளாயின் அவர்களை அவமானப்படுத்தியும், நாணச் செய்தும், சிறைப்படுத்தியும், சன்மானஞ் செய்விக்காமல் வந்தவழி யனுப்பியும் வந்தனர் கூத்தர்.

இங்ஙனம் இவர் கொண்ட கொள்கை கல்வியின் அருமையைத் தெரிவிக்கிற ஒரு நல்ல வழியே யன்றி வேறென்ன? இவ்வாறில்லாவிடில் அக்காலத்தும் இக்காலத்துப் போலவே, சிற்றறிவுடையோரும், பேறறிவுடையார் போலவே பண்டிதர், மகா பண்டிதர், கவிராயர், வித்துவான், வித்துவ சிரோமணி என்பவை முதலாகக் கண்டது கண்டபடி பல பட்டப் பெயர்களை யாரும் விரும்பிக் கொடுக்கவேண்டிய அவசியமில்லாமல் தாங்களே சொந்தத்தில் வைத்துக்கொண்டு தாந்தோன்றிகளாய்த் திரிவார்கள். இத்தகைய துர்வழக்கத்தை நிறுத்துவதற்கு ஏதுவாயிருந்ததனால் இவர் செய்துவந்தது தமிழினிடத்துள்ள ஆர்வமென்றே எண்ணத் தகுந்தது

இக்காலத்தில் வழங்குகிற ஆங்கிலபாஷைப் பரீட்சைக்குரிய பட்டங்களை அப்பரீட்சையில் தேருதார் வைத்துக் கொண்டால் குற்றமாவது போலவே முற்காலத்திலும் தகுதியல்லாதார் பட்டப்பெயர்களைப் புனைவது குற்றமாகக் கொண்டனர் போலும். அக்காலத்து அரசர்கள் பிரபுக்கள் முதலாயினோர் தகுதியுடைய பண்டிதர்களின் உயர்வை உள்ளபடி யறிந்து அதற்கேற்ப வெகுமானங்கள் செய்தார்கள் என்பதோடு தகுதியல்லாதார் புலவர்களென நடித்தால், அவர்களைத் தண்டிப்பதற்கு வேண்டிய சாதனமாகவும் இவை யிருந்தன வென்பதில் ஐயமின்றி.

இது ஒப்புக்கொள்ளத் தக்கதும், ஒழுங்கான முறையுமா யிருக்க இதற்கு முரணாக ஒட்டக்கூத்தர், கவிபாடி வருபவர் களைக் காரணமின்றிப் பிடித்துச் சிறைப்படுத்திச் சயலட்சுமி, சம்பத்து லட்சுமி, சகலகலா வல்லி என்னும் இவர்களின் அமி சத்தினளாய்த் தேவி கொலுவீற்றிருந்தருளும் நவராத்திரிக் காலத்து அவர்களை வெளிப்படுத்தி இருவர் இருவராகக் குடுமி யோடு குடுமி முடியிட்டு இறங்கி நிற்ப நிறுத்திப் பிடாரிக்கு இரட்டைக்கடா வெட்டுவது போல் (அப்பிடாரியினுங் கொடியளாயெண்ணிய) அத்தேவி முன், சற்றும் இரக்கமென்ப தில்லாமல் புலவர்கள் தலைகளைப் பதைக்கப் பதைக்க வெட்டி வழக்கமாய்ப் பலிசெலுத்தி வருவது உண்டெனவும், அதுபற் றிக் கூத்தரைக் குறித்துப் பிற்காலத்துக் கவிபொருவர்,

"இரண்டொன்றாய் முடிந்து தலையிறங்கப் போட்டு
வெட்டுதற்கோ கவி யொட்டத் கூத்தனில்லை"

எனப் பாடி யிருக்கின்றனர் எனவும், இவ் வழக்கப்படி புக ழேந்திப் புலவர் சிறைச்சாலையின்கண் இருந்த காலத் திலும் அநேக புலவர்களைப் பிடித்துச் சிறையில் அடைத்து வைக்க, அதை யறிந்து ஐயோ! சண்டாளன், பாவமென் றும் பழியென்றும் பாராமல் தம்மைப் போன்ற புலவர் களை இவ்வாறு சிறைப்படுத்தி வெட்ட மனந்துணிந்தானே என வருத்தங் கொண்டவராய் அச்சிறைச்சாலையில் பலவகைக் குற்றவாளிகளாய் அடைபட்டிருப்பவர்களுள் அம்பட்டன், வண்ணான், வேளாளன், குயவன், கருமான், பொற்கொல்லன், தச்சன் ஆகியவர்களைத் தெரிந்தெடுத்து, அச்சிறையிருப்பி லேயே சம்பிரதாயத்துடன் இலக்கிய இலக்கணங்களைப் பயிற்றுவித்து, அதிசமர்த்த ராம்படி செய்தனர் எனவும்,

பின்னர், நவராத்திரி சமீபித்தபோது பத்தாவது நாளாகிய விஜய தசமியன்று, தேவி சந்நிதிக்கு முன்னே, இரண்டு பக்கங் களிலும் இடப்பட்டிருந்த ஆசனங்களில் கூத்தரும், குமார குலோத்துங்கனும், கத்தியுருவின கையினராய் வீற்றிருப்ப, அடைக்கப்பட்டிருந்த புலவர்களைச் சிறைச்சாலை அதிகாரி சென்றழைக்க, அவர்கள் 'ஐயோ! தெய்வமே! இன்றைக்கு ஏறக்குறைய நூறுபேர்வரையில் அநியாயமாய் இறக்கும்படி நேர்ந்ததேயென வயிறுகலங்கக் கண்ணீர்சொரிய, கால்தள்ளாடி வெளிவர, அதுகண்ட புகழேந்தியார், மனம்வருந்திச் சொற் பக் கவியினரை முன்னு ரனுப்பின் அப்பெருப்புலவன் கேட் கும் அரிய கேள்விகட்கு உரிய விடை கூறாமல் திகைக்க நேரி டும், அதுகண்ட கூத்தன் அவர்களை அநியாயமாய்ப் பதைக்கப் பதைக்க வெட்டியெறிவன் என்றெண்ணி, அன்னவரைப் பின்னிருத்தித் தம்மிடத்தில் சந்தேக விபரீதமறக் கல்விகற்றுத் தேர்ந்த அம்பட்டன் முதலிய எழுவரைமட்டும் ஒருவர்பின் ஒருவராகக் கூத்தர் முன்னே செல்ல விடுத்தனர் எனவும், அவர்கள் அவ்வாறே சென்று கூத்தர் கேட்ட கேள்வி களுக்குத் தக்கவாறு விடைகொடுக்க, அதனால் கூத்தர் அவ மானமடைந்து வெட்கி முகங் கருக அதுகாறும் அவரைப் பிடித்திருந்த அகங்காரமாகிய பேய் விட்டுத் தொலைந்ததெனவும் கதை கற்பித்து அதற்கேற்பப் புனைந்துரைப் பாடல்களைப் புதுக்கியும், நூல்களில் அச்சிட்டும் வழங்கி வருகின்றனர். அப்புனை பாடல்களாவன:—

வினா

" மோனை முத்தமிழ் மும்மத மும்பொழி
யானை முன்வந் தெதிர்த்தவ னாடா ?"

குயவன் விடை

" கூனையுங் குடமுங் குண்டு சட்டியும்
பானையும் வனையு மங்குசப் பையல்யான் "

வினு

" விண்பட்ட கொக்கு வல்லூறு கண்டென்ன விலவிலக்கப்
புண்பட்ட நெஞ்சொடு மிங்குநின்றாய்
பொட்டையாய் புகல்வாய் ?"

அம்பட்டன் விடை

" கண்பொட்டை யாயினும் அம்பட்டனு நான் கவிவாணர் முன்
பண்பட்ட செந்தமிழ் நீயுந் திடுக்கிடப் பாடுவனே " [னே

(கீழ்க் கூறப்படும் ஐவரைக் கூத்தர் வினவியகவி இங்கு மறைந்ததற்குக் காரணந் தெரியக்கூடவில்லை.)

கருமான் விடை.

" செல்வன் புதல்வன் திருவேங் கடவன் ஜெகத்குருவாங்
கொல்லன் கவியைக் குறைசொன்ன பேரைக் குறடுகொண்டு
பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்ட மாட்டிப் பகைவர் முன்னே
அல்லும் பகலு மடிப்பேன் கவியிருப் பாணி கொண்டே."

வேளாளன் விடை.

" கோக்கண்டு மன்னர் குரைகடற் புக்கிலர் கோகனகப்
பூக்கண்டு கொட்டியும் பூவா தொழிந்தில பூவில்விண்ணோர்
காக்கண்ட செங்கைக் கவிச்சக்ர வர்த்திநின் கட்டுரையாம்
பாக்கண் டொழிவர்க ளோதமிழ் பாடிய பாவலரே "

தச்சன் விடை.

" சொன்ன சந்தக் கவியாவருஞ் சொல்லுவர் சொற்சுவைசேர்
இன்ன சந்தக் கவி யேதென்ற போதி லெதிர்த்தவரை

*வன்ன சந்தங்கெட வாயைக் கிழித் திருந்த வாச்சியினாற்*
*கன்ன சந்தங்களினிற் கவி யாப்பைக் கடாவுவனே''*

### பொற்கொல்லன் விடை.

*"திகிரி வட்டக் குடைச் செங்கோ லபயன் செழுஞ்சிலம்பிற்*
*பகுதி யொட்டக்கூத்தப் பட்டனை நாணப் பணைக்கவியின்*
*மிகுத வொட்டத் தட்டி விட்டகை யோட்டி யுருக்கிக் குத்திப்*
*புகுதவொட்டித்தட்டிமேலணுகா வண்ணம்போர்செய்வேனே''*

### வண்ணான் விடை.

*"சேலேய் விழிமட வாரிற்செங் காலன்னஞ் சேர்பழனப்*
*பாலேய் மணவையிற் கூத்த! நின் போலியர் பாப்புனைந்த*
*நூலேய் துகளறத் தூய்தாக்கு நோன்மை நுவல்வதல்லால்*
*மேலேய் தமிழ்ப்புல வோரென்னை யென்ன விளம்புவரே"*

இனி இவற்றின் உண்மை நமது வாதத்தின் முன் எவ்வாறு நிலை நிற்கிறதென்பதை ஈண்டு ஆராய்ந்து, அவ்வாராய்ச்சியில் இவைகள் முழுதும் வெறுங் கற்பனைகள் என்பதை விளங்க வைத்து, உண்மை இதுவெனக் காட்டுவோமாக. நமது ஆராய்ச்சி அடியில் வருமாறு:—

தமிழ் மாதின் பெருமையை யுன்னி முயல்வது பரோப காரியங்களுள் முதன்மையான தெனினும், உளம் நடுங்குறச் செய்யும் இத்தகைய கொடுஞ்செயலை மருவி யிருந்தார் ஒரு புலவரெனின், அவர் எத்தகைய மேலான கவியாயிருப்பினும், எவரும் அங்கீகரிக்கத் துணியார் என்பதே நமது கருத்து. ஆகையால், இவ்வசம்பாவிதத்தை மறைப்பதற்கேற்ற சில காரணங்கூறி மெய்ம்மையை நன்கு விளக்குவோம்.

முதலில் இச்சம்பவத்தைக் குறிக்கும் சாஸன மேனும், சரிதமேனும், மேற்கோளேனும் இதுவரை கிடைத்தில.

"குட்டுதற்கோ" என்ற தலைப்பையுடைய செய்யுளொன்றே இதனைச் சுட்டுவதாக வுள்ளது. அதுவும் மிகச் சமீபத்திலுண்டான தனிப்பாடலே யன்றிப் பழம் பிரபந்தங்களி லிருப்பதாய் ஆதாரமில்லை. கன்ன பரம்பரையாய் வழங்கிவரும் இத்தனிச் செய்யுளை நம்பிப் பிற்காலத்தார் விஷயத்தைச் சற்றுப் பெருக்கி உருவகப்படுத்தி யிருக்கின்றார்களென்பதே எமது துணிபு.

அன்றியும் 'குட்டுதற்கோ' என்ற பாடலில் அமைந்த கருத்தை அறிஞர் கவனித்தல் வேண்டும். அப்பாடலுள் முறையே, பிள்ளைப் பாண்டியரையும், வில்லிபுத்தூரரையும், கூத்தரையும் அமைத்து,

"குட்டுதற்கோ பிள்ளைப்பாண் டியனிங்கில்லை
 குறும்பி யளவாய்க் காதைக் குடைந்து தோண்டி
வெட்டினமட்டறுப்பதற்கோ வில்லியில்லை
 யிரண்டொன்றாய் முடிந்துதலை யிறங்கப்போட்டு
வெட்டுதற்கோ கவியொட்டக் கூத்தனில்லை"—

எனப் பாடியது யாதுபற்றியெனின், கிராமாதிபதி, தேசாதிபதி, புவனாதிபதி என்னும் மூவரும் முறையே 'அடித்தற்றண்டனை' 'அறுத்தற்றண்டனை' 'ஆருயிர்த்தண்டனை' என்னும் மூவகைத் தண்டனைகளைச் செய்யற்குரியராய் இருப்பதுபோல, கவிவீரராகிய பிள்ளைப்பாண்டியனார் 'குட்டுதல்' தண்டனையையும், கவிராசராகிய வில்லிபுத்தூரர் 'கொய்தல்' தண்டனையையும், கவிச்சக்ரவர்த்தியாகிய கூத்தனார் 'கொல்லல்' தண்டனையையும் செய்யற்கு உரியராய் இருந்தனர் என்பதை விளக்குவான் கருதிப் பாடியதேயன்றி வேறல்ல.

இம்மூவருள் ஒருவரும் அத்தகைய தண்டனைகளைச் செய்ததாக யாதொரு சரிதமும் இதுவரையும் கேட்கப்பட

வில்லை. ஆனால், இவர்கள் கல்வியின்கண் முறையே அற்ப வீரமும், அதிவீரமும், அதிதீரவீரமும் படைத்துளாரென ஆன்றோராலும், அவர் செய்த அரும்பாடல்களாலும் அறிகிறோம் ஆனதினாலன்றோ! இப்புலவர்களிருந்த காலத்தில் அற்பக் கவிகளை ஆய்ந்து தேடினும் கிடையாராகி, இக்காலத்தில் அளவிலராகி யிருக்கின்றார்களென்பதற்கு ஆதாரமாக,

"விளையாட்டாய்க் கவிதைதனை விரைந்துபாடித்
தெட்டுதற்கோ வறிவில்லாத் துரைக ளுண்டு
தேசமெங்கும் புலவரெனத் திரியலாமே"

என்று அச்செய்யுளின் பிற்பகுதி காணப்படுகிறது.

அன்றியும் இக்கொலைத் தொழிலைப் புரிந்து வந்தவர் ஒரு புலவரும், அதற்கு உதவியாய் இணங்கியவன் ஓர் அரசனுமன்றோ! இஃது எவ்வளவு பொருத்த முடைத்து என்பதைச் சற்று விசாரிப்போம்.

புலவர்களுக்கு இத்தகைய வன்குணம் வந்திருப்பதை யாண்டும் யாரும் கேட்டிலர். இதனால் புலவராயினோர்க்குக் கொடூர குணமே யிருந்ததில்லை யென்பதல்ல. இவ்வாறு வன்னெஞ்சனாய்க் கொலைப்பாவத்தை யேற்கத் துணிபவனாவனோ புலவன் என்பதுதான் பெருஞ் சங்கை. மேலும் புலவர்கள் இனிய குணத்தராய், யாவரையும் மகிழ்விக்கும் சாந்த குணத்தராய் இருந்து வந்தார்க ளென்பதில் ஆட்சேபமே யில்லை. புலவர்களை அரசர் சமஸ்தானங்களில் வாழ்வித்ததும் இந்நலத்தை எதிர்பார்த்துத் தான். இதனை விட்டு நல்லவோர் சுபதினத்தில் நாடெங்கணும் மகிழ்வெய்தி யிருக்குங் காலைத் தமிழைப் பெரிதும் மதித்து அருமையாய்க் கற்று அதனால் சன்மானம் பெறவரும் புலவர்களைச் சிரத்தோடு சிரஞ்

சேதித்துக் களித்தனரென்றால் இதன் உண்மை எவ்வளவில் உறுதிப் படுமென்பதை இதனை வாசிக்கும் அன்பர்களே நிதானிக்கும்படி கோருகிறோம்.

நவராத்திரிக் காலத்துக் கொலு வீற்றிருந்தருளும் தேவி, நரபலி விரும்பும் காளி, கூளி, காட்டேரி முதலிய துஷ்டதெய்வமல்ல. உமாதேவி, இலக்குமிதேவி, சாரதாதேவி என்னும் முத்தேவிகளின் அம்சத்தினளாய் வைதிகர்களான நான்மறையுணர்ந்த அந்தணராதியோர் வேதாகம கோஷத்துடன் வந்திக்க, மகா மங்களகரத்துடன், சாந்தநிலையினளாய் எழுந்தருளும் முழுமுதற் றேவியாயிற்றே. அத்தேவி முன், மானைப் போன்று துள்ளி நிலைபெறா தலையும் மனது ஒன்றனையே பலி கொடுப்பதல்லது, துரிய வடிவினளாகிய அச்சாந்த முள்ள தேவிக்கு நரபலியும் கொடுப்பதுண்டா? இந்த விதி எந்த ஆகமத்துளது?

மற்றொரு விஷயத்தையும் நோக்கிக் கவனிக்க வேண்டும். காரணமின்றியோர் காரணமில்லை யாதலால், இக்கொலைத் தொழில் எது காரணமாக விருக்கலாம் என ஓர் வினா நிகழும்? பொருள் கருதியேனும் புகழ் கருதியேனும் இருக்கலாமோவென்னில் இல்லை. பொருளும் புகழும் இவ்வழியாகப் பெறுவதற்கு இவர் வீரரன்று. வீரரும் இத்தொழிலைக் கொடூரமாக மதிப்பரென்னில் ஒரு புலவன் செய்யத் துணிவனோ? அவ்வீரர் தமக்கு ஜன்ம விரோதியாயிருந்து தீங்கிழைத்து எதிர்த்துப் போர் செய்யும் பகைவரா யிருப்பினும் போரில் தோற்றுத் தம் வசமானால் அவர்களைத் துணித்தெறியாது பட்ட காயங்களைப் பரிவுடனாற்றி மேற்கொள்ளும் பேரிரக்கத்தை யுடையாரென்னில், புலவர்களுக்குக் கொலைக் குணம் உளதென்பதை யார்தான் ஏற்க முன்வருவர்?

இன்னுமொரு செய்தியையும் ஊன்றிக் கவனிப்போம். புகழேந்திப் புலவர் சிறை யிருந்த காலத்தை வரையறுக்கப் புகின் சற்றேறக்குறைய நாலேந்து மாதமேயாம். இந்த நாலேந்து மாதகாலத்துள், கல்வியுணர்வில் தெளிவில்லாதாராகிய அம்பட்டன் முதல் எழுவரை, அச்சிறை யிருப்பிற்றானே சாம்பிரதாயத்துடன் கல்விகற்பித்து, இலக்கண விலக்கியங்களைப் பயிலுவித்துக் கடின கேள்விகளுக்குக் கவிமூலம் விடையளிக்கத் தக்க சமர்த்தராம்படி செய்தனரென்றால் நம்பத் தக்கதாமா? கல்வி யறியாதார் ஒருகால் ஒப்பினும், தமிழ்கற்றுக் கவிபாடும் கஷ்டமறிந்தார் ஒப்பத்துணிவரோ? "காரிகைகற்றுக் கவிபாடுவதினும், பேரிகை கொட்டிப் பிழைப்பது நன்று" எனத் தமிழர் ஒருவர் வருந்திக் கூறினரெனில், கவிபாடுவது, அதிலும் கடின கேள்விக்குக் கவி மூலம் பதிலளிப்பது எத்தகைய கஷ்டமான தென்பதைத் தமிழன்பர் ஆராய்வாராக.

தமிழ்மாதை அணிபெறச் செய்வான், இங்ஙனம் புலவர் மேற்கொண்டாரென்னில், இவ்வாறு கற்றவர் அனைவரையும் செற்றனரென்றால், யார்தான் தமிழை ஓதுபவராவர்? யார் தான் ஓதிய பயனை எய்துபவராவர்? கல்வியை அபிவிருத்தி செய்யப் பல வழிகளிருக்கக் கொலைத்தொழிலை முன் வைத்துப் படித்த வகுப்பாரை வதைசெய்தனரென்றால் ஒப்ப வுளதோ? அன்றே தமிழணங்கின் வாழ்வு ஒருவாறு முடிந்திருக்குமன்றோ! இவர் அவளை அணிபெறச் செய்வ தெங்ஙனம்?

பொறாமையினால் இதைத் தழுவினரென்னின், அப் பொறாமை எத்தகைத்தோ அறிகிலோம். அஃது எத்தகைய தாயினும் சற்றும் மனமிரங்காமல் வரிசை வரிசையாக வதைத்து வந்தாரென்பது கொள்ளத் தக்கதாமா? இவர் பிறர் பால் பொறாமை கொள்வதற்கு எள்ளளவேனும் ஏதுவில்லை.

இவரே தக்க புலவராயும், மேன்மையுடன் அரசனால் மதிக்கத் தக்க மாண்புடையராயும், அரசனுக்கே ஆசிரியராயும், அளவற்ற செல்வமுடையவராயு மிருக்கும்போது பொறாமை எதற்கு?

தமது பெருவாழ்வால் அகம்பாவ மேற்கொண்டு ஒருகால் கூத்தர் கொலைத்தொழிலைக் கொண்டிருந்தாரென வைத்துக்கொண்டாலும், இவரை ஆதரித்து வரும் அரசன் உடன்படுவானோ வென்பது யோசிக்கத்தக்க விஷயம். தன்னுயிராங்கு மன்னுயிரைக் காக்கவேண்டிய மன்னன், தர்மசாஸ்திர விதியையுங் கடந்து, ஜீவகாருண்யத்தையுந் துறந்து ஒரு புலவனுக்காக மிருகத் தன்மையுடைய கொலைத் தொழிலைச் செய்யும்படி விட்டிருப்பானோ வென்பது கவனித்தற்குரியது. தனது சமஸ்தானப் புலவரும், தனது ஆசிரியருமாகிய கூத்தர் செய்கையைத் தடுப்பதற்கஞ்சித் தமிழை வளம்படுத்தக் காரணமாயுள்ள கருமத்திற்குப் பாதகமேதென அரசன் சம்மதித்தானென்றால், அமைச்சரும், பிரபுக்களும், தகுதிவாய்ந்த நீதிமான்களும், அரசன் பேதைமைக் குணத்திற்கு இடித்துரைத்து அறிவு புகட்டாது வாளாவிருப்பரோ? அக்காலத்தில் அடிக்கடி வேற்றரசர் படையெடுப்பும், இராஜாங்க நிலைமையும் நிலையற்றதாயிருக்க, இக்கொலைத் தொழிலைக் கொண்டிருந்த புலவரும், அவரை ஆதரிக்கத் தோன்றிய அரசனுடைய கதியும் யாதாயிருக்குமென் றெண்ணுவது?

அரசர்களுக்குக் கூறியிருக்கும் நீதி நூல்களில் மாதா, பிதா, குரு, புரோகிதர், புராணிகர், வேதப்பிராமணர், தவசிகள், வித்வசனர், விகடகவிகள், சுத்தவீரர், தானாதிபதிகள், தூதர், சுற்றத்தார், பிணியாளர், வறியர், பாலர், அடைக்கலம் புகுந்

தோர்; போகமாதர் என்னும் இப்பதினெண்மரும் பகைவரானு லும் கொலைபுரிதல் என்னும் கடுந்தண்டனையைச் செலுத்து தல் ஆகாதெனச் சொல்லி யிருக்கின்றதே. அந்நீதி நூலை யுண் டாக்கிய மநுகுலத்தவனான சோழவரசன், அவ்விரண்டிலும் ஒன்று மில்லாதவர்களாய்ச் சிறையிருப்பினின்றும் வந்த ஏழைக் கவிகளைக் கொல்ல மனமிசைவானோ? அன்றியும் சிவாலயப் பிரதிஷ்டை முதலிய புண்ணிய காரியங்களை இடை விடாது செய்து நீதியின் வழிநின்று "ஆடுங்கடைமணி நா வசையாமல் அகிலமெல்லாம் நீடுங் குடையைத் தரித்தபிரான்" என்று புகழ்ந்துபாடும் பெருமையும் உடையவனு? இவ்விழி தொழிலுக்கு உடன்படுவன். ஆகையால் இவ்வகோரச் செயல் நடந்திராதென்றே நாம் நினைக்கவேண்டும். இவ்வசம்பாவிதத்தை நாகரிகமிகுந்த இக்காலத்திலும் அறிவின் மிக்கார் நம்புவரா? என ஆராயாது புத்தகங்களிற் பதிப்பித்து உயர்தர மாணவர் கட்குப் பாட புத்தகமாக ஏற்படுத்திபதற்கு மிகவும் வருந்து கிறோம்.

இக்கொடுஞ் செய்கையைக் கூத்தர் கொண்டிராரென்றால், மற்றும் எவ்வளவோ புலவர்களிருக்க, இவரை மாத்திரம் இத் துணைக் கொடூரமாய் யாவரும் நினைப்பது யாதுகாரணம் பற்றி யென்பதோர் கேள்வி பிறக்கும். இப்புலவர் பெருமான் விக் கிரமசோழனைச் சென்றடுத்தது முதற்கொண்டே மேம்பட்ட செல்வவந்தராய் அரசனது பெருந் தயவையும், அவனது பணி வையும் மேற்கொண்டிருந்தவராவர். இத்தகைய செல்வாக்குப் பெற்றவர் சிறந்த குண சீலராய் நடந்து கொள்வதைத் தவிர்த்துப் பெருமையில் இறுமாந்து அகங்காரமென்னும் பாழும் பேயின் வசப்பட்டு, அரச வையை நாடிச் சன் மானம் பெறவரும் புலவர்களைக் கவனியாமலும், சன்மானம்

செய்விக்காமலும் அசட்டையாயிருக்க, இவைகளைப் பொறுத புலவர்கள் மனம் நொந்து பலவாறு இகழவும், தூற்றவும் தொடங்கி, முடிவில் கொடுஞ் செயல் புரியும் கொலைகாரனென்றும் வதந்தியைப் பரவச்செய்தனர். இதனைப் பலர் வாய்க் கேட்டாரும் உண்மையென நம்பி அவரைத் தூஷிக்கும் பாடல்களைக் கற்பனை வாயிலாகப் புனைந்து உலகம் நம்புமாறு ஓதி வைத்தனரெனலாம். பிற்காலத்து வந்தவரும், இச் சம்பவத்தின் தன்மையைக் கவனியாமல், முன்னோர் முதுமொழி தேவவாக்கெனக் கொண்டு இவைகளை உறுதியென நம்பக் காலாந்தரத்தில் •வாழையடி வாழையாய் மேற்கூறிய வதந்தி பலப்பட்டு, அச்சுயந்திரம் நிலவத்தொடங்கிய இக்காலத்திலும் அறிவின் மிக்கார் ஆராயாது அச்சு வாகனத்திலுமேற்றி வெளியிடத் தொடங்கினர். இதனால் முன்னிலும் பலமாக இவ்வதந்தி பலவிடங்களிலும் பரவி வேரூன்றத் தலைப்பட்டதெனக் கூறலாம். நகங் கொண்டு களைய வேண்டியது கோடரிகொண்டு வெட்டுதற்கு மாயிற்று. " குட்டுதற்கோ " என்று தொடங்கும் செய்யுளில் காணப்படும் செயல்களைக் கூத்தராவது, பிள்ளைப் பாண்டியனாவது, வில்லிபுத்தூராராவது செய்ததாக இதுவரையும் யாதோர் சரிதமும் கேட்கப்படவில்லை யென்று முன்னரும் கூறினோம். இவ்வுண்மையிருக்க,ஒரு தமிழ்ப் பெரியாரை வீணே பழித்துக்கூறி, அவர் சரிதங்களையும் பிழைபடப் பதிப்பித்துத் தமிழுலகை மயங்கச் செய்வ தென்னே ? இதனால் நேர்ந்த பிரயோஜனம் தெளிவின்மையும், ஆராய்ச்சிக் குறைவும் என அறிஞர்களால் பழிக்கப்படுவ தொன்றேயாம்.

இதுகாறுங் கூறிய நமது நியாய வாதங்களால் கூத்தர், புலவர் சிரங்களைக் கொய்த செய்தி புலப்படாமல், பிறது புதுவது புனைந்த புதுமைகளும், பொறாமைகளும், பொய்க்கதை

களுமே புலப்பட்டன. கூத்தர், புலவர் சிரங்களைச் சேதித்தார் என்பதற்கு ஆதார முளதேல், யாரேனும் போதிய ஆதாரங் களுடன் முன்வந்து தெரிவித்து எமது சந்தேகத்தை நிவர்த் திப்பார்களாயின் அவர்கட்கு எமது மறவா நன்றி என்றும் உரியதாகும்.

## புகழேந்தி, கூத்தரைக் கொல்ல முயன்றாரென்பதும் அதன் மெய்ம்மையும்.

இதுபற்றி ஆராயும் முன்னர், இவ்விஷயமாய் 'விநோதரச மஞ்சரி,' 'பாவலர் சரித்திர தீபகம்' முதலிய நூல்களிற் காணப்படும் செய்தியை அவைகளிலுள்ளபடி பதிப்பித்து, அதன்பின்னர் அவைகளிலுள்ள பொய்ம்மைகளையும் புனைந் துரைகளையும் நடுநிலைமையாளரும் சரித்திராசிரியர்களும், சரியென்று நம்புமாறு தெளிவுபெற எடுத்துக்காட்டி உண்மையிதுவென நிலைநிறுத்த உத்தேசித்துள்ளோம். புகழேந் திப் புலவர் பொறாமை காரணமாக ஒட்டக் கூத்தரை அவர் தூங்கும் சமயத்தில் கல்லாலெறிந்து கொல்வதற்குத் துணிந்து அவர் படுக்கையறையில் ஒருவரும் அறியாமல் கட்டிலின் கீழ் ஒளித்துக்கொண் டிருந்தாரென்னும் செய்தியை 'விநோத ரசமஞ்சரி' 'பாவலர் சரித்திர தீபகம்,' 'மெட்ரிகுலேஷன் தமி ழுரைகள்' 'யாழ்ப்பாணப் பேரகராதி' வி. கோ. சூரியநாரா யண சாஸ்திரியார் 'நளவெண்பாப் பதிப்புரை' முதலிய புத் தகங்களெல்லாம் ஒப்புக்கொண்டே பேசுகின்றன. ஆனதால், அச்செய்தியைமுன்னர்ப் படிப்போருணருமாறு இங்குக் குறிப் பிடுவ தவசியமாகின்றது. அது வருமாறு:—

"சிறை நீக்கமடைந்த புகழேந்தியார், உறையூரிற் சிறிது காலம் குலோத்துங்கன் ஆதரணையிலிருந்து வந்தனரெனினும்

அவருக்குச் சோழநாட்டி லிருத்தலும், கூத்தருடன் ஒன்று பட்டு வாழ்தலும் அத்துணை இன்பமாகத் தோன்றாததினால், வேற்றுநாடு புகுவதில் விரைவுகொண்டிருந்தனர். அப்பொழுது, சோழநாட்டைச் சார்ந்த மள்ளுவநாட்டின் தலைநகராகிய 'மூரணூரில்' தமிழிலும், தமிழாராய்வதிலும், கேட்பதிலும், பேணுதலிலும் பேரவாவுடைய 'சந்திரன் சுவர்க்கி' என்னும் குறுநில மன்னன் தலை சிறந்து விளங்கினன். அவனிடம் சென்று வசிப்பதெனத் தீர்மானித்துச் சோழனிடத்து விடை பெற்று அவன் நாடு சென்றடைந்தனர். புலவர் வரவுகண்ட சந்திரன் சுவர்க்கி மிகமகிழ்ந்து, அவரை நல்வரவேற்றுப் பெரிதும் உபசரித்துத் தன்னுடன் சிறிதுகாலம் தங்கியிருக்கும்படி நிரம்ப வேண்டினன். புலவரும் அவன் பெருவிருப்பத்திற் கிணங்கி அம்மூரணை நகரிற்றங்கி இனிது வாழ்ந்து வந்தனர்.

இங்ஙனம் புலவர் அமர்ந்திருக்கும் காலத்தே வடமொழியிலுள்ள நளன் கதையை அம்மொழிவல்ல புலவர், சந்திரன் சுவர்க்கியின் அவைக்களத்தே இனிமைபெற எடுத்தோதி வருவதைச் செவிமடுத்த அவ்வரசன், அருந்தமிழ்வல்ல புகழேந்தியாரை யடுத்து, 'நாவலர் பெரும! வடமொழிப்பாரதத்தி லுள்ள நளனது வரலாற்றைச் செந்தமிழ்ப் பாவினிற் காப்பியமாக யாத்து இனிது முடிப்பின், தங்கள் புலமையின் நலம் யாவரும் உணர்தற்காம்' என்று கூறினன். செந்தமிழ் வாணர் நன்றெனக்கொண்டு அம்மன்னனது செவ்விய உள்ளத்தைப் பாராட்டி அவன் பெருமை உலகுள்ளளவும் நின்று நிலைபெற வேண்டுமென நினைந்து, அந்நளனது வரலாற்றைப் 'புலவர்க்கு வெண்பாப்புலி' யெனச் சிறப்பித்தோதப்பெறூஉம் வெண்பா யாப்பில் நானூற்றுச் சில்லரைச் செய்யுளில் தீஞ்சுவை கனி

சொட்டச் செவ்விதிற்பாடி யாவருங்கேட்டு இன்பவாரிதியி லாழுமாறு அவனது அவைக்களத்தில் அரங்கேற்றினர்.

அக்காவியத்தின் அருமை பெருமைகளை யாவரும் புகழ்ந்து பாராட்டுவதைக் குலோத்துங்கன் கேட்டு மகிழ்ந்து தானும் அக்கவியமுதைப் பருக விரும்பி, தக்காரை விடுத்துப் புலவரை அழைத்துவந்து பெரிதும் உபசரித்துத் 'தனது சமுகத்திலும் அந்நளவெண்பாவைப் பிரசங்கித்து மற்றுமொரு முறை அரங்கேற்றும்படி வேண்டினன். புகழேந்தியும் நன் றெனச் சம்மதித்தனர்.

சோழன் அவைக்களத்தே புலவர் பலர் பெருங்கூட்ட மாகக்கூடி வீற்றிருந்தனர். சமஸ்தானப் புலவர் ஒட்டக்கூத் தரும் பெருமையுடன் அமர்ந்திருந்தனர். அப்போது புக ழேந்தியார் நளவெண்பாவைக் காப்புத்தொடங்கி முறையாக எடுத்து மொழிந்துவந்தனர். யாவரும் அதன் இனிமைக்கு மிக மகிழ்வுற்றுக் கேட்டு ஆனந்தமடைந்தனர். கூத்தர்மட்டும் அழுக்காறடைந்து, தம்மினும் புகழேந்தியார் உயர்ந்து வரு தலுக்கஞ்சி, உள்ளம் ஒடுங்கி, அதனால் அவர் நளவெண் பாவிலே குற்றமென்று சிலவற்றை ஆங்காங்குக் கூறத்தொடங் கினர். புகழேந்தியார்,

" மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லையெனு
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது "

என்னும் பாடலைச் சொல்லிப் பொருள்விரிக்கும்போது கூத்தர், புகழேந்தியாரை நோக்கி, 'இதன்கண் மல்லிகையை வெண் சங்காகவும், வண்டை ஊதுவோனாகவும் உருவகஞ்செய்

துரைத்தது உசிதமே எனினும் ஒக்குமாறன்றென்பது நிச்சயம். ஏனெனின், உலகில் சங்கநாதஞ்செய்வோர் அதன் கீழ்ப்புறத்தே வாய்வைத் தூதுவர் ; வண்டோ மலரின்மேலிருந்தே ஒலிசெய்யும்; இதனை உணர்ந்தும் இங்ஙனம் வருணித்தது இயற்கைப் பொருளுணர்ச்சியின்மைக் குற்றமாம் என்றனர். இதுகேட்ட இன்றமிழ்ப் புகழேந்திப்புலவர், 'கட்குடியனுக்கு வாயென்றும், மற்றொன்றென்றும் தெரியுமோ?' எனச் சாதுரியமாக மறுமொழி தந்தனர். பின்னர்ச்,

" செப்பிளங் கொங்கைமீர் திங்கட் சுடர்பட்டுக்
கொப்புளங் கொண்ட குளிர்வானை—இப்பொழுதும்
மீன்பொதிந்து நின்ற விசும்பென்ப தென்கொலோ
தேன்பொதிந்த வாயாற் றெரிந்து "

என்ற செய்யுளைக் கூறும்போது, கூத்தர், 'நீர் விண்மீன்கள் அடர்ந்த வானத்தைத் திங்கட் சுடர்பட்டுக் கொப்புளங் கொண்ட குளிர்வானென்றது வியக்கத்தக்கதே ; அக்கொப்புளத்திலிருந்து சீயாவது சிலநீராவது வடியுமோ? அதுயாதோ' எனப் பரிகாசமாகக் கேட்டனர். புகழேந்தியார், "சீவடியவில்லை, சிலநீர் வடிவதுண்டு ; அதுதான் பனி" என்று விடையிறுத்து, இன்னும் இது போன்ற ஆட்சேபங்களுக் கெல்லாம் அவ்வப்போதே தக்கவாறு பதிலிறுத்துத் தம் புகழ் நிறுவினர். கம்பர், ஔவையார் முதலிய புலவர்கள் புகழேந்திக்குச் சார்பாய் நின்று பாராட்டினர். எனினும், ஒட்டக்கூத்தர் இவ்வாறு நாடோறும் தம் பாடலிற் குறை கூறுதலைப் புகழேந்திப் புலவர் பொறாராகி, அவரை எவ்வாறேனும் கொன்று விடுதலே தக்கதெனத்துணிந்து, ஒருநாளிரவு, எவரும் அறியாதபடி ஒட்டக்கூத்தரது இல்லஞ்சென்று, அவர் படுக்கையறையின் மஞ்சத்தின்கீழ் அவர் உறங்குகையில்

பருங்கல்லானெறிந்து கொன்றுவிடப் பதுங்கி யிருந்தனர். அங்ஙனம் ஒளித்துக்கொண்ட சிறிது நேரத்திலுள் ஒட்டக்கூத்தர் மனைவி தனது தலைவரை யடுத்து, 'தாங்களேனோ இவ்வாறு உணவின்மீது விருப்பமற்று மனக்கவற்சியெய்துகின்றீர்கள்? காலந் தாழ்த்தாது இனியேனும் வந்துணவுட்கொள்ளுங்கள்' என்று வேண்டினள். ஒட்டக்கூத்தர், 'புகழேந்திப் புலவர் யாத்த நளவெண்பாவின் அமுதம் பருகியவெனக்கு நீயிடும் தீஞ்சுவை யடிசிலின்மீ தார்வம் பிறக்கவில்லை' என்றனர். இச் சொற்கள் நம் புகழேந்தியார் செவிகளில் வீழ்ந்த வளவில் உவகை சிறந்து ஒட்டக்கூத்தர் முன் தோன்றி, 'ஐய, வண்டமிழ் வல்லீர்! நும் மெய்யியல் உணரப் பெறுது நும்மை ஒருகணத்துள் உயிர்போக்கக் கருதிய பாவியேன்' என்று கூறித் தழுவித் தாங் கொணர்ந்த கல்லையுங் காட்டித் தம்மீது பொறை பாராட்டுமாறு அவரை வேண்டிக் கொண்டனர். இஃதுணர்ந்த கூத்தர் களிப்படைந்து புகழேந்தியாரோடும் உளமொத்த நட்புப் பாராட்டுவாராயினர்."

இனி இதன் உண்மை யென்ன வென்பதை ஆராய்வாம்.

புகழேந்திப் புலவர் கூத்தரைக் கொல்லத் துணிந்ததும், அதன் பொருட்டு அவர் கைக்கொண்ட செய்கையும், சில ஏதுக்களால் உண்மையென நம்புதற்கின்றிப்பெரியதோ ரையத்தையே தருகின்றது. ஒருக்கால், அது மெய்யாயிருப்பின் அறிவுடைய எவரும் புகழேந்தியை ஒழுக்கஞ் சிறந்த ஒரு புலவரென ஒரு போதும் கூறத் துணியார். புலமை யென்பதற்கு அறிவுடைமை யென்பது பொருள். அறிவுடைப் பெரியாரொருவர் ஐம்பெரும் பாதகங்களில் ஒன்றுகிய கொலைத் தொழிலைக் கைக்கொள்வாராயின், அவரை அறிவுடைய மகன் என்று எவ்வாறு கொள்வது? நாம் ஊன்றிக் கவனிப்போமாயின் அவர்

அவ்வாறு செய்யத் துணியாரென்பதே துலங்கும். அவரது தன்மை, பெருமை, கடவுட்பக்தி, ஒழுக்கநலம் முதலிய வற்றை உணர்ந்தார் அவரை இத்தொழிற்கு உடன்பட்டா ரெனக் கூறத்துணியார். உண்மையுணராத சில தமிழ்ப் புல வர்களும், தமிழ் வாணர் வரலாறுகளை ஆய்ந்தறியாத சில ஆங் கிலப் பட்டதாரிகளுமே புகழேந்திப் புலவரைக் கொலைத் தொழில் புரியும் வன்னெஞ்சரும், பழிகாரருமென உலகம் நம்புமாறு புத்தகங்களில் அச்சிடத் துணிந்தனர். இவர் அறி யாமைக் கிரங்குகின்றோம்

கூத்தரைப் பற்றிய கதைகளிற் பொய்ச் செய்திகளே பெரிதும் மலிந்து, நாம் நேரில் கண்ட பொருள்கள் உள்ளத் திலே உருப்பெற்றெழுந்து கூத்தாடுவதுபோல், நிகழாத செயல் களும் நிகழ்ந்தது போல் ஓர் உருப் பெற்றெழுந்து புத்துயி ரோடு புகுந்து விளையாடுகின்றன. உள்ளது இல்லது என்ற வேற்றுமை உணர்வையும் உற்றுநோக்காது, உண்மையின்னது, கட்டுக்கதை இன்னது என்றறியாத குழந்தையின் செய்கை யைப் போன்று நடந்துகொண்டிருப்பதைக் கவனிக்குமிடத் துப் பிறரைத் தாழ்த்திப் பேசவேண்டுமென்ற கெடு நினைவு அவர்கள் நல்லறிவை அஞ்ஞானம் என்ற திரையிட்டு மறைத் துவிட்டது போலும். பிறரை இழிவு படுத்தித் தாம் இன்புறு வோரது மகிழ்ச்சி கேவலம் அவலமே யன்றி வேறென்ன?

ஒரு விஷயத்தை வெளியிடுவதன் முன், அதனை நன் காராய்ந்து அதன் குறை குணங்களை ஓர்ந்து அதன் பின்னரே புத்தகங்களில் பதிப்பித்தல் நன்று. அங்ஙனமின்றி ஒருவரை இகழ்வதையே இலக்காகக்கொண்டு மனதில் தோன்றியவா றெல்லாம் விஷயங்களைப் பொருத்தமின்றி முரண்படுமாறு

புனைந்து வெளியிடுவது பழிகாரர் செயலேயன்றி நடுநிலையாளர் நற்செயலாகா.

புதுவது புனைந்த நூல்கள் பேரவையில் அரங்கேற்றப் படும்போது அதில் ஏதேனும் பிழைகள், ஐயங்கள் தோன்று மாயின் அவைகளை அவையின்கண்ணுள்ள அறிவுடைப் பெரி யோர் ஆட்சேபித்து அவைகட்கு நூலாசிரியர் அளிக்கும் சமாதானத்தை அறிவது எப்பொழுதும் வழக்கத்தி லுண்டு. கந்தபுராணத்தை ஸ்ரீ. கச்சியப்ப முனிவர் காஞ்சிபுரம் குமர கோட்டத்தில் அரங்கேற்றத் தொடங்கி விநாயகர் காப்புச் செய்யுளாகிய,

" திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயக
னகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்"

என்னும் முதல் திருவிருத்தத்தைப் படித்துத் 'திகழ் தசக்கரச் செம்முகம் ஐந்துளான்' என்று எடுத்து, விளங்குகின்ற பத்துத் திருக்கரங்களையும், செவ்விய ஐந்து திருமுகங்களையுமுடைய சிவ பெருமானது,' என்று பொருளருளிச் செய்கையில் அச்சபையி லிருந்த தமிழ்ப் புலவர்களில் ஒருவர் எழுந்து, சுவாமிகாள்! 'திகழ்தச' என்பது திகடச எனப் புணர்தற்கு விதியாது ? தொல்காப்பிய முதலிய இலக்கண நூல்களுள் ஒன்றிலாயினும் ஆதார மிருப்பதாகக் காணப்படவில்லையே என்று ஆட்சே பிக்க, முனிவரும் அதனை அங்கீகரித்து மறுநாள் அதற்குரிய ஆதாரங்காட்டிச் சமாதானங்கூறியதும்; மற்றோர்சமயம்விநாயக புராண ஆசிரியர் சென்னையில் தமது புராணத்தை அரங்கேற்று கையில், புலமை சிறந்த பெரியாரொருவரை அக்கூட்டத்திற் கழைக்க, அவர் 'அது என்ன இராமாயணமா? நாம் அங்கு வரு

வதற்கு' என்று கூறி வந்திருக்கையில், புராண ஆசிரியர் முதலில் இராமாயணத்தில் ஆறுபாட்டில் நூறுகுற்றம் காட்டிப் பின் தமது புராணத்தை அரங்கேற்றியதாகவும், (அதுவே இராமாயண சங்கோத்தரம் என்பது) வழக்காறு இருப்பது இவற்றிற்குச் சான்றாம். இம்முறை தமிழ்நாட்டு வழக்கம் இதுகொண்டே கூத்தரும் ஆட்சேபித்ததை நியாயமெனக் கொள்ளாது புகழேந்தியின் வீறுபெற்ற புலமைக்குக் கூத்தர் பொறாமைப்பட்டு வீண் ஆட்சேபம் செய்தாரென்று கதை கற்பித்து அச்சிட்டிருப்பதை அறிவுடைய எவரும் பொறாமையுடைய ஆட்சேபம் எனச் சொல்லத்துணியார்.

புகழேந்தியார் நளவெண்பாவின்கணுள்ள சில செய்யுட்களைப்பற்றி ஒட்டக்கூத்தர் அழுக்காறு காரணமாக வாதம் நிகழ்த்தினரெனக் கூறுதல் பொருந்தாது. ஓரேகாலத்து ஒரு பொருள்பற்றியே பெரும்புலவர்களாகிய புகழேந்தி ஒட்டக்கூத்தர் இருவரும் பாடலுற்ற சில செய்யுட்களால் இவர்கட்குக் கல்வியாலாய வீரம்பற்றிய பகையுளதா மென்ப துணரப் படும். இதனையே தமிழ் நூலார் 'பெருமித'மெனக் கூறுவர். பெருமிதமென்பது, எல்லோருக்கும் மேம்பட்ட நிலையைக் குறித்தலினாலே இதனைத் தமிழறிஞர்கள் பெருமிதம் என வழங்கியது எல்லாவகையாலும் பொருத்தமுடையதாகும். பலருக்கும் மேம்பட்டு நிற்கும் நிலையைப் புறப்பொருளாராய்ச்சி வாணர்கள் முல்லை என்றும் வாகை என்றும் பலவாறு வேறுபிரித்துப் புகழ்வர். இவ்வாறு ஒப்புயர்வற்றுப் பெரியோனாய் நிற்கின்ற நிலையினைப் பெருங் கல்விமானிடத்தும், ஒன்றற்கும் அஞ்சாத மறவன் கண்ணும், என்ன வந்தாலும் இகழத்தக்கன செய்யாது ஒழுக்கத்தழகால் உயர்ந்தோன் பாலும், உயிரும் உடலும் கேட்டாலும் இல்லையென்னாது

கொடுத்தருளும் பெருவள்ளல்கள் மாட்டும் காணலாம். இந்த நான்கிடங்களே பெருமிதத்தின் பிறப்பிடம் எனத் தொல்காப்பியனார்,

"கல்வி தறுகண் இசைமை கொடைஎனச்
சொல்லப் பட்ட பெருமிதம் நான்கே" (மெய்ப்பாட்டியல் 9)

என்று அறுதியிட்டுக் கூறினார். பெருமிதம்—வீரம்.

அறிவாற்றல்களிற் சிறந்த புலவர்கட்கு இன்பமூட்டும் அரியபெரிய வாதம் இவர்கள் நிகழ்த்தினார்களே யன்றித் தங்கள் தகுதிக் கல்லாத சாமானிய தருக்கம் செய்தனர் எனச் செப்புதல் சிறிதும் இசையாதாம். அன்றியும், கூத்தர் வாதத்துக்கு இடமாகக் கொண்டது,

"மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லையெனு
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை அந்திப் பொழுது" (நளவெண்பா 99)

என்பதாம். இந் நளவெண்பாக் கருத்து, பெரியாழ்வார் திருமொழியில்,

"எல்லியம்போ திருஞ்சிறைவண் டெம்பெருமான் குணம்பாடி
மல்லிகைவெண் சங்கூது மதிலரங்க மென்பதுவே !" (8—8)

எனவும்; திருவாசக மருளிய மணிவாசகனார் திருச்சிற்றம்பலக் கோவையில்,

"மல்லிகைப் போதில் வெண்சங்கம் வண்டூத" (364)

எனவும்; எட்டுத் தொகையுள் புறநானூற்றில்,

"காற்ற நாட்டத் தறுகாற் பறவை
சிறுவெள் ளாம்பன் ஞாங்க ரூதும்," (70)

எனவும்; கலித்தொகையில்,

" வரிவண்டு..........நறுமுல்லை பாய்ந்தூதி" (66)

எனவும் நன்கு பயின்றிருப்பதைத் தமது நளவெண்பாவின் கண் அழகுபெற வமைத்திருப்பதை வினாவுக்கு விடையிறுக்கும் முகத்தால் புகழேந்தியார் விளக்க, அவையினர் அறிந்து மகிழ்வர் என்ற கருத்துட்கொண்டே கூத்தர் வினாவியிருப்பரெனக் கருதவேண்டும். தாம் சோழச் சக்கரவர்த்திகள் ஆஸ்தானக் கவிச்சக்கரவர்த்தி ஸ்தானத்திலிருந்து தமது புலமைக்கேற்ப இவ்வரிய வினாவை நிகழ்த்தியது ஆவசியமென்றே கருதுகின்றோம். புகழேந்தியும் இவ்வாறுதான் விடையிறுத்திருப்பரேயன்றிக் கட்குடியனுக்கு, வாயென்றும் மற்றொன்றென்றும் தெரியுமா? என்று இவ்வளவு இழிவாக ஒருபோதும் கூறியிரார்.

வண்டுகளின் ஒலி அகத்தே தோன்றி வாய் வழியாக வரும் என்பதின்றி அவற்றிற்குச் சிறப்பாக அமைந்த அகச்சிறைகளாலும் உண்டாகுமென்பதே அதன் சிறந்த கருத்து. இவ்விதம் கூத்தர் ஆட்சேபஞ் செய்கையில், புகழேந்திப் புலவர் தக்க விடையிறுத்து அவர் நாவையடக்கினர். கம்பநாடரும், அவ்வையாரும் புகழேந்தியாரின் சார்பாகவே சார்ந்து புகழ்ந்தார்கள்.

'கூத்தர் இங்ஙனம் ஆட்சேபஞ் செய்கையில் புகழேந்திப் புலவர் தக்கவிடையிறுத்து அவர் நாவையடக்கினர் கம்பரும், அவ்வையாரும் புகழேந்தியின் சார்பாகச் சார்ந்து புகழ்ந்தார்கள்' என்று மேலே குறிப்பிட்ட கூற்றை நாம் ஆராயின், அதனால் விளங்கும் உண்மையால் இது பொறாமைக் கற்பனையென்பது போதரும். புகழேந்தி யொட்டக்கூத்தருடன் அவ்வையாருமிருந்தார் என்பது எவ்வாற்றானும் நம்பக்கூடாதசெய்தி.

இதனை நாம் மெய்ப்பிப்பதைவிட நம்மினும், பன்மடங்கு கல்வி, புலமை, ஆராய்ச்சி, பட்டம், புகழ், பெருமை முதலிய வைகளால் மேம்பட்ட பெரியாரிருவர் ஆராய்ந்து முடிவுகட்டிய உண்மையைப் பலரும் அறிந்து தெளியுமாறு வெளியிடுவது நலமாகத் தோன்றுவதால் அவைகளை அப்படியே இங்குக் குறிப்பிடுகின்றோம்.

திருவாளர் திருமணம் செல்வகேசவராய முதலியார் M. A. அவர்கள் தமது 'கம்பநாடரில்' (22-ஆம் பக்கம்) கூறுவது:—

"ஔவையார் கம்பர் காலத்தவர் என்பதில் ஐயமும் திரிபும் எழுகின்றன கபிலரகவல் உள்ளபடியே கபிலர் செய்ததாய் அதன் கூற்று உண்மையென்று கொண்டால், ஔவையார் திருவள்ளுவருடன் பிறந்தவர் என்பதும், புறநானூறு முதலியவைகளில் ஔவையார் பாடிய பாக்கள் பலவாய் இருத்தலால் அவரும் கடைச்சங்கக் காலத்தவர் என்பதும் துணியப்படும். திருஞான சம்பந்தர் ஏழாவது நூற்றாண்டுக்கு முற்பட்டவர், ஐந்தாவது நூற்றாண்டுக்கு இப்பாற்பட்டவர் என்பது உறுதிப்பட்ட விஷயம்; "தேவர் குறளும் திருநான்மறை முடிவும், மூவர் தமிழும்...ஒருவாசக மென்றுணர்" என்ற நல்வழி வெண்பாவில் 'மூவர் தமிழும்' என்றது மூவர் தேவாரம். ஆகவே சுந்தரமூர்த்தி நாயனருக்குப் பின்னும் ஔவையார் இருந்தனர்என்று கொள்ளல்வேண்டும். பின்னும் குலோத்துங்க சோழன் காலத்திலும் இருந்தாரெனின், ஔவையார் ஆயிர வருஷகாலம் வசித்திருந்தவர் என நம்புதல் வேண்டும்."

திருவாளர், S. அனவரத விநாயகம்பிள்ளை, M.A., L.T., அவர்கள் தமது 'அவ்வையார் கதைகளின் ஆராய்ச்சியில்' (62 ஆம் பக்கம்) கூறுவது:—

"வேறு சிலர் அவ்வையார் இளமையில் எல்லாம் தம் பெருமை பிறர் அறியாது வாழ்ந்தார்; முதுமையிலேயே உலகம் அவரையறிந்து வழிபட்டுப் பெருமை நன்மைகளை யடைந்தது என்கின்றனர்; இன்னும், அவர் மனிதர்க்கு விதித்த நூறாண்டைக் கடந்து, இருநூற்று நாற்பது வயதுக்குமேலே இவ்வுலகில்வாழ்ந்தமையால் அவருடைய இயற்பெயர் மறைந்து முதியவள் என்கிற பொருளைத் தரும் அவ்வை என்னும் சிறப்பு வந்ததாக எண்ணப்படுகிறது என்பர் விநோதரச மஞ்சரியுடையார். அவர் கூறுவது பொருத்தமுடையதே."

மேற்கூறிய இருவர்களுரைகளால் அவ்வையார், புகழேந்தியொட்டக்கூத்தர் காலத்தவரல்லர் என்பது தெளிவாகத் தெரிவதால், புகழேந்தியின் சார்பில் அவ்வையாரும், கம்பரும் சார்ந்து புகழ்ந்தார்களென்பது எவ்வாறு பொருந்தும்? இதனால் இது புனைந்துரை யென்பதற்கு இவைகளினுஞ் சிறந்த சான்று யாதுவேண்டும்? ஆனதால் இது சுத்தப் பொய்யுரை யென்பதில் ஐயமேயில்லை.

இஃதன்றி, இன்னொரு பெரியாரும், ஆராய்ச்சி வல்லாரும் தமிழ் அகராதிச் சபைத் தமிழ்ப் புலவரும், செந்தமிழ் மாஜிப் பத்திராசிரியருமாகிய ஸ்ரீமத். மு. இராகவையங்கார் அவர்கள் 'செங்குந்தர் பிரபந்தத்திரட்டு ஆராய்ச்சியுரை' 21, 22-ஆம் பக்கங்களில் கூறுவது நமது வாதத்திற்கு ஆதாரமாயிருப்பதால், அதனையும் ஈண்டு வெளியிடுகின்றோம். அது:—

"கூத்தர் காலத்தே புகழேந்திப் புலவரும் பெரும்புலவராய் விளங்கினர் என்பது, முன்னூல்களாலும், கன்ன பரம்பரையாலும் தெளிவாகின்றதாயினும் அவ்விருவர்க்கும் பெரிய மாற்சரியம் உண்டாயதென்று கொண்டு பற்பல கதைகள் கற்பிக்

கப்பட்டு வழங்கிவருவதை, நூலாராய்ச்சியுடையார் நம்பக்கூட வில்லை. உதாரணமாக, புகழேந்தியார் 'நளவெண்பா'வை அரங் கேற்றும்போது "மல்லிகையே வெண்சங்கா வண்டூத" என்ற பாட்டில் ஒட்டக்கூத்தர் நிகழ்த்திய கேள்வியும் புகழேந்தியார் அதற்கு விநோதமாகக் கூறிய விடையும் 'விநோதரசமஞ்சரி' முதலியவற்றில் வழங்குவதைப் பலரும் அறிவர். இவை பிற்கா லத்தார் புனைந்த கற்பனையேயன்றிப் பிறிதன்று" என்பது, 'எல்லியம் போது' 'மல்லிகைப்போதில்' என்ற செய்யுள் களால் தெளிவாம். ஆகவே, முன்னோர் மொழிபொருளையுஞ் சொல்லையும் பொன்னேபோற் போற்றிக் கூறியதை அறியாது கூத்தரும் புகழேந்தியும் தருக்கித்தனர் என்பது கட்டுக் கதையே யென்பது தெளிவு" என்பதாம்.

இன்னும் இதுபற்றி நுணுகி ஆராயின் சில உண்மைகள் வெளிப்படும். அவைகளில் ஒன்று—பெரும் புலவர்களானோர் ஒருவரை யொருவர் வெல்லவேனுங் கொல்லவேனும் நினைந் தால் தங்கள் புலமைத் திறத்தாலேனும், தெய்வபலத்தாலேனும், மற்ற மந்திர தந்திரங்களாலேனும் செய்து முடிப்பது நேர்மை. அது அவர்கட்குப் பெருமையும், புகழுமாம். அது தவிர்ந்து புன்மை யறிவுள்ளவர்கள் செயலை மேற்கொண்டு பள்ளியறை யிற் போய் மறைந்திருந்து, தன்னிலை மறந்து கண்ணயர்ந்து தூங்கும் சமயம் சிரத்திலொரு பெருங்கல்லைப்போட் டுயிர் போக்குதல் அறிவுடைமையா? புன்றொழிலா? என்பதை அறிஞர்கள் கவனித்தல் வேண்டும். அதிலும் கல்வியறிவில் பேராற்றல் வாய்ந்த புகழேந்திப் புலவரை இத்தீத் தொழிற் செய்ய முயன்றனர் என்பதைப் பேதையரும் ஒப்பத் துணி வரோ? இச்செயல் அப்பெரும்புலவரது கனத்தையும், காருண்

யத்தையும் அறவே ஒழிக்கும் என்பதை அறிந்திலர் போலும். இப்புலவர் பெருந்தகை ஜீவகாருண்யத்தில் சிறந்தவரென் பதை ஒரு திருஷ்டாந்தத்தால் விளக்கி மேற்செல்வாம்.

புகழேந்திப் புலவர் கதிர்காமஞ் சென்று செங்கைவேற் பெருமானைச் சிந்தை களிக்கச் சேவித்துத் திரும்புகையில், மயிலொன்று படம் விரித்த பாம்பினைப் பற்றிக் கொல்லத் துணிகையில், புலவர் பொறாராகிப் பரிவுமிகக்கூர்ந்து அம்மஞ் ஞையை நோக்கி,

*"தாயரவை முன்வருத்துஞ் சந்திரோ தயந்தனக்குன்
வாயரவை விட்டுவிட மாட்டாயோ—தீயரவைச்
சீறு மயிற்பெருமான் தென்கதிர்கா மப்பெருமான்
ஏறு மயிற்பெருமா ளே" தமிழ் நாவலர் சரிதை 145.

என்று ஒரு வெண்பாப் பாட அக்கணமே மயில் பாம்பினை விட்டுக் காட்டை அடைந்ததாம். கொடியதாகிய அரவத்தி னிடத்தே அருள் காட்டினாரெனில் இவர்தம் ஜீவகாருண்யமும், செவ்விய சிந்தையும் எத்தகைய சிறந்தனவாகக் காண்கின்றன. இத்தகைய செம்மனச் செல்வரா? ஒட்டக்கூத்தர் தமது கவியை ஆட்சேபித்ததற்கு அவரைக் கொல்லத் துணிவர். இது மிகவும் அடாப்பழியாம்.

---

*தாயர்—செவிலி முதலியோர்; அவை—(அவ்வை) நற்றாய்; இவர்கள் முன் என்க. மயிற்பெருமாளே! (=மயிலரசே!) தாய ரவை முன் வருத்தும் சந்திரனெழுச்சியை உன் வாயிற்கவ்விய அரவைவிட்டு நீக்காயோ என்க. தீயர் அவை—தீயரான அசுரர் குழுவை--[பி. தியரவை—தி. தீயரவை.] அயில்—வேல். தமிழ் நாவலர் சரிதையுள், முன்றொடர்பினை நோக்குமிடத்து இப்பாடல் புகழேந்தியார் வாக்காகக் கருத இடமுண்டு. (செந்தமிழ்-பெருந் திரட்டு).

மற்றொன்று:—

உலகை யொருகுடைக்கீழ் ஓம்பும் பேரரசனோடு சமான ஆசனத்திலிருந்து சகல மந்திராலோசனைகளையும், கலைஞானப் பேருரைகளையும் பீடுபெற விளக்கிச் சிவிகை முதலிய பல சின்னங்களுடன் வருவதும் போவதுமாயுள்ள சமஸ் தானத்துப் புலமை வல்லாரின் செங்கரமானது நன்மணஞ் சிறந்த நாண்மலர்களையும், சுவை நிரம்பிய பெருங் காப்பி யங்களையும், நவரத்தினக் கற்கள் பதித்த பெருவிலை மோதிரங் களையுந் தொடுவதும் சுமப்பதுமன்றிப் பெரும்பாரமான தும், ஒருவர்தலையை யுடைத்து உயிர் போக்குவதுமான கடுங் கருங்கல்லையும் சுமக்கத்தகுவதோ? இவ்வுண்மையை ஓர்ந்துணராது தகுதியில்லாததொரு செயலைத் தக்கா ரொருவர் மேற்கொண்டு செய்யத் துணிந்தாரெனக் கூறுவது பொய்யுடைய புனைந்துரையே யன்றி வேறென்ன? இது கூத்தரை வேண்டுமென்றே நிந்திக்கத்துணிந்த வஞ்சகச் சூழ்ச்சி யென்பது போதரும்.

பின்னொன்று:—

புவிச் சக்கரவர்த்தியைப் போன்று கவிச்சக்கரவர்த்தியா யுள்ள கூத்தருக்கு அவர்தந் தகுதிக்கேற்ப அவர் வசிக்குமிடம் பெருமாளிகையாயிருக்குமே யன்றிச் சிறு வீடாயிராது. அம் மாளிகைக் கேற்றபடி வாயில் காக்கும் காவலாளர் பெருகி யிருப்பர். அதிலவர் படுக்கை யறையின் அந்தப்புரம் பிறர் எக்காரணம் பற்றியுஞ் செல்லமுடியாது. பெண்பாலார் வசிக்கு மிடத்திற் பிறர் செல்லுவதெவ்விதம்? ஒருக்கால் இவர் தனித்துக் காலம் பார்த்திருந்து அசதியில் ஒருவருக்குந் தெரி யாதபடி இரவு வேளையில் சென்றொளித்தல் கூடுமெனி

னும், ஒரு பெருங்கல்லைச் சுமந்துகொண்டு, காவற்காரர் கண்களுக் ககப்படாமல் மறைந்து செல்வது கூடாத காரியம். இவ்வாறு செய்வது களவு செய்வதிலே பழக்கம் பெற்ற தந்திரசாலிகளுக்கே கூடாதாயின், களவு, தீத்தொழில் முதலியன சிறிது முணராது, கல்வியிலும், செல்வத்திலும், நாகரிகத்திலும், பெருந்தன்மையிலும், சீலத்திலும், பரிவிலும், ஈசுரபக்தியிலும், மற்றுமுள்ள எல்லா மாட்சிமைகளிலும் மிக்காராயுள்ள இவ்வுத்தமப் புலவருக்குச் சாத்தியமா? என்பதை அறிஞர்கள் சிந்தித்தல் வேண்டும். இத்தகைய பெருந்தகையர் அத்தகைய புன்றொழிலைச் செய்ய உள்ளத்திலும் நினைப்பரோ ? அங்ஙனம் அவர் நினைத்தனரேல், அவரென்ன கண்டகரா ? கயவரா? முசுடரா ? மூர்க்கரா ? நீசரா ? நெறியிலரா ? மற்றெத்தகையினரெண நினைத்து இத்தகைய பொய்க் கூற்றை அவர் பொருட்டு மிக்க அபிமானத்தோடுங் கற்பித்துப் புகழேந்தியாரைக் கொலைத் தொழில் புரியும் மாபாவியாகச் செய்தனரென நினைக்க மிக வருந்துகிறோம். இச்செயல் குளிக்கப்போய்ச் சேறுபூசிய கதையை நினைவூட்டுகின்றது.

புகழேந்தியாரின் நளவெண்பாவின் சுவை யமுதையும், பொருளழகையும், கருத்தமைதியையும் உள்ளபடி ஊன்றியறிந்துணர்ந்தவர் கூத்தனுரைவிட எவருமே இரார். என்னெனின்,

“ புலமிக் கவரைப் புலமை அறிதல்
புலமிக் கவர்க்கே புலனும் ”

என்னும் முதுமொழிபற்றியாமெனக. வழக்காறு பற்றிக் கூத்தர் செய்த ஆட்சேபத்தைப் பொறாமை காரணமாகச் செய்தாரெனக் குறுகிய நோக்கங்கொண்டு அவரை வீணே

தூற்றிக் குறைவுப்பட்டது மன்றிப் புகழேந்தியாரின் பெரு மைக்குச் சிறுமை தேடியதற்கும் இரங்குகின்றோம்.

இனியேனும் புத்தகங்கள் வெளியிடுவோர் இதுபோன்ற புலவர் சரிதங்களில் பொருளற்ற பாழுஞ் சாதி யபிமானத் தையும் சமயாபிமானத்தையும் மேற்கொண்டு நிகழாத விஷ யத்தை நிகழ்ந்ததாகக் கற்பித்துப் பொய்ச் செய்திகளைப்புகுத் தாமல், உயர்ந்த துறையில் நடுநிலைமையில் நின்று; நுணுகி ஆராய்ந்து அதில் தோன்றும் உண்மைகளைக் கள்ளமின்றிச் சொல்லி உலகிற்கு நன்மை செய்வதைக் கைக்கொள்ளக் கோரு கிறோம்.

நாமிதுகாறுங் கூறிய சில நியாயங்களால், புகழேந்திப் புலவரது நளவெண்பாவின் சில செய்யுட்களைக் கூத்தர் ஆட் சேபித்ததும், அதில் அவர் கொண்டகருத்தும் சுயநலங் கரு திய சிலர் புதுவது புதுக்கிய புனைந்துரைகளும், பொய்ச்செய்தி களும் இன்னவை யென்பது, சரிதப் பரிசீலனையும் கல்வியறி வும் உடையார் எவர்க்கும் விளங்காமற் போகா. எமது அபிப் பிராயம் நூலாசிரியர்களையும், பிறரையும் தூஷிக்கவேண்டு மென்பதல்ல. உண்மைச் செய்திகளை உலகினர்க் குணர்த்தி, நமது தமிழ்ப் பெருமக்கள் வரலாறு பிறர் பழியாதவாறு உயர்வு பெற்று நன்மை பெறவேண்டுமென்பதே எமது நோக்கம்.

## அவ்வையாரும்—கூத்தரும்.

அவ்வையாருக்கும் கூத்தருக்கும் யாதொரு சம்பந்தமும், ஒரு காலத்தவர் என்பதற்குரிய ஆதாரங்களும் இல்லாதிருந் தும், நாம் இம்மகுடமிட நேர்ந்த காரணம், அவ்வையாரையும், கூத்தரையும் ஒருகாலத்தவரென்று பிற்காலத்துப் புலவர் சிலர் கதை கற்பித்து அதற்குவேண்டிய பொய்யையும், புனைந்துரை

களையும் புதுக்கி அச்சுவாகனத்திலேற்றித் தமிழுலகை நம்புமாறு செய்திருக்கும் பொய்க்கூற்றை நியாயவாயிலாக அறவே கண்டித்து அதற்குரிய காரணங்களை ஆராய்ச்சி மூலம் எடுத்துக் காட்டி உண்மையை விளக்கவேண்டுமென்ற அவசரம் பற்றி யென்க. மேற்கூறிய கற்பனைக் கதைக்கு வைப்பு நிதியாய்ப் புனைந்துரைக்கே புகலிடமாயுள்ள 'விநோதரசமஞ்சரி', 'புலவர் புராணம்', 'பாவலர் சரித்திரதீபகம்', 'தமிழ் டேக்ஸ் டுரைகள்' முதலிய புத்தகங்களில் அவ்வையாரும் கூத்தரும் ஒரு காலத்தவரென்பதற்குரிய சம்பந்தமும், காரணமும் காட்டிப் புனைந்துள்ளதை அவைகளிற் காணுகிறபடியே வாசகர்களுணருமாறு இங்குச் சுருக்கிப் பதிப்பித்துப் பின் அவைகளிற் காணுகின்ற பொய்யுரையையும், பொருத்தமற்ற விஷயத்தையும் புலப்படுத்துவோமாக. அவைகள் வருமாறு :—

"ஒருகால் உறையூரிலே குலோத்துங்க சோழன் தன் சமஸ்தான வித்வானை ஒட்டக்கூத்தரும், பட்டமகிஷியுடன் பாண்டி நாட்டிலிருந்து ஸ்திரீதனமாக வந்த புகழேந்திப் புலவரும் தொடர்ந்து வரப் பாதசாரியாய் உலாவி வரும்போது வீதிகளிலொன்றில் ஒருவீட்டுத் தெருத்திண்ணையில் இரண்டு கால்களையும் நீட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்த அவ்வையார் சோழனைக் கண்டவுடன் ஒரு காலை மடக்கிக்கொண்டார். அருகில் புகழேந்திப்புலவர் வருவதைப் பார்த்தவுடனே மற்றைக் காலையும் மடக்கினர். அவர்களைத் தொடர்ந்து வந்த ஒட்டக்கூத்தரைக் கண்டவுடனே இரண்டு கால்களையும் நீட்டினர். இதனைக் கண்ணுற்ற ஒட்டக்கூத்தர் அவமானமுஞ் சீற்றமுங் கொண்டவராய் அவ்வையாரை நோக்கிக், 'கிழவி! இவ்வாறு என்னை அவமதித்ததென்னை?' என, அவ்வையார், 'அரசன் கிரீடாதிபதி யாதலால் அவனுக்கு ஒரு காலையும்,

புகழேந்திப்புலவர் மஹாவித்வானாகையால் அவருக்கு இரண்டு காலையும் மடக்கினேன். நீயோ கல்விநிறைவில்லா வீண்புலமை பாராட்டும் ஒரு மூடனாகையால் இரண்டு காலையும் நீட்டினேன்' என்று விடை சொல்லி, 'உண்மையாகவே நீயும் புகழேந்தியைப் போலச் சிறந்த வித்துவானாயின் சோழனையும், அவன் நாட்டையும், சிறப்பித்துச் சந்திரனுக்குப் பெயராகும் ஒரு பதத்தை ஒரு பாவின் ஈற்றடியில் மூன்றிடங்களில் பிரயோகப் படுத்திப்பாடு பார்ப்போம்' என்றார். ஒட்டக்கூத்தர் அவ்வாறே தம் அரசனாகிய சோழனையே பாட்டுடைத் தலைவனாக வைத்து நற்றாயிரங்கற்றுறையாக,

வெள்ளத் தடங்காச் சினவாளை
வேலிக் கமுகின் மீதேறித்
துள்ளி முகிலைக் கிழித்து மழைத்
துளியோ டிறங்குஞ் சோணாடா
கள்ளக் குறும்பர் குலமறுத்த
கண்டா அண்டர் கோபாலா
* பிள்ளை மதிகண் டப்பேதை
பெரிய மதியு மிழந்தாளே

என்று ஒரு பாட்டுப் பாடினர். இதனைக் கேட்டு அவ்வையார் ஒட்டக்கூத்தரை நோக்கி 'உன்பாவில் ஒருமதி குறைந்ததே' என்னும் பொருளில் சிலேடையாக, 'ஒட்டா, ஒருமதி கெட்டாய்' என்று கூறிப் பின்பு புகழேந்தியாரை நோக்கி, 'நீர் பாடும்' என்றார். அவர் அதே துறையாக,

பங்கப் பழனத் துழுமுழவர்
பலவின் கனியைப் பறித்ததென்று
சங்கிட் டெறியக் குரங்கிளநீர்
தனைக்கொண் டெறியுந் தமிழ்நாடா

---

* பிள்ளை மதிக்கெம் மதியு மென்றன்
பேதை யிழக்கும் பெருமதியே.
என்பது பாட பேதம். இது ஒட்டக்கூத்தர் பாடிய தென்பர்.

கொங்கர்க் கமரர் பதியளித்த
கோவே ராச குலதிலகா
வெங்கட் பிறைக்கும் கரும்பிறைக்கும்
மெலிந்த பிறைக்கும் விழிவேலே.

என்று ஒரு பாவில் மூன்று பிறை வரும்படியாகப் பாடினர். இதனைக் கேட்டு ஒட்டக்கூத்தர் வெட்கி அன்று முதலாகக் கர்வமடங்கி யிருந்தார்." (இக்கதை விநோதரச மஞ்சரியிற் கூறப்பட்டது.)

மற்றொரு வரலாறு:-'அவ்வையார் சோழனுடைய சபையில் தாம் இரண்டு கால்களையும் நீட்டிக்கொண்டு உட்கார்ந் திருப்பர். அக்காலையில் கம்பநாடர் அங்கு வருவாராயின் அவர் வரவைக் கண்ட மாத்திரத்தில் இரண்டு கால்களையும் முடக்குகிறதும், புகழேந்திப் புலவர் வருவதைக் கண்டால் வலக்காலையும், சோழனைக் கண்டால், இடக்காலையும் முடக்கு கிறதும், ஒட்டக்கூத்தரைக் கண்டால் இரண்டு காலையும் நீட்டு கிறதும் வழக்கம். இதைப் பலமுறை ஒட்டக்கூத்தர் கண்டு, இந்த "அவ்வையானவள் சிறந்தவராகிய கம்ப நாடருக்கும், உனக்கும் செய்யும் மரியாதையைப் பற்றி யான் ஒன்றும் சொல்லவில்லை; புகழேந்திக்கு வலக்கால் முடக்குகைக்கும், எனக்கு இருகாலையும் நீட்டியபடி யிருத்தலுக்கும் யாது காரணம்? 'இதை ஔவையினிடத்தில் கேட்டறி?" என்று சோழ ராசனிடத்தில் சொல்லிக்கொண்டனர். அவ்வாறு அவ்வையார் செய்வதைச் சோழராசனுங் கண்டு 'எம் பெருமாட்டியே! ஒட்டக்கூத்தரும், புகழேந்தியாரும் ஒத்த புலவர்களாயிருக்க, ஒட்டக்கூத்தருக்கு இரண்டு காலையும் நீட்டியபடி யிருத்தலும், புகழேந்தியாருக்கு வலக்காலை முடக்கலும் உமக்குத் தகுதியன்றே" என்றனன். "நான்

செய்வது தகுதிதான்" என்று சொல்லி இருவரையும் அழைத்துத் தமது கையால் சில குறிகளைக் காட்டி "இவற்றிற்கிணங்க ஒரு வெண்பாச் செய்வாய்" என்று ஒட்டக்கூத்தரைக் கேட்க, உடனே,

*"இவ்வளவு கண்ணிணு ளிவ்வளவு சிற்றிடையாள்
இவ்வளவே போன்ற........—இவ்வளவு
நைந்த வுடலா ணலமேவு மன்மதன் கை
ஐந்துகணை யால்வாடு வாள்."

என்று பாடினர். அப்புறம் புகழேந்திப் புலவரைப் பார்க்க, அவர், உடனே,

*"ஐய மிடுமின் அறநெறியைக் கைப்பிடிமின்
இவ்வளவே னும்மன்னம் இட்டுண்மின்—தெய்வம்
ஒருவனே யென்று முணரவல் லீரேல்
அருவினைக ளோந்து மறும்"

---

* இவ்விரண்டு செய்யுட்களும், அவ்வையார் உக்கிரப் பெருவழுதியின் காலத்திருந்த சங்கப்புலவர்களை நோக்கித் தம்முடைய ஐந்து விரல்களையுங் குவித்தும், மூடியும், கொஞ்சந் திறந்தும், சுட்டுவிர லொன்றை மாத்திரம் நீட்டியும், ஐந்து விரல்களையும் அகலத்திறந்தும் இவ்வாறான சில குறிகளைக் காட்டி, 'இவற்றிற்குப் பொருள் என்னை?' என்று வினவினர். அவர்கள் அவர் கருத்து அறியாதவர்களாய் ஒரு பெண்ணின் நிலைமையை வர்ணித்து ஒரு வெண்பாச் சொல்லினர். அதுகேட்ட அவ்வையார், நீங்கள் சொல்லியது தவறு என்று அவர்கள் மனம் புழுங்கி வெட்கமடையும்படி, 'ஐயமிடுமின்' என்னும் வெண்பாவால் தாம் கருதிய பொருளை வெளியிட்டனர்" என்று திருவாளர் S. அனவரத விநாயகம் பிள்ளை, M. A., L. T., அவர்கள் பதிப்பித்த அவ்வையார் சரிதம் 1919-ஆம் வருடத்திய பதிப்பு, 34-ஆம் பக்கத்தில் காணப்படுகிறது,

என்று கூறினர். 'சோழனை நோக்கி, "இவ்விருவருடைய கருத்தும் இன்னவென்று தெரிந்துகொண்டாயா?" என்று மீண்டும், அவ்விருவரையும் நோக்கி, அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தத்தின் இறுதியடியில் திங்களின் பெயரிலொன்று பொருள் வேற்றுமையாய் மூன்று முறை வரப் பாடுக?" என ஒட்டக்கூத்தர்,

"வெள்ளத் தடங்கா..........மதியு மிழந்தாளே"

என்ற செய்யுளின் நான்கடியையும் பாடினர். அதுகேட்ட அவ்வையார் "ஒட்டா ஒருமதி கெட்டாய்" என்றனர். உடனே, புகழேந்திப் புலவர்,

"பங்கப் பழனத்..........பிறைக்கும் வேல்விழியே"

என்றனர். இக்கவிகளைக்கேட்டு இவ்விருவருக்குமுள்ள தாரதம்மியத்தை இன்னமும் நீ உணர்ந்திலையோ?" என்று சோழராசனைக் கேட்டனர். அரசன் ஒன்றும் பேசாமல் இருந்துவிட்டனன்! (இது 1916-ஆம் வருஷ மெட்ரிகுலேஷன் தமிழுரை, பச்சையப்பன் கலாசாலைத் தமிழ்ப்புலவர் திரு, கா. ரா. கோவிந்தராஜ முதலியாரவர்கள் பதிப்பு 119-120-ஆம் பக்கங்கள்.)

இக்கதையில் கம்பநாடரைப் புதிதாக முன்வரலாற்றுக்கு முரணாக வருவிக்கப்பட்டிருப்பது அறிஞர்கள் கவனித்தல் வேண்டும்.

பின்னொரு வரலாறு:— "அவ்வையார் நெடுநாளாகச் சோழனுடைய சமஸ்தான வித்வானான ஒட்டக்கூத்தனைப் பார்க்கிலும் சோழன் மனைவிக்குச் சீதனமாக வந்த புகழேந்திப் புலவரே மிகச் சிறந்தவரென மதித்திருந்தார். அங்ஙனமிருக்கச் சோழன் ஒருநாள் தன் சபையில் அவ்வையை நோக்கி 'அவ்வையே! ஒட்டக்கூத்தன் புகழேந்தியாகிய இருவரில்

யார் சிறந்தவர் ?' என்று கேட்டான். அதற்கு அவ்வை தானே புகழேந்தியை உயர்த்திச் சொன்னால் சோழனுக்கு விரோதமாகத் தோன்றும் ஆகையால், அதைக் குறிப்பாய் எல்லோருக்கும் அறியச் செய்யவேண்டுமென் றெண்ணி, ஒட்டக்கூத்தனை நோக்கிச் சந்திரன் என்னும் அர்த்தத்தையுடைய ஒருபதத்தை ஒரு பாவின் ஈற்றடியில் மூன்றிடங்களில் பிரயோகப்படுத்தும் படி சொன்னாள். [முந்திய, 'வெள்ளத்தடங்கா', 'பங்கப் பழனம்' என்ற செய்யுட்களை இதனுடன் கூட்டிக்கொள்க இதுவும் தமிழ் டெக்ஸ்டுரை.]

(ஆராய்ச்சி)

மேற்குறித்த செய்திகள் பெரும் பொய்யும், அசம்பவமும் என்பதை மெய்ப்பிப்பதற்குப் போதிய சான்றிருக்கிறது. முதலாவது, அவ்வையார் புகழேந்தி ஒட்டக்கூத்தர் காலத்தில் இல்லை யென்பதற்கு 'அவ்வையாரும்-கம்பரும்;' 'அவ்வையாரும்-ஒட்டக்கூத்தரும்' என்ற தலைப்பெயர்கள் புனைந்து தாம் ஆராய்ச்சியாலறிந்த உண்மைகளைத் தமது "அவ்வையார்" (Intermediate Examination in Art-1921) என்னும் தமிழ்ப்புத்தகத்தில் திருவாளர் S. அனவரத விநாயகம் பிள்ளை, M. A, L. T., அவர்கள் வெளியிட்டுள்ளதே நமக்குச் சிறந்த ஆதாரமாகக் காணப்படுவதாலும், ஆங்கிலப் பட்டதாரியும், ஆராய்ச்சி யுடையாரும், புலமை சிறந்தாருமாகிய ஒரு பேரறிஞர் அபிப்பிராயம் மதிப்புடையதானதாலும், அவைகளைத் தமிழுலகம் அங்கீகரித் தேற்குமென்று நமக்குத் தோன்றுவதாலும் மேற்குறித்த பொய்ம்மைக்கு மறுப்புரையாகக் கொண்டு அவைகளை இங்கு வேண்டியபடி குறிக்கின்றோம். அவை வருமாறு:—

(1) அவ்வையாரும் - கம்பரும்:- கம்பர், ஒட்டக்கூத்தர் முதலாயினாரையும், அவ்வையாரையும் பிணைக்கும் கதைகளும், அக்கதைகளொடு பட்ட பாடல்களும் எனைப் பலவோ உள. அதனாலேதான் முன்னவ்வை பின்னவ்வை யென்ற பகுப்பு அவசியமென்று முருகதாச சுவாமிகளுக்குந் தோன்றிற்று. அவர்முன் அவ்வையார் கலி மூவாயிரத்திருந்தாரென்றும், பின் அவ்வையார் கலி நாலாயிரத் திருந்தாரென்றும் ஸ்தூலமாகக் கூறி வைத்தார். அதாவது, முன் அவ்வையார் இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன் இருந்தார். பின் அவ்வையார் ஆயிரம் ஆண்டு கட்குமுன் இருந்தார் என்பது. அவ்வையார் இருவர் இருந்தனர் என்று ஒப்புவோமாயின், அவர்காலம் ஏறக்குறைய இவைதான் ஆதல்வேண்டும்.

கதையில் கம்பர் காசுக்குப் பாடினாரென்றும், அவ்வையார் கூழுக்குப் பாடினாரென்றுஞ் சொல்லப்பட்டது. அதனை விளக்க ஒருபாட்டுஞ் சொல்வதுண்டு.

காசுக்குக் கம்பன் கருணைக் கருணகிரி
ஆசுக்குக் காளமுகி லாவனே—தேசுபெறும்
ஊழுக்குக் கூத்தன் உவக்கப் புகழேந்தி
கூழுக்கிங் கவ்வையெனக் கூறு.

இப்பாட்டில் குறித்த புலவரெல்லாம் பிற்காலத்தவரே. இப்பாட்டுச் செய்தவர் அவர்கள் வரலாறு தெரிந்து பாடியவராயின், அவ்வையாரை இறுதியிற் சொல்லுதலால் அவ்வையாரை ஒட்டக்கூத்தர் புகழேந்தியாரோடு சமகாலத்தவரென எண்ணினரென்பதிற் றடையில்லை. மற்று, இப்பாட்டுச் செய்தவர் யாரோ? எல்லாரும் பிற்காலத்தவரென்று பொதுவாகக்கூறலாமேயன்றிச் சமகாலத்தவரெனச் சொல்லுதல் பொருந்ாது. கம்பர் ஒட்டக்கூத்தர் புகழேந்தியார் சமகாலத்தவராகலாம்.

அருணகிரியார் அவர்க்கெல்லாம் முந்நூறாண்டு பின்னும் காளமேகப்புலவர் அவர்க்குப் பின்னும் இருந்தனரென்பது பிரசித்தம். இன்னும், கம்பரையும் ஒட்டக்கூத்தர் புகழேந்தியாரையும் பிணைக்கும் கதைகள் பிற்காலத்துக் கற்பிதம். இவர்கள் கம்பரைப் பார்க்கக் கூடாதபடி மிகப் பிற்பட்ட காலத்தில் இருந்திருத்தல் கூடுமென்றும், கம்பர் ஒட்டக்கூத்தருக்குப் பகைமையுண்டானது முதலிய விருத்தாந்தங்கள் வெறுங் கட்டுக் கதையென்றும் ஆராய்ச்சிவல்ல புலவரிற் சிலர் அபிப்பிராயப் படுகின்றனர். (அவ்வையார் பக்கங்கள் 103-105.)

(2) அவ்வையாரும் ஒட்டக்கூத்தரும் :— அவ்வையார் கம்பர் காலத்திருந்தார் என்னுங் கதைபோலவே அவர் ஒட்டக்கூத்தர் காலத்திருந்தார் என்பதும் சங்கைக்கிடமாம். கம்பர் காலத்து அவ்வையாரொருவர் இருந்தார் என்று உறுதியாகக் கொண்டு அவர் கபிலராதியோர் காலத்திருந்தாரின் வேறுவர் என்று அறுதியிடுவோமாயின், ஒட்டக்கூத்தர் காலத்தும் அவ்வையார் மற்றொருவர் இருந்தார் என்று சொல்லவேண்டி யிருக்கும். ஒட்டக்கூத்தரும் கம்பரும் ஒரே காலத்தவ ரென்பதற்குப் போதிய ஆதாரம் இல்லையன்றோ. அவ்வாறே கபிலராதியோர் காலத்து அவ்வையார் ஒருவர், சேரமான் பெருமாணயனார் காலத்து அவ்வையார் ஒருவர், கம்பர் காலத்து அவ்வையார் ஒருவர், ஒட்டக்கூத்தர் காலத்து அவ்வையார் ஒருவர் என நால்வர் அவ்வையார் இருந்திருத்தல்வேண்டும் என்பாரும் உண்டு.

* * *

இனி, ஒட்டக்கூத்தரையும் அவ்வையாரையும் பிணைக்கும் கதைகளை ஆராய்வோமாயின், அவ்வையார் அரசனுக்கு ஒரு காலையும், புகழேந்திப் புலவருக்கு மற்றைக் காலையும் மடக்கியவர் ஒட்டக்கூத்தருக்கு இருகாலையும் நீள நீட்டினார் என்னுங் கதை புனைந்துரையென்றே தோன்றுகின்றது. ஒட்டக்

கூத்தர் கவிச்சக்கரவர்த்தியென யாவராலும் கொண்டாடப் பட்டவர்; அரசனால் அதிகமாகக் கவுரவிக்கப்பட்டவர்; கம்பரை அவ்வையார் அவமதித்தார் என்று கற்பித்தது போலவே ஒட்டக்கூத்தரையும் அவர் அவமதித்தார் என்று கற்பித்து வைத்தனர். புலவர்க்குள் எப்பொழுதும் பொறாமை உண்டென்பது பிரசித்தம். கம்பருக்கும் ஒட்டக்கூத்தருக்கும் ஏற்பட்ட புகழினைக்கண்டு பொறாமையுற்ற பிற்காலத்துப் புலவர் அவர்களுக்குக் குறைகூற எண்ணி, அவர்களை அவமதித்தற்குத் தக்கவரென்று உலகம் ஒப்புவது தெய்வப் புலமைவாய்ந்த அவ்வையாரம்மையையே யென்று நிச்சயித்து, இக்கதைகளைக் கற்பித்து விட்டிருத்தல்வேண்டும். இக்காலத்தும் கதைகள் கற்பிக்கவும், பாட்டுக்களைப்பாடிக் கதைகளொடு பொருத்தவும், கதைகளையும் பாட்டுக்களையும் பெரும்புலவரொடு பிணைக்கவும் வல்லார் உண்டென்பதையும் அவர்கள் கூசாமல் கற்பனை செய்வர் என்பதையும் அறிந்தார் அவ்வையார் கம்பர் ஒட்டக்கூத்தர் கதைகளை ஏற்றபடி மதிப்பர். மற்றுக் கால்நீட்டிய கதை அவ்வையார் கைலாசத்துக்குச் சென்று சிவ சந்நிதியில் இருந்த வரலாற்றைச் சொல்லும் பொழுது வந்தது.

ஒட்டக்கூத்தரும் புகழேந்தியாரும் வாதமிட்டுப் பாட்டுக்கள் பாடிய துண்டென்பதற்கு அத்தாட்சிகள் ஏற்பட்டுள. ஆயினும் அவ்வையாரே அவரிருவரையும் பாடச்செய்து புலமை சோதித்தனர் என்பது அவசியமன்றே" (அவ்வையார் பக்கங்கள். 107—109.)

மேற்கூறிய பொய்ம்மையை மறுப்பதற்கு இவைகளே போதிய ஆதாரமெனினும், கூத்தர்மீது சுமத்தப்பட்டுள்ள பொருந்தாப்பழிக்கு இவைபோதா. இன்னும் நன்றாக ஆராய்ந்து இப்புனைந்துரைகள் சுத்தப் பொய்யென்பதை நன்கு எடுத்துக்

காட்டி உண்மையை நிலைநாட்ட வேண்டுமென்பது எமது கருத்து. முதலில் அவ்வையார் கால் நீட்டியிருந்தனரா வென்பதைக் கவனிப்போம் : அவ்வையார் என்பவர், அருந்தமிழ்ச் செல்வமும், அநுபவசித்தியும், ஆசுகவிப் புலமையும் வாய்ந்து, உலகியலுக்கேற்ற உண்மை நீதிகளை உள்ளுறப் புகட்டுவதிலும், அரசியலறிவிலும், தெய்வ சிந்தையிலும், ஒழுக்க நலத்திலும் உயர்ந்தோராய்ப் புவிராயரும், கவிராயரும் புகழ்ந்து போற்றும் புலமை மிக்காருமாவர் இத்தகைய நன்னெறிச் செல்வியாய் நலந்திகழ விளங்கிய இப்பெரியார் யாருமற்ற அகதிபோல் தெருத்திண்ணையில் காலை நீட்டி வீற்றிருந்தாரென்பது அவர் தந் தகுதியறிந்த எவரேனும் நம்பத்துணிவரோ? கூத்தரை அவமதிப்பதற்கு அவர்கள் கண்ட நேர்மை வழி யிதுதானோ? புவிராசர் மதிக்கும் பேரறிவுடைய தமிழ்ப் பெருமாட்டி தெருத்திண்ணையிலும், இராச சபையிலும் மரியாதையின்றி அநாகரிகமாய்க் கேவலம் பேதையர்போல் காலை நீட்டி வீற்றிருந்தாரென்பது ஒப்பக்கூடியதாமா? வயதுவந்த கிழவி கால் நீட்டுவதை யாரும் குற்றமென நினையாரெனக் கூறின், பிற கிழவியரைப்போல் இப்புலமைப் பெருமாட்டியைப் பேதையராக்கிப் புகல்வது பொருந்துமா? அன்றியும், ஒரு சமஸ்தானத் தலைமைப் புலவராய், அரசனால் பெரிதும் மதிக்கப்பட்ட தகுதியுடையாரை நிறை மதியுள்ள அவ்வைப் பிராட்டியார் ஒரு சிறிதும் ஆலோசியாமல் "நீயோ கல்வி நிறைவில்லா வீண் புலமை பாராட்டும் ஒரு மூடன்" எனக் கடிந்துரைப்பரோ? அந்தோ! இது நம்பத்தக்கதாமா? அங்ஙனம் அவர் கூறியிருப்பரேல், அவர் கொண்ட தவக்கோலமும், சாந்த நிலையும், உலக நன்மையின் பொருட்டு உளமுவந்தருளிய 'கடிவதுமற' 'சுளிக்கச்சொல்லேல்,' 'கீழோராயினுந் தாழவுரை,' 'ஆறுவதுசினம்' என்னும் நீதிச் சொற்கள் யாதாகும்? அவ்வாறாயின் அவர் உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசும் வஞ்சக நடை

யினர் ; பிறர்க்கொரு வழிசொல்லித் தானொரு வழி நடந்த குற்றமுடையார் என்றின்ன பழிகளை யேற்றல் திண்ணம். ஆனதால், அங்ஙனம் சொல்லியிராரென்றே நம்புகின்றோம்.

இன்னொன்று கவனிப்போம் :— 'இரண்டொன்றாய் முடிந்து தலையிறங்கப் போட்டு வெட்டுவதாகக் கூறும் கோறல் தண்டனைக்கு அதிகாரியான கூத்தரே கல்வி நிறைவில்லா வீண் புலமை பாராட்டும் ஒரு மூடரானால், இதனினுந் தாழ்ந்த 'கோய்தல்' தண்டனைக்கும் ; 'குட்டுதல்' தண்டனைக்கும் அதிகாரிகளான வில்லிபுத்தூராரும் பிள்ளைப் பாண்டியனும் யாதாகுவர் ? இத்தகைய தொழில்களைத் தங்களுக்கு இளைத்த கவிகளிடத்தில் செலுத்தத்தக்க அதிகாரிகள் என்பதனால் அவர்கள் கவியரசின் சீர்த்தி ஒன்றுக்கொன்று மேலா மென்பது கருத்தே யன்றோ. இதன் பொருத்த நிமித்தங் களை ஆராய்ந் தறியாது மனங்கொண்டவாறு செய்தி களை விஸ்வாமித்திர சிருஷ்டி செய்து மணற்சோற்றில் கல்லாராய வைப்பதுபோல் வைத்துப் பெருமை பெறுவதாக நினைக்கும் அறிஞர்களின் செயலுக்குப் பெரிதும் வருந்து கிறோம்.

அல்லாமல், ஒரு செய்யுளின் ஈற்றடியில் 'மதி' யென்னும் பெயரை வேறு பொருட்பட மூன்றுவைத்துப் பாடச் சக்தி யற்றவரா அற்பக் கவிகளைக் கண்டால் இரண்டொன்றாய் முடிந்து தலையிறங்கப் போட்டு வெட்டுவர் ? தாழ் கவிஞர் தலை சாய்த்துத் தக்கோர் தம்பால் நன்மையினால் திறைவாங்கும் கவிச் சக்கிரேசுரராவர் ? தமிழறிவும் நீதிப்புலமையும் பெற்றுச் சக்கர வர்த்தியாய் விளங்கிய சோழனே, "பாடும் புலவர் பணி கொண்ட கூத்தன் பதாம்புயத்தைச், சூடுங் குலோத்துங்க சோழனென்றே எனைச் சொல்லுவரே" என்று ஆசிரிய வணக் கங் கூறித் தலை வணங்குவன்? "ஈட்டியெழுபது" என்னும் பிர

பந்தம்பாடி "ஒட்டக்கூத்தர்" எனச் சிறப்புப் பெயர் பெறுவர்? "தக்கயாகப்பரணி" பாடிக் குடந்தை வீரசிங்காதன மடச் சங்கமக் கொலை தவிர்ந்து அம்மடத்தாரால் முத்துச் சிவிகை பெறுவர்? "கோவையுலாவந்தாதிக் கொட்டக்கூத்தன்" எனச் சிறப்பித்தோதப் பெறுவர்? அவ்வாறு மூன்று மதியைத் பாடுதல், பாடவல்ல கவிவாணர்க்கெல்லாம் சாத்தியமாயிருக்க, இவருக்குமட்டும் அரிதாயிருக்குமா? அச்செய்யுளின் ஈற்றடியின் சீர்களை யூன்றிச் சிந்தித்த மாத்திரமே கல்வியுணர்வில்லாதவரும் இதிலொரு மதி விடப்பட்டதென அறிவார்களே. "ஒட்டா ஒரு மதி கெட்டாய்" என்பதைவிட "ஓரு மதி விட்டாய்" என்றிருந்தால் வரும் இழிவென்ன? உடைந்த கலத்திற்கு ஒட்டுவைத்துப் பற்றுவைப்பதுபோல, ஒரு பதிப்பில் "பிள்ளை மதிகண்டம்பேதை" மற்றொரு பதிப்பில், "பிள்ளை மதிகண்டப்பேதை" வேறொரு பதிப்பில், "பிள்ளை மதிகண்டேபேதை" பின்னொரு பதிப்பில், "பிள்ளை மதி கண்டேம்பேதை" என்றும் ஒருவாறின்றிப் பலவாறு பதிப்பிக்கும் காரணம் அறியக்கூடவில்லை. உண்மை யிருந்தாலல்லவோ ஒரேவிதமாகப் பதிப்பிக்க வியலும்.

மற்றொன்று கவனிப்போம்:—' பின்னொரு வரலாறு" என்ற தலைப்பில் கூறும் கதையில், அவ்வையார் தெருத்திண்ணையிலாவது, கொலுச்சபையிலாவது தமது கால்களை நீட்டிக் கேட்டதாகக் காணோம். கைகளை நீட்டிச் சொன்னதாகவே கண்டோம். இவ்வாறு கைகளை நீட்டிச் சொல்லியதில் அவ்வையார் கூத்தரைப்பார்க்கிலும் புகழேந்தியே சிறந்தவரென மதித்துத் தாமே அவர்மீதிரங்கிச் சொல்லியதாக விருக்கினும் ஒருவாறு பொருந்தும். குமாரகுலோத்துங்கன் தனக்குப் போதகாசிரியரும், சமஸ்தானத்துப் புலவருமான கூத்தரை அவரெதிரி

லேயே மரியாதையின்றி, 'ஒட்டக்கூத்தர் புகழேந்தியாகிய இருவரில் யார் சிறந்தவர் என்று கேட்டனரென்றால், இதனை நல்லறிவுடையார் நம்பத்துணிவரோ? ஆனல், அச் சோழனுக்குத் தனது தேவியின் சீதனப்பொருளான புக ழேந்திப் புலவரைச் சிறையிட்ட காரணத்தால் கூத்தரிடத்தில் முன்னிருந்த அன்பு குறைந்து கேட்டனரென்றால்; அஃ துணர்ந்த அவ்வையார், 'நாமே புகழேந்தியை உயர்த்திச் சொன் னல் சோழனுக்கு விரோதமாகத் தோன்றும்' என்றேன் கருத வேண்டும்? இது பொருத்தமின்றியும், முன்னுக்குப்பின் முரண் படுவதுமாகவன்றோ விருக்கிறது?

புகழேந்தி யொட்டக்கூத்தர் வரலாறுகளில் இதுபோன்ற முரண்கள் காணப்படுவதில் மனது வருந்திய காலஞ்சென்ற திவான்பகதூர். வி. கிருஷ்ணமாசாரியாரவர்கள், தமது "பன்னிருபுலவர் சரிதத்தில்" முதற்பகுதியில் 67-ஆம் பக்கத் தில் அடியில்வருமாறு கூறியிருப்பது இச்சந்தர்ப்பத்திற்குப் பொருத்தமாயிருப்பதால், அதனை அப்படியே குறிப்பிடுகின் றேம். அது,

"இவ்வரலாறுகளுக்குக் கர்ணபரம்பரையைத் தவிர வேறு ஆதாரம் கிடைப்பதுதானும் அரிதாயிருக்க, இக்கர்ண பரம்பரை வரலாறுகளே ஒருவிதமாயில்லை; பலவாறு மாறியும் முன்னெடு பின் முரணியும் வழங்கப்படுகின்றன. இவற்றில் வரும் பல தனிப்பாடல்களில், பாட பேதங்கள் மிகுந்திருக்கின் றன. எல்லாவற்றையும் திரட்டிப் புடைத்துப் பதர்நீக்கி மணி கொள்வது எளிதல்ல. ஆனதுபற்றியேபோலும், இதுகாறும் எவரும் முழுமனதுடன் இம்முயற்சியிற் புகுந்திலர்" என வருவது.

நாம் இதுகாறுங் கூறிவந்த அசப்பாவிதங்கட்கெல்லாம் வைப்புநிதியாகவிருப்பது, 'விநோதரசமஞ்சரி' என்னும் புத்தகமே. இது ஏறக்குறைய ஐம்பது வருடங்கட்குமுன்னம், அஷ்டாவதானம் வீராசாமி செட்டியாரவர்களால், அவரவர்கள், அவசியமாய் அறியவேண்டிய விஷயங்களான 'தெய்வங்கொள்கை', 'கற்றாய்ந்தொழுகல்' 'கற்புநிலைமை' முதலியனவும், 'அவ்வையார்,' 'ஒட்டக்கூத்தர்' 'கம்பர்,' 'காளமேகம்' ஆகிய புலவர்களின் வரலாறு முதலியனவும் கற்கண்டினோடு கல்லுப்பையும் கலந்து வைத்ததுபோல் அச்சிட்டதொன்றல்லாமல், அது ஆய்ந்துணர்ந்த அறிவுடையோரால் அங்கீகரிக்கத் தக்கதல்லவென்பது வெளிப்படை. அவ்விநோதரசமஞ்சரியிலுள்ள கற்பிதக் கதைகளையே ஆதாரமாகக்கொண்டு, தெளிவிலா அறிவினராகி, கல்லூரிகளிற் கற்கும் சிறுவர்களும், பிறரும் படித்து நம்பி யுழலுமாறு இப்பொழுதும் பதிப்பித்து வருவதற்கு வருந்தாதிருக்கக் கூடவில்லை. இவைகளைக் கூர்ந்து ஆலோசிக்குமிடத்து வேண்டுமென்றே ஏதோ ஒரு காரணத்தை மனதுட்கொண்டு ஒட்டக்கூத்தரைத் தூஷிக்கத் தலைப்பட்டதாகக் கருதவேண்டியதா யிருக்கின்றதே யல்லாமல், உண்மை வரலாறுகளை உலகினர்க் குதவி நன்மை செய்யும் நாட்டங் கொண்டிருப்பதாகத் தோன்றவில்லை. மதிப்பும் கல்வியறிவும் மிக்க புலவர்கள் நமது பழந்தமிழ்வாணர் வாழ்நாள் வரலாறுகளை வெளியிடத்தொடங்குமுன், அதன் தன்மை பெருமைகளை ஒரு சேரத் திரட்டி ஆராய்ந்து முன்பின் சம்பந்தம், சரிதமுறை, உண்மை விஷயம், நடுவுநிலைமை இவைகளை நன்றாகச் சிந்தித்துத் தெளிந்து பின் அவற்றில் முயன்று முடிப்பது நன்றும், புகழும், பெருமையுமாம். இவை தவிர்ந்து அழுக்காறு, பழி, சாதி வேற்றுமை முதலியவைகளை உடன்கொண்டு

வாயில் வந்ததையும், மனதிற் றோன்றியதையும், கன்னபாரம்பரைச் செய்திகளையும் காரணமாகக்கொண்டு புத்தகத்தை கிரப்பித் தேகசிரமத்தையும், பொருளழிவையும் அடைந்து நிந்தைக்கு ஆட்படுவது பெருமையாமா? இதுகண்ட பின்னரேனும் உண்மையுணர்ந்து, புனைந்துரை மலிந்த பொய் வரலாறுகளைப் பதிப்பிப்பதினின்றும் நீங்கி நலம் பெறுவாராக.

> "எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்ப தறிவு"

## கம்பரும்—கூத்தரும்.

வால்மீகி முனிவரின் வடமொழி இராமாயண காவியத்தைத் தமிழில் கம்பரும் ஒட்டக்கூத்தரும் வெண்ணெய் நல்லூர்ச் சடையப்பவள்ளல், குலோத்துங்க சோழன் ஆகிய இருவர்களின் வேண்டுகோளுக் கிணங்கப் பாடினார்களென்று 'விநோதரச மஞ்சரி', 'மேட்ரிகுலேஷன் தமிழுரை' முதலிய புத்தகங்களில் அவ்விருவரையும் சேர்த்திருப்பதைத் தவிர, அவ்விருவர்கட்கும் வேறு எத்தகைய சம்பந்தமும், எவ்விடத்திலும் இருந்ததாகத் 'தமிழ் நாவலர் சரிதை,' 'மண்டல சதகங்கள்' முதலியவைகளில் ஒரு சிறு ஆதாரமுங்கூடக் காண்பதற்கில்லை. அல்லாமல், இப்புலவர் பெருமக்கள் இருவரும் சமகாலத்தவரல்லரென்பதும், கம்பர் ஒன்பதாம் நூற்றுண்டில் வாழ்ந்தவரென்பதும், ஒட்டக்கூத்தர் பன்னிரண்டாம் நூற்றுண்டிலிருந்தவரென்பதும் சிலரது வாதம். 9-ஆம் நூற்றுண்டினர் என்பார், காலஞ்சென்ற, பின்னத்தூர். திரு அ நாராயணசாமி ஐயரவர்கள், திரு. வ. வே. சுப்பிரமணிய ஐயரவர்கள், யாழ்ப்பாணத்துச் சுன்னுகம். திரு. அ. குமாரசாமிப் பிள்ளையவர்கள், தற்காலம் ஜீவிய தசையிலுள்ள திருவாளர். மோ. வி. கோவிந்த

ராஜ ஐயங்காரவர்கள் ஆகிய நால்வர். இந்நால்வரும் தத்தம் கொள்கைக்குரிய ஆதாரங்களைத் தத்தமது நூல்களில் பரக்கக் கூறி நிலைநாட்டி யிருக்கின்றனர். அவைகளை அவர்களது 'கம்ப ராமாயண பாலகாண்டப் பதிப்புக்கள்', 'கம்ப நாடர்' முதலிய நூல்களில் கண்டுகொள்க. இவர்களது வாதம்பற்றி யாதுங் கூற நமக்கு ஒரு சிறிதும் ஆற்றலில்லை. விநோதரசமஞ்சரி முதலிய நூல்களில் கம்பரையும் ஒட்டக்கூத்தரையும் இராமாயணம் பாடிய வகையில் ஒன்றுபடுத்தி ஒரு காலத்தவர் என்று கூறி யிருப்பது சுத்தப்பொய்யும் ஆதாரமற்ற செய்தியும் என்பதை மெய்ப்பிப்பதற்கு இதனை எடுத்துக் காட்டத் துணிந்ததே யன்றிப் பிறிதன்று. இதனால், கம்பரும் ஒட்டக்கூத்தரும் ஒரு காலத்தவரல்லரென்று உறுதிப்படுகிறது.

இரண்டாவது—கூத்தர் உத்தரகாண்டம் பாடினாரில்லை. அவரது பெயரைத் தவறுதலாக மருவிய 'வாணியன் தாதன்' (வாணிதாசன்) என்பவரால் பாடப்பட்டதென்று மாஜி செந்தமிழ்ப் பத்திராசிரியர், ஸ்ரீமத் மு. . இராகவையங்காரவர்கள் அதற்குரிய ஏதுக்களுடன் "செங்குந்தர் பிரபந்தத்திரட்டில் பிரபந்த ஆராய்ச்சி யுரை". 22—25. ஆம் பக்கங்களில் கூறியிருக்கின்றனர். இதனாலும், ஒட்டக்கூத்தர் இராமாயண உத்தரகாண்டம் பாடினாரில்லை யென்பது போதருகின்றது.

முதன்மையான இவ்விரண்டு ஆதாரங்களை வைத்துக் கொண்டு, நமது கொள்கையை நிலைநாட்டுவதன்முன், 'விநோதரசமஞ்சரி, 'மெட்ரிகுலேஷன் தமிழுரை' முதலிய புத்தகங்களிற் காணப்படும் கம்பரும், கூத்தரும், இராமாயணம் பாடிய விஷயத்தை வாசகர்க ளுணரும்பொருட்டு அவைகளிற் கண்டபடி இங்குச் சுருங்கக்கூறி, மேற்செல்வது நலமாகக்காண்கிறது. இராமாயணம் பாடிய வரலாறு வருமாறு :—

"திருவெண்ணெய் நல்லூர்ச் 'சடையப்பபிள்ளை' என்பவர் கம்பரை நோக்கி வடமொழியின் கண்ணுள்ள இராமாயணத்தைத் தமிழில் மொழிபெயர்க்குமாறு பலமுறை கூறியும் அதிலவருக்குக் கவனமும், அக்கரையும் பிறவாது, பலமாதங்கள் காலதாமதம் செய்து வந்தாரென்றும், அதனை அப்பிள்ளையவர்கள் குலோத்துங்க சோழனுக்கு அறிவிக்க, அவன் அக்காரியத்தில் இருவரை விடுக்கின், ஒருவருக்கொருவர் விரைவில் பாடிமுடிக்க வேண்டுமென்னும் எண்ணத்தால், துரிதத்திலது நிறைவேறுமென்னுங் கருத்தைக்கொண்டு, ஒட்டக்கூத்தரையும், கம்பரையும் அழைப்பித்து இருவரையும் தனித்தனி பாடும்படி ஆணையிட்டனனென்றும், இவருள் ஒட்டக்கூத்தர் அவ்விராமாயணத்தில் ஏழு முதல் ஐந்து காண்டங்களைப் பாடி முடித்து ஆறுவது காண்டத்தினைத் தொடங்கிக் "கடல்காண் படலம்" பாடும்வரையிற் கம்பர் காப்புச் செய்யுளும் பாடாதிருந்தனரென்றும், இப்படியவர் இருப்பதையுணர்ந்த சடையப்பபிள்ளை அரசனுக்குணர்த்த அரசன் அவரை அழைப்பித்துக் கேட்டபோது கடல்காண் படலத்துக் கப்பால் "சேதுபந்தனப்படலம்" வரையிற் பாடியிருப்பதாகப் பொய் பேசி அப்படலத்தை மாத்திரம் எழுபது செய்யுட்களாற் பாடி முடித்துக் கொண்டுவந்து பிரசங்கித்தனரென்றும், அவற்றுளோர் செய்யுளில் 'துமி' என்னும் பதத்தைக் குறித்துக் கூத்தர் ஆட்சேபிக்க, அதற்குக் கம்பர் கலைமகளைச் சிந்திக்க, அவ ரவர் பொருட்டு இடையர்சேரியில் இடைச்சியாக வந்து மோர் கடைய, அங்கு அரசனையும் கூத்தரையும் அழைத்துப்போய்த் 'துமி' என்னும் பதத்தைப்பற்றி யுண்டான ஆட்சேபனையை யொழித்தனரென்றும், அதன்பின்னர் ஏறக்குறைய ஆறு மாதத்தில் கூத்தர் மற்றிரண்டு காண்டங்களையும் பாடி முடித்துக்

கலைவாணி அருள்பெற்ற கம்பர் கவிக்குமுன் தமது கவி மகிமைப் படாதென்று வெறுப்புற்றுத் தாம் பாடிய அக்காவி யத்தைச் சஞ்சிகை சஞ்சிகையாக வுருவிக் கிழித்துக் கொண் டிருந்தனரென்றும், அக்கால் அங்குத் தற்செயலாகச் செல்ல லுற்ற கம்பரதைக்கண்டு 'ஏன் வருந்திப் பாடியதைக் கிழித் தெறிகின்றீர் ?' எனக் கேட்டதற்கு, 'வாகவியேகவி ; மற்றைக் கவி என்னகவி'' என்றுகூறி எஞ்சியதையுங் கிழித்தற்கு எத்த னிக்க, அப்போது அவர் கையிலிருந்த ஏட்டை அவர் வாங்கிப் பார்க்க உத்தரகாண்டமா யிருக்கக்கண்டு நாம் ஆறு காண்டமாத் திரம் பாடி ஏழாவதற்கு இதனை வைத்துக் கொண்டால் வருத்த மின்றிப்போமென்னும் கருத்தை யுன்னி அதனை மாத்திரம் தரு மாறு கேட்டனரென்றும், அவரப்படியே செய்யுமென்று தர ஓர் நல்லநாட் கொண்டு இராமாயணம் பாடத் தொடங்கிப் பதி னேந்து பகலில் நிதம் எழுநூறாகப் பதினாயிரம் பாடலில் முடித்து, அதனை அரங்கேற்றுதற்குத் தகுந்தவிடம் 'திருவரங்கமே' எனக்கொண்டு, அங்குச் செல்லத் திருவரங் கத்து அந்தணர் சிலர், தில்லை மூவாயிரவர் இடத்துச் சாற்றுக் கவி வாங்கி வந்தால் இங்கு அரங்கேற்றல் ஆகுமென்று கூறக் கம்பர் திருவரங்கத்து அந்தணர் உத்தரவின்படி தாம் பாடிய அக்காவியத்திற்குக் கையொப்பம் வாங்குமாறு அம்மூவாயிர வரும் ஒருங்கு சேரும் தருணம் நோக்கியிருந்தனரென்றும், அது விரைவில் கிட்டாததால் அவர் வருந்தித் துயிலுறுங்கால் அவரது சொப்பனத்தில் தில்லைக் கோவிந்தராஜர் எழுந்தருளி அவர்கள் ஒருங்கு சேரும் சமயம் தெரிவித்தனரெனவும், அஃ துணர்ந் தவர் செல்லுங்கால் மூவாயிரவரும் விட நாகந் தீண்டி இறந்த தம் மகவுக்காக ஒன்று கூடியிருந்தார்களெனவும், அது கண்ட கம்பர் தமது வரவின் காரணத்தை அவர்கட்குத் தெரி

வித்துப் பின்னர்த் தாம் அவர் வேண்டுகோளால் இறந்துள்ள மகனை,

“ஆழியான் பள்ளி யணையே யவன்கடைந்த
வாழி வரையின் மணித்தாய்பே—பூழியான்
பூணே புரமெரித்த பொற்சிலையிற் பூட்டுகின்ற
நாணே யகல நட”

“* மங்கை யொருபாகன் மார்பிலணி யாரமே
பொங்கு கடல்கடைந்த பொற்கயிறே—திங்களையுஞ்
சீறியதன் மேலூருந் தெய்வத் திருநாணே
யேறிய பண்பே யிறங்கு” தமிழ் நாவலர் சரிதை 78, 79.

“பாரைச் சுமந்த படவரவே பங்கயக்கண்
வீரன் கிடந்துறங்கும் மெல்லணையே—யீரமதிச்
செஞ்சடையான் பூணுந் திருவா பரணமே
நஞ்சுடையாய் தூர நட”

எனஇம்மூன்று வெண்பாக்கள்பாடிஉயிர்ப்பித்தாரெனவும், அதனால் தில்லை மூவாயிரவர், கம்பரை யுள்ளபடி தம்மினுஞ் சிறந்த மகாத்மாவென மதித்துப்பயந்து உடனே அவரை உபசரித்துத் தலையில் நெருப்பு விழப்பட்டவர்களைப் போலப் பரபரப்பாக வந்து அவரிடத்திருந்த காவியத்தை வாங்கிப் பார்வையிட்டு இவருக்கொப்பான வித்துவானும், இவ்விராமாயணத்திற்கொப்பான காவியமும் உண்டோவென சிவபெருமானையும் அவர் பெருமையை யுணர்த்தும் சிவாகமங்களையுமே யன்றி ஏனைய தேவர்களையும், ஆகமங்களையுஞ் சொப்பனத்திலும் சிறிதும் மதியாதவர்களான தாமனைவரும் மிகவியந்து, மதித்துத் தங்களுக்

* ‘மங்கையொரு பங்கன் மணிமார்பிலாரமே’ ‘யேறியவாறே யிறங்கு’ என்பன பாடபேதம். முதல் இரண்டு பாடங்களே ‘தமிழ் நாவலர் சரிதை’யில் காணப்படுகின்றன.

குள்ளே பிரமானந்தம் அடைந்தவர்களாயினும், 'குணத்தைமாற்றக் குருவில்லை' என்பதற்கேற்பத் தங்கள் குணம் போகாமல் ஏதேதோ சில அவரைக் கேட்க, அதற்கெல்லாம் அவர் தக்க விடை யளித்தபின் சரியென் றொப்புக் கொண்டு கையொப்பஞ் செய்தனரெனவும், பின் கம்பர் இராமாயணத்தை அரங்கேற்றத் தொடங்கி முடித்து அரசனுதியோரால் தக்கபடி புகழ்ந்து சன்மானிக்கப் பட்டனரென்பதுமே."

(ஆராய்ச்சி)

கம்பரும், கூத்தரும் இராமாயணம் பாடிய வரலாறுபற்றிக் குறிப்பிடும் நூல்கள், 'காலஞ் சென்ற திரு. அ. வீராசாமி செட்டியாரவர்கள் 1889-ஆம் ஆண்டு பதிப்பித்த விநோத ரசமஞ்சரியும், திரு. வை மு. சடகோபராமாநுஜ அய்யங்காரவர்கள் மெட்ரிகுலேஷன் தமிழ் உரைப் புத்தகங்களும், பாவலர் சரித்திர தீபகமும், புலவர் புராணமுமாம். இந்நான்கு புத்தகங்களிலும் விளக்கப்படும் மேற்குறித்த வரலாறு இரண்டொன்றில் சிறிது மாறுபடினும் பெரும்பாலும் தம்முள் ஒத்து வருவதைக் காணலாம். இங்ஙனம் காணப்படும் செய்திகள் இராமாயண ஆசிரியர் கருத்துக்கு முற்றிலும் வேறுபட்டுப் பொருந்தாப் பொருளுரையாய் அறிஞர்கள் அங்கீகரிக்கத் தகாதனவாய் அருவை கொள்ளுந்தன்மையில் அமைந்துள்ளன. இத்தகைய பொய்நிரம்பிய புனைந்துரை வரலாறுகளை உண்மையென நம்பி அறிஞர்கள் இளைஞர்க்கும், உயர்தரமாணவர்கட்கும் பாடமாக வைத்திருப்பது யாது கருதியோ வென்பது நாமறியக்கூடவில்லை. ஒருக்கால் அவற்றின் உண்மை நிலை இது வெனக் கண்டறிய அவகாசம் கிடையாதொழிந்த காரணத்தால் அதனைக்கொள்ள நேர்ந்ததோ? அல்லது இவ்வரலாறுகளை ஆதியில் வெளியிட முன்வந்த புலவர்கள் செவ்வனே ஆராய்ந்து

வெளியிட்டிருக்கக்கூடும் என்ற நம்பிக்கையோ ? மற்றெக் காரணமோ நாமறியோம். எங்ஙனமாயினும் ஆகுக. நாம் கம்பரும் கூத்தரும் இராமாயணம் பாடிய வரலாற்றின் உண்மை என்ன வென்பதைக் கண்டறியும் நோக்கங் கொண்டுள்ளதால் அவ்விஷயம் மட்டும் ஈண்டாராய்தல் செய்வாம்.

பேரறிஞராகிய கம்பரையும் கவிச் சக்கரவர்த்தியாகிய கூத்தரையும் திருவெண்ணெய்ச் சடையப்பராவது, குலோத் துங்கசோழனாவது இராமாயண காவியத்தைத் தனித் தனி பாடும்படி கூறியதற்குப் போதியமேற்கோளாக விநோதரச மஞ்சரி •முதலிய நூல்களில் ஓராதாரமேனுங் காணப்படவில்லை. அருட்கவியாகிய கம்பர் தமக்குள் முதிர்ந்த ஸ்ரீராம பக்தியின் காரணத்தால் ஒருவருஞ் சொல்லாமல் தாமே பாடி முடித்ததாக அவருடைய இதிகாசமாகிய இராமாயணத்தில் சில ஆதாரங்கள் இருக்கின்றன. இவ்வுண்மை யிருக்கச் சோழனும், சடையரும் இராமாயணம் பாடச் சொன்னதாகக் கதை கூறுவது யாங்ஙனம் ?

அன்றியும், இராமாயணச் செய்யுட்கள் ஒவ்வொன்றும் சுவை நிரம்பியதாய், முன்னோர் முதுமொழியைப் பொன்னே போற்றமூவிய கருத்துக்கள் செறிந்ததாய், பொருளாழமும், விழுமிய சிறப்பும் மலிந்ததாய், கற்பனை நிறைந்ததாய், ஓசையின்பம் பயப்பதாய், படிப்பதற்கு இனிமையை உண்டாக்குவதாய் விளங்குகின்றனவே. அவைகளைச் சாதாரணமாக நாளொன்றுக்கு எழுநூறு கவிகளாகப் பதினைந்து பகலில் பாடி முடித்தனர் என அத்துணை எளிதாகக் கூறுவது நிகழாததொரு செய்தி. இது பிள்ளை பெறலின் அருமை அறியாத மலடியின் செய்கையை யொக்கும். இராமாயண காவியத்தை நன்கு படித்து அதன் அளப்பரிய அருமை பெருமைகளை நன்குணர்ந்தவர்கள் ஒருகாலும் இங்ஙனம் கூறத் துணியார்.

இராமாயணத்தின் பாயிரத்தாலேயே கம்பர், ஒருவரால் வேண்டப்படாமல் தாமே பாடத் தொடங்கியதாக வெள்ளிடைமலைபோல் விளங்கிக் கிடக்க, அதன் உண்மையை ஆய்ந்துணராது, வீணே அபசாரப்பட்டனர். இதனால். கம்பரை உயர்த்திக் கூற வெண்ணியோர் பழியே தேடினராவர். இனியேனும் அத்தகையார் இதுபோன்ற பெரியார் வரலாறுகளில் பிழை புகுத்தாது நன்னெறிகளில் ஒழுகி நலம் பெறுவாராக. இராமாயணம் பக்தி முதிர்ச்சியாலே யன்றி ஒருவர் இருவர் வேண்டுகோளாற் பாடப்பட்டதல்ல வென்பதற்குச் சான்று, சேது சமஸ்தான மகா வித்துவானும், ஆராய்ச்சி வல்லாருமாகிய ஸ்ரீமத் ரா. இராகவையங்கார் அவர்கள் மதுரைச் செந்தமிழ்ப் பத்திரிகை. தொகுதி (3) பகுதி (2) 41, 42, 43-ஆம் பக்கங்களில் எழுதிய விஷயத்தையே ஈண்டுத் தருகின்றோம். அது வருமாறு:—

" அரும் பெறன்மணியும், பெரும் பெயரமிழ்துமே நிறையப்பெற்ற பாற்கடல் போலப் பரந்து விளங்குகின்ற இராமாயணம் என்னுந் தெய்வ வான் பனுவலைக் கம்பர் பாடியதற்குக் காரணம் இவரது ஸ்ரீராம பக்தியே யன்றி வேறில்லையென்பது இவர்,

" ஆசை பற்றி யறையலுற் றேன்மற்றிவ்
வேசில் கொற்றத் திராமன் கதையரோ "

எனவும்,

" ஆங்கவன் புகழ்ந்த நாட்டை
யன்பெனு நறவ மாந்தி
மூங்கையான் பேச லுற்றா
னென்னயான் மொழிய லுற்றேன் "

எனவும், இராமாவதாரத்து உரைத்துப் புகுந்தவாற்றால் நன்கறியத்தக்கது. இவர்,

"முத்தமிழ்த் துறை யின்முறை போகிய
உத்தமக் கவிகட் கொன் றுணர்த்துவேன்
பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ"

என்றதும் இக்கருத்தையே வலியுறுத்தும். இவர் வளர்ந்து சிறத்தற்குக் காரணமான சடையவள்ளல் குடிக்கும் இந்த ஸ்ரீராமபக்தி உண்டென்பது அவ்வள்ளற்குச் 'சராமன்' எனப் பெயரிட்டு வழங்கிய வாற்றால் ஊகிக்கப்படும். அக்குடிப் பரிசயம் இவரது பக்திக்கு ஒரு காரணம் ஆயினு மாம். அன்றியும் வான்மீகி முனிவர் திருவாய் மலர்ந்தருளிய ஸ்ரீராமாயணத்தின் திட்பநுட்ப ஒட்பங்களே இவர்காலத்து யாண்டும் பரந்து விளங்கி மேம்பட்டன என்பதும் அக்காலத்து அறிஞரெல்லாம் ஸ்ரீராம காதையை அமிழ்தினும் அதிகமாக மதித்து வந்தனர் என்பதும்,

"வைய மென்னை யிகழவு மாசெனக்
கெய்த வும்மி தியம்புவ தியாதெனிற்
பொய்யில் கேள்விப் புலமையி னோர்புகழ்
தெய்வ மாக்கதை மாட்சி தெரிக்கவே" பாயிரம்

"நொய்தி னொய்யசொன் னூற்கலுற் றேனெனை
வைத வைவின் மராமர மேழ்துளை
யெய்த வெய்தவற் கெய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொன்னின்ற தேயத்தே." ஷை

"வாங்கரும் பாத நான்கும்
வகுத்தவான் மீகியென்பான்
தீங்கவி செவிக ளாரத்
தேவரும் பருகச் செய்தான்" ஷை

* "எறிகட லுலகந் தன்னு ளின்றமிழ்ப் புலவர்க் கெல்லா
முறுவலுக் குரிய தாக மொழிந்தனன் மொழிந்த வென்சொற்
சிறுமையுஞ் சிலேயி ராமன் கதைவழிச் செறித றன்னா
லறிவுடை மாந்தர்க் கெல்லா மமிழ்தமொத் திருக்கு மன்றே"

* இச்செய்யுள் பழைய ஏடுகளில் உள்ளது.

என இவர் இராமாயணத்துள் வழங்கியவாற்றால் உய்த்துணரப்படும். இவ்வாறு அறிஞர் எல்லாம் ஒருங்கு பாராட்டும் ஸ்ரீராம கதையின் தெய்வமாட்சி இப்பெரும் புலவரது அறிவுடைய நெஞ்சினையும் நன்கு கவர்ந்த தாதலின், அதனையே தமது 'செவ்விய மதுரஞ் சேர்ந்த நற்பொருளிற் சீரிய கூரிய தீஞ்சொல் வவ்விய' தமிழ்ப் பாக்களால் பாடிப் புகழ் நிறுத்துதற்கு ஆசைப்பட்டனர் எனினும் அமையும்.

கம்பர் இராமாயணத்தைப் பெரும்பான்மை வெண்ணெய் நல்லூரிலும் சிறுபான்மை ஒற்றியூரிலும் இருந்து பாடினர் எனவும், ஒற்றியூரில் இருந்தபோது இந்நூலை இரவிலே பாடினர் எனவும், அக்காலத்து மாணாக்கர் பலர் பிந்தாமல் எழுதுவதற்கு அவ்வூர்க் காளியைத் தீப்பந்தம் பிடிக்கப் பாடினர் எனவும்,

"தொடை நிரம்பிய தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய்நல் லூர்வயிற் றந்ததே" ஷை

ஒற்றியூர் காக்க வுறைகின்ற காளியே
வெற்றியூர் காகுத்தன் மெய்ச்சரிதை—பற்றியே
நந்தா தெழுதுதற்கு நல்லிரவின் மாணாக்கர்
பிந்தாமற் பந்தம் பிடி. தமிழ்நாவலர் சரிதை.

என வருவனவற்றால் அறியப்படும்.

இனிக் கம்பர் அரவந் தீண்டி யிறந்த தில்லை மூவாயிரவர் மகனை உயிர்ப்பிக்கப் பாடிய மூன்று வெண்பாக்களும் கம்பர் ஏரெழுபது என்னும் நூலை அரங்கேற்றுகையில் திருவெண்ணெய்ச் சடையவள்ளலுட னிருந்து கேட்ட புதுவைச் "சேதிராயன்" என்னும் ஓர் உபகாரியை விடந்தீண்ட, அவன் பொருட்டுப் பாடியதாகக் கம்பர் பாடிய "திருக்கை வழக்கக்" கவியடிகளில் ஒன்றில்,

“ ................................. —பாவலர்தா
மேயெழுப தோதியரங் கேற்றுங் களரியிலே
காரிவிட நாகங் கடிக்குங்கை”

எனவும், இதனுக்கு எடுத்துக் காட்டாகத் “தொண்டைமண்டல சதகத்” தில்,

“அழுவதுங் கொண்டு புலம்பாது நஞ்சுண் டதுமறைத்தே
ரெழுபதுங் கொண்டு புகழ்க் கம்ப வாண னெழுப்ப விசை
முழுவதுங் கொண்டொரு சொற்பேச நெய்யின் முழுகிக்கையின்
மழுவதுங் கொண்டு புகழ் கொண்ட தாற்றொண்டை மண்டலமே”

எனவும் வருவனவற்றால், கம்பர் எதன் பொருட்டு அம் மூன்று பாடல்களும் பாடியிருப்பார் என்பதை அறிவின் மிக்கார் ஊகித்தறிதல் வேண்டும். தில்லை மூவாயிரவர் விஷயமாக இவர் பாடியதற்குத் தக்க சான்றின்மையாலும், ஏரெழுபது விஷயமாகப் பாடியதற்குத் தக்க சான்றுளதாலும் விநோதரச மஞ்சரி முதலிய நூல்களின் வரலாறு பெரும் புனைந்துரையென்பது உணரப்படும்.”

மேலே விவரிக்கப்பட்ட வாற்றால் கம்பர் இராமாயணம் பக்தி காரணமாகப் பாடினரே யன்றி வேறொருவர் வேண்டுகோளாற் பாடவில்லை யென்பதறியப்படும். அங்ஙனம் ஒருவர் வேண்டுகோளாற் பாடப்பட்டதெனின், வில்லிபுத்தூரார் தாம் பாடிய பாரதத்தில் அவர் குமாரர் வரந்தருவார் பாடிய பாயிரத்தில் ‘வக்கபாகை,’ கொங்கர்குல ‘வரபதியாட்கொண்டான்” என்னும் பிரபுவின் வேண்டுகோளின்படி வில்லிபுத்தூரர் பாரத விருத்தம் பாடினர் என்பதை,

“ பிறந்துய்யக் கொண்டவனிப் பேருலகம்
பெருவாழ்வு கூருநாளில்
சிறைந்தபுகழ்ச் சனிநகர்வாழ் வில்லிபுத்தூரனை
நோக்கி நீயு நானும்

பிறந்ததிசைக் கிசைநிற்பப் பாரதமாம்
பெருங்கதையைப் பெரியோர் தங்கள்
சிறந்தசெவிக் கமுதமெனத் தமிழ்மொழியின்
விருத்தத்தாற் செய்க வென்றான் "

எனக் கூறியதுபோல் இராமாயணத்திலும் எங்கேனும் ஓரிடத்தில் குறித்திருக்கவேண்டுமே? ஏன் இல்லை. இதனாலும், விநோதரசமஞ்சரி முதலிய நூல்களிற் கூறப்படுகிற கம்பர் கூத்தர் இராமாயணம் பாடிய வரலாறு நிகழாத சம்பவமென்பதுணரப்படும்.

இனிக் குலோத்துங்கன் இராமாயண காவியத்தை விரைவிற் பாடி முடிக்கக் கம்பரையும், கூத்தரையும் நியமித்தானாயின், அதனைப் பப்பாதியாகப் பகிர்ந்து தந்து கந்தபுராணச் சப்த காண்டங்களையும் கச்சியப்ப சிவாசாரியருங் கோனேரியப்ப நாவலரும்; காஞ்சிப்புராண உபயகாண்டங்களையுஞ் சிவஞான சுவாமிகளுங் கச்சியப்ப முனிவரும் பகிர்ந்து கொண்டு பாடியது போலப் பாடச் செய்தல் விதி. அவ்வாறின்றித் தனித்தனிப் பாடச் செய்தான் என்பதற்குக் காரணம் யாது?

கம்பர் தாம் பேசிய பொய்க்கிணங்கப் பாடிவந்த சேதுபந்தனப் படலத்தில் ஒரு செய்யுளில் 'துளி' என்னும் பதத்திற்கு 'துமி' எனப் பிரயோகித்திருப்பதில் கூத்தர் ஐயங்கொண்டு ஆட்சேபித்தனரென்றால், இத்தகைய பிரயோகங்கள் பல இலக்கிய நூல்களில் எதுகையின் கண்ணும், மோனையின் கண்ணும், இன்னும் பல சீரின் கண்ணும் எத்தனையோ கண்டுந் தாமே கையாடியும் இருக்கு மிவருக்கு அதிற் சந்தேகம் வந்தது மிக ஆச்சரியமே. அன்றியும், இத்தகைய வேற்றுமைகள் தாமோதியுள்ள சிலப்பதிகாரம், சிந்தாமணி முதலிய காவியங்களிலேயே செப்பரிதாயுள்ளன.

இவைகட்கு விதியோ எல்லா இலக்கண நூல்களினும் எண்ணிலவாயுள. இத்தகைய ஒரு சாமானிய செய்கைக்காகக் கலைமகளார் ஓரிடைச்சியாக இடையர் சேரியின்கண் எழுந்தருளி அச்சந்தேகத்தினைத் தீர்த்தது அதனிலும் மிகவியப்பே. இத் தமிழ் நாட்டின்கணுள்ள இலக்கிய நூல்களில் இத்தகைய பிரயோகங்களுக்கெல்லாம் கலைமகளார் வந்துதான் கண்திறக்க வேண்டும் போலும்!

கம்பரைத் தெய்வவருளாற் பாடும் வரகவி எனக் கருதி யஞ்சிக் கூத்தர் தாம்பாடிய இராமாயணத்தைக் கிழித்தெறிந்தனரென்றால், இப்புவியில் இதுகாறும் எத்தனையோ வரகவிகளிருந்து பாடிய பாக்களைக் கண்டு பயந்து எத்தனைப்பேர் தாம் பாடிய நூல்களைக் கிழித்தெறிந்தார்கள்? இடையில் வெறிபிடிக்கப்பட்ட புலவர்களுங்கூடத் தாங்கள்சிரமப்பட்டுப் பாடிய பாக்களைக் கிழித்தெறிய மனங்கொள்ளார்களே. அப்படிக் கூத்தர் உண்மையாகக் 'கடல்காண் படலம்' வரையிற் பாடியிருந்து கம்பர் அதற்குமேல் 'சேதுபந்தனப் படலம்' வரையிற் பாடியுள்ளேன் எனப் பொய்சொல்லிப் பின்னர், பாடிவந்த அப்படலத்தில் கூத்தர் தும்மி என்பதற்குப் பொருள் தெரியாது மயங்கி அது முன்னிலையிற் கம்பர் கலைவாணியின் அருள்பெற்ற வரகவியெனத் தெரிந்து கொண்டாரேல், அப்போதேயன்றோ தாம் பாடிய வரையிற் கிழித்தெறிதல் வேண்டும். அப்பால் ஆறுமாதம் வரையிற் கஷ்டப்பட்டு முன்பாடிய ஐந்து காண்டச் செய்யுள்களோடு கொள்ளற் பாலனவாகிய மற்றை இரண்டு காண்டங்களையும் ஏனவர் வீணே பாடவேண்டும்?

கம்பரது கவிக் கெதிரே தமது கவி கவின்செய்ய மாட்டாதெனக் கிழித்தெறியத் தலைப்பட்ட கூத்தர், 'நான் ஆறு காண்டமே பாடியுள்ளேன், ஏழாவதற்கு இதனை வைத்துக்

கொள்ளுகிறேன்' என அவ்வுத்தர காண்டத்தைக் கம்பர் கேட்டபோது அப்படியே செய்யுமென்று கூறிக் கொடுத்தா ரெனில், தமது கவி அவர் கவிக்குமுன் தாழ்ந்து போமென்று கருதினவர், எப்படி அதில் ஒரு கவியேனுங் கொடுப்பர்? உடனே கிழித்தெறிந்தன வற்றையும் பொறுக்கிச் சேர்த்து அவர் கண்முன்பாகவே நெருப்பிலிட்டுத் அழித்திடுவான்றோ ! அந்தோ ! இவைகளை அறிவின்மிக்கார் யோசிக்குமிடத்து நம்பத் துணிவரோ ?

இனி, தலைப்பிற் கூறிய ஸ்ரீமத் மு. இராகவையங்கார் அவர்கள், கூத்தர் இராமாயணம் பூர்வகாண்டமன்றி உத்தர காண்டமும் பாடினாரில்லை என்பதற்கு, காட்டும் ஆதா ரங்களை அப்படியே இங்கு எடுத்துக்கூறி விநோதரசமஞ்சரி முதலிய நூல்களிற் காணப்படும் இராமாயணம் பாடிய செய்தி பெரும் புனைவென்றே நிலைநிறுத்தி எடுத்துக்கொண்ட விஷ யத்தை இனிது முடிப்பாம். அவர்கள் கூறும் ஆதாரம் வரு மாறு:—

"கூத்தரையும் கம்பரையும் 'இராமாயணம்' பாடும்படி சோழனிட்ட கட்டளைப்படி இருவரும் பாடி முடித்துவிட்டன ரென்றும், இவற்றுட் கம்பரது இராமாயணமே சிறியதாதலை யுணர்ந்து கூத்தர் தாம் பாடியதை வெளியேற்ற விரும்பாது வெறுத்து அதையெழுதிய சுவடியைக்கிழித்து வந்தனரென்றும், தற்செயலாகக் கூத்தரைக் கம்பர் பார்க்கவந்தபோது இச்செயல் நிகழ்ந்ததை அறிந்து, உத்தரகாண்டத்தையேனுங் கிழியாமல் உலகினர்க்கு உதவும்படி வேண்ட அவ்வாறே கூத்தர் செய் தனரென்றும் ஒரு கதை வழங்குவது பலரும் அறிவர். இது உண்மையுடையதன்று. கூத்தர் இராமாயணம் பாடத் தொடங் கியதாக எந்த ஆதாரவுங் காணப்படவில்லை. கூத்தர் வயதால்

மிக முதிர்ந்துள்ள காலத்தில் கம்பர் மிக இளைஞராயிருந்தார். இச்செய்தி சடையவள்ளலின் தந்தைக்கு உதவித் தொழில் செய்துவந்தவர் கூத்தரென்றும், அச்சடைய வள்ளலால் அருமையாக வளர்க்கப்பட்டுக் கலைகள் நிரம்பிக் கவியரசாயினவர் கம்பரென்றும் தமிழ் நாவலர் சரிதை, சோழமண்டல சதகம் முதலியன தெளிவாகக் கூறுதலாற் பெறப்படும்.

கம்பர் இராமாயணம் பாடியது அவரது வாழ்க்கையின் பிற்பகுதியிலாம். அக்காலத்துக் கூத்தர் இருந்தனரோ, இல்லையோ தெரியாது. இருந்தவரே யாயினும் மூன்று தலை முறைகளாகச் சோழர்களது அவையிற் பெரும்புலவராய் இணையற்ற செல்வாக்குப் படைத்திருந்த அப்பெரியவரை, அவரது முதிர்ந்த நிலையில் கம்பர்க்குப் "போட்டி"யாக இராமாயணம் பாடும்படி அரசன் நியமித்தனன் என்பது எவ்வகையாலும் பொருத்தமுடையதன்று. ஆனால் கம்பருடன் பெரிதும் இகலிநின்ற புலவனொருவன் இருந்தனன். இவன் பெயர் 'வாணியன் தாதன்' என்பதாம். இவன், அக்காலத்து விளங்கிய பெருங்கவிகளுள் ஒருவன். தாம் பாடிய 'மும்மணிக்கோவை' யொன்றைக் கம்பர், சோழன் திருமுன்பு அரங்கேற்றியபோது, இவ்வாணியன் தாதன், அதன் முதற்பாட்டின் முதற் சீரிற் குற்றங் கூறினன் என்பது:—

"கைம்மணிச் சீரன்றிச் சீரறியாக் கம்பநா டன்சொன்ன
மும்மணிக் கோவை முதற்சீர் பிழைமுனை வாளெயிற்றுப்
பைம்மணித் துத்திக் கணமணிப் பாந்தட் படம்பிதுங்கச்
செம்மணிக் கண்பிதுங் கப்பதம் பேர்த்த செயதுங்கனே"

என்று இத்தாதன் பாடிய கவி தமிழ் நாவலர் சரிதையிற் காணப்படுவதினின்றுந் தெரியலாம். இவ்வாணியன் தாதற்கு அடிமைப்பட்டவரான "கூவந் தியாகசமுத்திரம்" என்ற ஊரி

னர். ஒருகால் கம்பர் தம்மூர்ப்புறமாகச் சிவிகையிற் பிரயாண மாக வருதலறிந்து திரண்டு சென்று தம்மூர்க்கு வந்து தம் மைப் பாடும்படி வேண்டினரென்றும், தம் பகைவனை வாணி யன் தாதனுக்கு அடிமையான அவ்வூர்க்கு அவர் வந்துபாட மறுத்தனரென்றும், அவ்வூரார் அதற்காக ஒழியாராய்க் கம்பர் சிவிகையை நெடுந்தூரஞ் சுமந்தும் அடைப்பையிட்டும் பெரி தும் வழிபட்டதற்கு உவந்து முடிவில் அவர்களைப் பாடினர் என்றும்,

" ஓங்கிய செந்தமிழ்த் தாதற் கடிமையவ் வூரதனல்
நாங்கவி சொல்வது மில்லை யென்றேகம்ப நாடன்சொல்ல
ஆங்கவ னேறுஞ் சிவிகை சுமந்து மடைப்பையிட்டுந்
தாங்கவி கொண்டது கூவந்தியாக சமுத்திரமே "

என்ற பழைய பாட்டால் விளங்குகின்றன. இத்தாதனுக்குச் சோழன் விருது காள முதலிய வரிசைகளை அளித்துச் சிறப் பித்தபோது, அது பொறாத கம்பர்,

" கூளம் பிடித்தெள்ளின் கோதுவைப் பானங் குலக்கவிக்குக்
காளம் பிடித்திடிற் சின்னம் படுமன்பர் காதலிமார்
வேளம் பிடித்தகண் வெள்ளம் பிடிக்கவெம் பேய்க்கிளம்பேய்
தாளம் பிடிக்கத் தனிவேல் பிடித்த சயதுங்கனே "

தமிழ்நாவலர் சரிதை.

என்று பாடியதாக வழக்குண்மையாலும், அவ்விருவர்க்கும், உள்ளார்ந்த செற்ற மிருந்தமை புலனாகும். கம்பர் இறந்தது கேட்டு ஒட்டக்கூத்தர் பாடியதாக வழங்கும்,

" இன்றன்றோ கம்ப னிறந்தநா ளிப்புவியில்
இன்றன்றோ புன்கவிகட் கேற்றநாள்—இன்றோதான்
பூமடந்தை வாழப் புவிமடந்தை வீற்றிருப்ப
நாமடந்தை நூல்வாங்கு நாள் "

என்ற வெண்பா, அத்தாதன் பாடியதாகவே தமிழ்நாவலர் சரிதை கூறுகின்றது. கம்பர் கூத்தர்க்குள் எவ்வகைச் செற்றமு கிகழக் காலம் வயது முதலியன பொருந்த பெருமையால், அச்செற்றம்பற்றி வழங்குவன யாவுந் தாதனோடு கம்பர்க் கிருந்த பகைமை பற்றியவை என்று கொள்வதே பொருத்தம். இராமாயணம் உத்தரகாண்டம் கூத்தராற் பாடப்பட்டதென் பதற்கு கன்ன பரம்பரையைத் தவிர வேறு தக்க ஆதரவொன் றும் இதுவரை கிடைத்திலது. கம்பரும் வாணியன்தாதனும் அக் காவியத்தை ஒருங்குபாட, அவற்றுட் கம்பர் வாக்கே புலவர் களாற் பெரிதும் போற்றப்பட்டமையால், அத்தாதன், தான் பாடிய இராமாயணத்தை ஒருகால் அங்ஙனங் கிழித்திருக்க லாமேயன்றிக் கூத்தர் அவ்வாறு செய்தனர் என்பது பொருத்த மற்ற தென்றே சொல்லலாம்.

"தாணிலாவுங் கழலபயன் சபையிற் பயிலுத் தரகாண்டம்
வாணிதாத னரங்கேற்ற வைத்தார் சோழ மண்டலமே"

என்ற சோழமண்டல சதகத்தொடரை நோக்கும்போது, இவ் வாணியன் தாதனே அவ்வுத்தர காண்டம் பாடியவனென்று கருத இடந்தருகின்றது. வாணியன் தாதன் என்பது வாணி தாதன் என்று திரிந்து, அது நாமகளருள் பெற்ற கூத்தர்க் குரிய பெயராக மாறிக் கருதப்பட்டதாகவுஞ் சொல்லத்தகும்."

## தக்கயாகப்பரணி பாடியதும், சங்கமக் கோலை தவிர்ந்ததும்.

'தக்கயாகப் பரணி' யென்பது வீரபத்திரக் கடவுளின் வெற்றியை நாற்சீரடிப் பாடல்களால் பாடியதோர் அரிய நூல். 'கலிங்கத்துப் பரணி, மோகவதைப் பரணி, அஞ்ஞவதைப் பரணி' என்பனபோல இதுவு மொன்று. பரணி யென்பது போர் முகத்து ஆயிரங்களிற்று யானையைக்கொன்ற வீரனைத்

தலைமகனைக் கொண்டு, கடவுள் வாழ்த்துங் கடைதிறப்பும், பாலைநிலமுங் காளிகோயிலும், பேய்களோடு காளியுங், காளியோடு பேய்களுஞ் சொல்லத் தான் சொல்லக் கருதிய தலைவன் கீர்த்தி விளங்கலும், அவன் வழியாகப் புறப்பொருள் தோன்ற, வெம்போர்வழங்க விரும்பலும் என்றிவை யெல்லாம் இருசீரடி முச்சீரடி யொழித்தொழிந்த மற்றைய வடியாக, ஈரடிப் பஃறொழிசையாற் பாடுவதாம். இவ்வருநூல், சோழர்களின், ஐந்து அரியணை ஏறும் நகர்களாகிய தில்லை, தஞ்சாவூர், பழையாறை, உறையூர், திருவாரூர் ஆகிய ஐந்தில், பழையாறை (கும்பகோணம் * தாரசுரத்திற்கு அணித்து)யில் இரண்டாவது "இராஜராஜன்" (கி. பி. 1146-1162.) அரசு புரிகின்ற † காலத்தில் கவிச் சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் பாடியது. இப்பரணி பாடப்பட்ட வரலாறு இற்றைக்குச் சுமார் 280 ஆண்டுகட்கு முன்னர் இயற்றப்பட்ட "வீரசிங்காதன புராணத்துள், அகளங்கச் சருக்கம், என்னும் பகுதியிற் காணப் படுகிறது. (இவ்வீரபத்திரப்பரணி) 'தக்கயாகப் பரணி' இன்னும் அச்சிடப் பெறவில்லை. வீரசிங்காதன புராணத்தை 1904-ஆம் ஆண்டில் சிதம்பரம் ஈசானிய மடம் ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள் அச்சிட்டபொழுது, அதனை நன்காராய்ந்து அவற்றுள் காணப்பட்ட வரலாறுகளை இனிய செந்தமிழ் நடையில் எழுதித் தமிழகத்திற்கு உதவியதில் இதனையும் ஒன்றாகத் தந்த அவர்தம் பெருஞ் செயலுக்கு நன்றி பாராட்டுகின்றோம்.

---

* இது ராஜராஜபுரம், என்று கல்வெட்டுக்களில் காணப்படுகிறது.

† "செருந்தந் திரிந்து கலிங்கரோடத் தென்றமிழ்த்
தெய்வப் பரணிகொண்டு வருத்தந் தணிந்துலகாண்ட
பிரான் மைந்தற்கு மைந்தனை வாழ்த்தினவே" தக்கயாகப்பரணி ()
மைந்தற்கு மைந்தன்—இராஜராஜன்.

"சோழ வளநாடு சோறுடைத்து" என்னும் பெருமைக் குறைவிடமாகிய சோழ மண்டலத்திலே,

" புயல்வாய்க்க வளம்பெருக பொய்யாத நான்மறையின்
செயல்வாய்ப்பத் திருமகளும் சயமகளும் சிறந்துவாழ
வெண்மதிபோற் குடைவிளங்க வெல்வேந்த ரடிவணங்க
மண்மடந்தை மனங்களிப்ப மநுநீதி தழைத்தோங்க "

இராஜராஜன் என்னும் சோழர் பெருந்தகை செங்கோலோச்சி வருங்காலத்தில், ஐந்து அரியணைப் பதிகளில் பழையாறையில், தமது அரண்மனைத் தலைப்புலவர் கவிச்சக்கரவர்த்தியுடன் திருவோலக்கத்தில் வீற்றிருந்தபோது, குடந்தை (கும்பகோணம்) வீரசிங்காதன மடத்தில் தவத்தோர் பலர் வாழ்ந்திருந்தனர். அவருளொருவர், முத்தமிழ் விரகராகிய திருஞான சம்பந்தப் பெருமான் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத்தையோதி நாடோறும் பிச்சை யேற்பர். அவர் ஒரு நாள் கவிவல்லாராகிய ஒட்டக்கூத்தர் மனைவாயிலில் நின்று, திருவீழிமிழலைத் திருப் பதிகத்துள்ள,

" கல்லானிழற் கீழாயிடர் காவாயென வானோர்
எல்லாமொரு தோராயயன் மறைபூட்டி நின்றுய்ப்ப
வல்வாயெரி காற்றீர்க்கரிகோல் வாசுகி நாண்கல்
வில்லாலெயி லெய்தானிடம் வீழிம் மிழலையே "

என்ற தேவாரத்தைப் பாடிப் பிச்சை யேற்றனர். அதனை நன்கு செவிமடுத்த கூத்தர், விருப்பமிகும் இன்னிசையோடு பாடியதால், அத்தேவாரத்தின் பொருள் அறியமாட்டாது மயங்கினர். எல்லாம் உணர்ந்த கல்விச் செல்வருக்கு முக்குண வயத்தான் அறிவு மழுங்கலும், அது பாடிய அச்சிவனடியா

ரையே நோக்கி, அத்தேவாரத்தின் பொருளைக் கூறுமாறு கேட்டனர். அவ்வடிகளோ, "தமிழ் மறையாகும் தேவாரத்திற்கும் பொருள் கூறுவார் உளரோ? அங்ஙனம் ஒருவர் அறியுந் தரத்தவோ அத்தெய்வத் திருப்பாடல்கள்! அவற்றின் பொருளை இறைவன் ஒருவனே அறிவன்; அங்ஙனம் இருப்ப நீவிர் கல்விச்செருக்கால் என்னைப் பொருள் கூறுமாறு வினவினீர்! அது தக்கதன்று; நீர் நும்புலமையில் அறிந்தாற்போலப் பொருள் கட்டிக் கூறினும் நான் அதனை ஏற்றுக்கொள்ளேன்" என்று அவரை நோக்கிச் சினக்குறிப்புடன் உரக்க மொழிந்தனர். அது பொறாத கூத்தர்க்குச் சினத்தீ கொதித்தெழுந்தது. 'நாம் கேட்ட கேள்விக்குப் பதில் கூறாது, நம்மை இன்னொன்றறிந்தும், வாயில் வந்தபடி வரம்பு கடந்து பேசுகின்றனை' என்று வெகுண்டு அவரைக் கசையைக் (குதிரைச் சம்மட்டி) கொண்டு ஓர் அடி அடித்தார்; அடித்தபொழுதே அச்சிவனடியார், மெலிந்த மேனியும், தளர்ந்த வயதினராயு மிருந்ததனால், அவ்வடியைப் பொறுக்க ஆற்றாராய்த் தட்டெனத் தரையில் வீழ்ந்து உயிர் துறந்தனர். மாறுபட்ட மனத்துடன் பெருஞ்சினங்கொண்டதால், அழிவற்ற சிவனடியார்க்கு இழிவு நேர்ந்ததற்குப் புலவர் துயருற்று, இவ்வவதிக்கு யாது செய்வதெனத் தோன்றாது, மிகவும் மயங்கிப் பின்னர் வேந்தனிடம் விரைந்து சென்று, நிகழ்ந்தவை முழுதும் சொல்லினர். வேந்தனும் இவ் வெவ்வினைக்கு மிக வருந்தித் துயருற்றனன்.

சிவனடியார் இறந்த செய்தி சிறிது நேரத்திற் கெல்லாம் சிறிது சிறிதாய்ப் பரவி அவரோடு மடத்திலிருந்த மற்ற அடியார்களுக்கும் எட்டியது. எட்டியவுடனே சிறிதுந் தாழ்க்காது அவர்கள் சினந்தெழுந்து, பெருங்கூட்டமாய்த்திரண்டு பேராரவாரத்துடன் மடத்தின் தலைவரை வணங்கி விடைபெற்று,

வில் வாள் அம்பு முதலிய படைகளை யேந்திக் கூத்தரைக்கொல்ல அவர் மனையை அடைந்தனர். அவர் அங்கில்லாமையை யுணர்ந்து, அரசன் அரண்மனை சேர்ந்து, அவர் திருமுன்னர் எய்தி 'வேந்தர் வேந்தே! செங்கோல்கோடாச் செந்நெறிச் செல்வனே ! குற்றமொன்றும் புரியாத எங்கள் மடத்து அடியவரொருவரைக் கூத்தர் கொலை புரிந்தார். இவ் வன்செயலுக்குத் தக்க தண்டனையைக் கூத்தற்கு வழங்கிச் செய்வன செய்தல் வேண்டு' மென்று முறையிட்டனர்.

அவர் முறைப்பாடு கேட்ட மன்னன், 'சிவபெருமானுக்குரிய வடிவம் ஆசிரியர், கந்தழி, அடியவர் என்று மூன்றாகு மென்று மறைகள் முழங்குகின்றன. இவ்வொட்டக்கூத்தர், இவற்றை யெல்லாம் அறிந்திருந்தும், 'சினமுறு பொழுது புத்திகுன்றுவ' தெனும் இயல்பின்படி, முன் கோபங்கொண்டு தம்மனையிற் பிச்சைக் கெய்தி யாதொரு குற்றமுமிலாராய் நின்ற சிவனடியாரைக் கொன்றனர். இவர்க்கு யாது கூறுவேன்' எனச் சிறிது நேரஞ் சிந்தித்துப் பின் ஒன்றை மனத்துட் கொண்டு, அவ்வடியவர்களை நோக்கி, 'அடிகளே! இத்தீய கொலைக்கு அறநூல்களில் விதித்தவாறே யான் கழுவாய் புரிவேன் ; தாங்கள் கொண்ட சினந் தணிமின்' என்று தாழ்ந்து கூறிப் பணிந்தனன். அடியவர்கள் அரசன் புலவரிடத்துள்ள அன்பின் மிகுதியால் நம்பால் இங்ஙனம் இன்மொழி புகல்கின்றான் என வெண்ணி, அரசனை நோக்கி, "மனுநெறி வழுவா மாண்புடை மன்னா! இத்தகைய பெரும்பிழை புரிந்த கொடியனை எம்பால் தருவீராயின், நாங்கள் தக்கவாறு ஒறுப்போம். இன்றேல் நின்ற நிலை நீங்கிப் பெயரோம் ஈது உறுதி' எனப் பிடிவாதம் செய்து நின்றனர். அரசன், வேறுவகை காணானாகி அவர்களைச் சற்றிருக்கச்சொல்லி உட்சென்று, புலவரை வேறோரி

டத்து மறைத்து வைத்து, தனது அருமந்த மகனை அருகி லழைத்து, 'குலம் விளங்கத் தோன்றிய குமாரா! நம்மூதாதை யான மனுச்சோழனுக்கு நேர்ந்த இடர்ப்பாடுபோல், எனக்கும் இப்பொழுது நேர்ந்திருக்கிறது. அச்சோழற்கு வீதிவிடங் கன் என்னும் நற்புதல்வன் வாய்த்ததுபோல் நீயும் எனக்கு வாய்த்திருக்கின்றனை. இக்குறை உன்னால்தான் தீரவேண்டும்' என்றனன்.

மைந்தன் தந்தையின் கருத்துணர்ந்து, 'தந்தாய்! தாய் தந்தையர் இயம்பியது யாதாயினும், அது தவமெனக் கொள் வதே மைந்தர் கடமை; சூரிய குலத்தவருள் தந்தை, ஆசிரியர், இவர் சொற்களைக் கடக்கும் கொடியோரை இந்நிலம் தாங்காது. நரகமே தன்பாற் கொள்ளும். மனைவி, மக்கள், செல்வம் முதலி யன அருமையல்ல; கீர்த்தியொன்றே அரியது. உடம்பு நிலை யற்றதென்பதை யுணர்ந்தும் அதைப் பொருளெனக் கொண்டு, உமது உரையைக் கடப்பவன் அல்லன். 'என் உடலும் உயி ரும் தங்கள் உடைமை; அவற்றைத் தங்கள் விருப்பம்போல் எது வேண்டுமோனாலும் செய்யலாம்' என்றனன்.

இவற்றைக் கேட்ட இராஜராஜன் மகிழ்ந்து, தன் அரு மந்த மகனை ஒரு மூடுபல்லக்கில் ஏற்றி அதனைத் திரையால் மறைத்துக் கொலுக் கூடத்திற்குக் கொணருமாறு தம் ஏவலா ளருக்குக் கட்டளையிட்டுத் தான் முன்னதாகச் சென்றான். ஏவலாளர் அரசன் பின்னேயே அப் பல்லக்கைக் கொண்டு வந்து நிற்க, அரசன் அங்கே கூடியிருந்த அடியவர்களை நோக்கி, 'அடிகாள்! சங்கமக் கொலைபுரிந்த இவனை நீர் நோக் குவதும் தகுதி யன்றாதலால், ஓர் மறைவிடத்தில் வைத்துச் செய்வது செய்மின்' எனக் கூறி விடுத்தான். இச் செய்தி,

"அன்னளிற் குமணன்தன் சிரசை ஈந்தான் [பாடபேதம்
* 'அகளங்க சோழனொரு பிள்ளை ஈந்தான்' என்பது
ஒன்னரும் தமிழ்க் கூத்தன் கவிதைக்காக
ஓராயிரங் குந்தர்முதற் றலையை ஈந்தார்
பைந்நாக மணிகொடுத்தான் ஒருவே ளாளன்
பறையனே டொக்க வுண்டான் அன்னைசோமன்
இந்நாளில் அடிபொறுத்தான் பிரம ராயன்
ஈன்றகலி யுகராயன் இனிய மாலே"

என்ற தனிப்பாடலில் குறித்திருப்பது காணத் தக்கது.

அரசன் சொல்லை உண்மையென மதித்து அவனது அறத்தைப் பாராட்டிப் பின் ஓரிடத்தைச் சேர்ந்தபோது, அச்சங்கமருட் சிலர், 'இவன் ஒட்டக்கூத்தன் தானே? என்று முகத்தைப் பார்த்துத் தெரிந்துகொண்டு பின் கொல்லவேண்டும். செய்யுஞ் செயலைத் தெரிந்து கொள்ளாமலே செய்யின் அது மனத் துன்பத்துக்கு ஏதுவாகும்' என்ன, இதுகேட்ட அனைவரும் அவ்வாறே பார்க்க விசைந்து சிவிகைத் திரையை நீக்குதலும் அரசனுடைய மைந்தன் அதிலிருத்தல் கண்டு, கவலை கூர்ந்து அவனை அணைத்துக்கொண்டு எல்லாரும் அழுதொலிக்க, அம்மைந்தன், 'நீவிர் எண்ணியதை என்பாற் செய்க' என்றனன். அப் பெரியோர் 'குழந்தாய்! தீச்செயல் எவற்றினும் கொடிய சங்கமக் கொலை புரிந்தவன் ஒட்டக்கூத்தனயிருக்க, அவனை விடுத்து இளவரசுக்குரிய நின்னைக் கொல்லும்படி நின் தந்தை வஞ்சகம் செய்தான்' என்று வருந்தி மொழிந்தனர். அரசிளங்காளை, "யானும், என் தந்தையும் உடம்பட்டு இவ்விதச் செயல் புரிதலின் நீர் விரும்பி எங்களுடம்பாட்டின்படி புரிவது அறமாம்" என்றனன். இதுகேட்டலும் அம்மைந்தனது அருஞ் செய்கையை வியந்துகூறி, அவனைக் கொல்ல உடம்படாதவர்களாய்

* அதம்புவனைச் சோமனொரு பிள்ளை ஈந்தான்.

அவனுடன் திரும்பி அரசனிடஞ் சென்று, "அண்ணலே! உன் அரும்பெறல் மைந்தனைக் கொன்று கொலைஞனாகிய கூத்தனைக் காக்க வெண்ணியது அறமோ? புலவனை எம்பாற் றருக" என்று உறுதியாக நின்றனர்.

இஃதறிந்த புலவர், தம்மால் இத்துணையும் நேர்ந்தமைக்கு மிகவும் வருந்தி வேறொரு சூழ்ச்சியை உள்ளத்தில் உன்னி, 'அரசே! சங்கமர் விரும்பியவாறே என்னை அவர்பால் தருக; அடைக்கலம் புகுந்த யானே அவர்பால் போக வேண்டும் போது, நீர் கொடுத்தலால் உமக்குவருங் குறை யாது!' என்றார்.

அரசன் இன்னது சொல்வதென்று தோன்றாமல் மௌன மாயிருந்தான். கூத்தர் அரசன் மௌனத்தையே விடையா கக் கொண்டு அவர்பாற் செல்ல, அச் சிவனடியார் புலவரை உடன்கொண்டு சென்றனர். சூரியனும் மேற்றிசை யடைந் தான்.

அதுகண்ட கூத்தர் தம்மைக் கொண்டு செல்லும் சங்கமர் களை நோக்கி, ஐயன்மீர்! யான் முக்காலமும் தவறாது சிவபூசை செய்யும் ஒழுக்கமுடையேன். இன்று அவ்வொழுக்கம் தவறா மல் பூசை செய்துவர எனக்கு விடையளியுங்கள்' என்றனர்.

சங்கமர்கள் யாவரேயாயினும் அவர் செய்யும் சிவபூசைக்கு இடையூறு இயற்ற ஒருகாலும் ஒருப்படாத கொள்கை யுடையோர் ஆதலால், புலவர் விருப்பப்படி அவரைச் சிவ பூசை புரிய அனுப்பித் தாங்கள் அவர் வருகையை எதிர்பார்த் துக் காத்திருந்தனர்.

அவர்கள் அநுமதி பெற்றுச்சென்ற புலவர், சிறிது தூரத்தே ஓடிய *'அரிசொலார் நதியில்' நீராடி வெண்ணீ

* இது கும்பகோணத்தில் தென்பாலோடும் நதி.

றணிந்து கண்டிகை புனைந்து ஐந்தெழுத்தோதி இறைவிபாகனைத் தொழுது அவர் திருவடித் துணையை மனத்திலிருத்தித் தம் தீவினை தீர்த்தருளுமாறு விண்ணப்பித்து, பின்பு அருகிலிருந்த *முளைச்சாளம்மை என்னும் காளிகோயிலை அடைந்து யாவரும் விலகியிருக்கும் தருணம் பார்த்து அக்கோயிலுள் நுழைந்து கதவடைத்துத் தாழிட்டுக் கொண்டனர்.

இஃதறிந்த சிவனடியார்கள் பெருங் கோபங்கொண்டு, புலவரை எவ்வாறாவது கொல்ல நினையுங்கால், அவருட் சிலர் புலவர் ஆலயத்துள் இருப்பதால் விடிந்தபின் வெளிப்படுத்திக் கோறலே விழுமிதென்று சொல்ல அதற்குடப்பட்டு அவரெல்லாம் கோவிலைச் சூழ்ந்து காவலிருந்தனர்.

இந்நிலையில் உட்புகுந்த புலவர் இன்னது செய்வதென அறியாதவராய் ஆண்டு திருக்கோயில் கொண்டெழுந்தருளியுள்ள அம்மையை நோக்கி, 'தாயே நின் அடியேற்குற்ற இடரை நீக்கி யருளல் வேண்டும்; தன்னை அடைந்தார் தீவினை தீர்ப்பதன்றோ தலையாயவர்தங் கடன்' என்று குறையிரந்து,

ஊனும் உள்ளமும் உருகிநைந்து கண்கசிந்து நின்றார். அப்பொழுது தேவி புலவர்முன் அருளுருவத்துடன் தோன்றி, 'அப்பா! குழந்தாய்! வருந்தற்க. நின்றுயர் ஒழிய வேண்டுமாயின், தக்கன் வேள்வியைத் தகர்த்த தனிமுதற் பொருளாகிய வீரபத்திரக் கடவுள்மீது ஒரு நூல் இயற்றுக'

---

* இக்கோயில் இப்பொழுது கும்பகோணம் மாமாங்கக் குளத்திற் கருகிலுள்ள காசிவிசுவநாதர் கோயிலுக்கடுத்தும் தபால் ஆபீசுக்கு நேர் எதிரிலும் இருக்கிறது. பராமரிப் பின்மையால் சற்றுப் பழுதுற்ற நிலையிலிருக்கக் காணலாம்.

என்றருளினர். அதுகேட்ட பாவலர், 'அடியார்க் கெளிய ளாகிய இறைவியே, தாங்கள் திருவருள் நல்கி நான் சொல்லி வரும்போதே எழுதி வந்தாலன்றி நூல் முற்றுப் பெறாது' என வேண்ட, இறைவியும் அவ்வண்ணமே செய்யத் திருவுளங் கொண்டனள். உடனே பாவாணர் 'தக்க யாகப் பரணி' என்னும் அரிய நூலைப் பாடி வருவாராயினர். இறைவியும், விநாயகர் மாபாரதம் வரைந்ததுபோல எழுதி வந்தனள். இங்ஙனம் எழுதும்போது, இறைவி தன்னுடைய நான்கு கைகளுள் ஒன்றில் ஏந்தியிருந்த தீபம் சிறிது சலனமடைய, அதனால் தமது கருத்தின் ஓட்டம் ஒரு சிறிது தடைப்படலும், அப்பொழுது வீரச்சுவை ஓங்கி நிற்கும் சமயமாக இருந்தமையால், புலவர் தம்மை மறந்து ஆண்டிருப்பவள் காளியம்மை என்றும் உணராமல் அவள் கன்னத்தில் ஓரறை அறைந்தனர். அம்மையார் அவர் செயலன்றி அது நிகழ்ந்தமையான் செல்வக் குழந்தை தளிர்க் கரத்தால் அன்போடு தட்டுவதுபோலக் கண்டு புன்னகை அரும்பி, தாம் எழுதுவதிலேயே நோக்கமாயிருந்தனர். பின்னர்ச் சாந்தரசம் பாடும் சமயம் வாய்ப்பப் புலவர் தமது தவற்றை யுணர்ந்து அதனைப் பொறுக்கும்படி அவள் மலரடியில் வீழ்ந்து வணங்கி நடுங்கி நிற்ப, அம்மை அவரைக் கடைக்கணித்து 'அப்பா! அஃது உன் செயலால் நிகழ்ந்ததன்று; நீ, உன் கருத்து முற்றும் நூலிலே செலுத்தி அதன்கண் அழுந்தி யிருந்தமையால் அங்ஙனம் செய்தாய்; அஞ்சற்க. ஆனால், ஒருவர் தஞ்செயலற்று ஒருவினை செய்யினும் அது அவர் முன் பழகிய செயலாகவே இருக்குமன்றி வேறன்று; ஆதலின், இனிமேனும் பொறையைப் பொருளெனக் கொள்க' என்று அறிவுறுத்தி வாழ்த்தித் திருவுருக் கரந்தனள்.

இவ்வாறு வீரபத்திரக் கடவுள் வெற்றியை நாற்சீரடிப் பாடல்களால் பரணி என்னும் நூலாகப் பாடி முடித்தலும் சூரியனும் இருளகலத் தோன்றினன். புலவரைக் கொல்லுதற்குக் காத்திருந்த சிவசரணரும் புலவரை வெளியேறும்படி அழைத்தனர். அதற்குப் புலவர், 'யான் இரவில் வரைந்ததொரு.புத்தகம் இஃது' எனக் கூறிக் கையகத்திருந்த புதிய நூலை ஒரு துளை வழியாக நீட்டினர்; அதனை அச்சங்கமருள், ஒருவர் வாங்கிப் பிரித்துப் பார்க்க, அது நனிசிறந்த பரணி நூலாய்க் காணுற்றது; கண்டு கழிபேருவகை எய்திய அவர், மற்றோரையும் விளித்து இஃது 'அருந்தவர்க்கு அநாதித் தெய்வமாய் விளங்கும் நமது வீரபத்திரக் கடவுள்மீது இப்புலவனால் பாடப்பட்ட அரியதொரு பிரபந்தமாகும்; புலவர் ஓரிரவிலேயே இதனைப் பாடி முடித்துளர். இத்தகைய புலமை மிகும் புலவர் பெருமானைக் கொல்லுதல் நன்றன்று; இவரால், தமிழும், சைவமும் நன்கு வளர்ந்து சிறக்கும்' என்றனர். அவ்வுரை கேட்டு வியப்புற்ற ஏனைய சங்கமரும் விரைந்து வந்து, அத்திருத்தமிழ் நூலை முற்றும் பார்த்து அதன் சொல்லழகு, பொருளழகுகளைக் கண்டு அளவிலா இன்பம் எய்தி, அவர் கருத்தின்படி புலவரை விடுதலை செய்ய ஒருப்பட்டனர். அதன் பின்னர் தம் கையிலே வாளைச் சுமந்திருந்த சிவனடியார் அதனை அத்துளையின் வழியே நீட்டிப் புலவர் கரத்தீந்து அஞ்சாது வெளிவருக எனச் சொல்லினர். அவரும் அச்சம் ஒழிந்து வெளிப்போந்து சங்கமரை வணங்கித் தாம் இயற்றிய பிழையைப் பொருத்தருள வேண்டுமெனக் கேட்டுக்கொண்டனர். அவர்களும் அவரைத் திரும்பப்பணிந்து, "முத்திநாதன் என்பவன் முன் கொணர்ந்ததொரு புத்தகம் மெய்ப்பொருளுயனார் இறுதிக் கேதுவாயிற்று; நீர் வரைந்த

இந்நூல்தானுங் கொலை தவிர்தற்கு ஏதுவாயிற்று" என வியந்து புலவரைப் பலவாறு புகழ்ந்து, அப்புலவர் விருப்பப் படி அவர் தீவினைக்கும் கழுவாய் இயற்றி அருள் புரிந்தார்கள்.

பின்னர் புலவர், கங்கை வீரேசர் சந்நிதியில் தக்கயாகப் பரணியை அரங்கேற்றி, அப்போது தாம் அடிமைப்பட்ட சங்க மக் குரவராற் பல வரிசைகளும், முத்துச் சிவிகையும், அளிக் கப் பெற்றவராய்த் திரும்பி அரசன் அவையை அடைந்தனர்.

இங்ஙனம் கூத்தர், சங்கமரிடத்து முத்துச் சிவிகை பெற்றாரென்பதற்குச் சோழமண்டல சதகம் 94-ஆம் பாடல் சான்றாகக் காணப்படுகிறது. அது வருமாறு:—

" ஒத்த துணர்ந்த நாடனைத்து மொருங்கே கூடியுயர் கூத்தன்
கத்தி யலையத் தூரத்துதலுங் கசிந்து காழிக் கவுணியர்கோன்
பத்தி யுடனே தக்கன்மகப் பரணிபாடப் பணிந்து முத்தின்
வைத்த சிவிகை மகிழ்ந்தேற வைத்தார் சோழ மண்டலமே"

அல்லாமல், தாம் பரணி பாடுவதற்குக் காரணமா யிருந்த வீரசிங்காதன மடத்து ஆசாரிய மூர்த்திகட்கும், அவரது அடி யவர்க்கும் புலவர், தம் பிழைபொறுத் தருளுமாறு குறை யிரந்துவேண்டும் வாழ்த்துப் பாவடிகள் பரணியின் இறுதியில் காணப்படுவதால், தாம் செய்த தவறும், அது பொறுக்க வேண்டின மன்னிப்பும், உண்மை யென்ப துறுதியாகின்றது. அப் பரணி யடிகள்,

" குடந்தையம் பதியிற் கோதிலாப் பெரிய
மடந்த னில்வாழ் வீர மாயேசுவரர் வாழியே" (70)

" அருள்ஞான குருபீட மடிவாழி
யடியார்க ளடிவாழியென்
னிருளான பழிமாற...கயிலானவழி
யிசை வாழியே"

என வருவனவேயாம். மற்றும்,



கூத்தர் தக்கயாகப் பரணிபாடி முத்துச்சிவிகை பெற்றது.

"ஆக்கம் பெருக்கு மடந்தை வாழியே
ஆற்றங் கரைச் சொற் கிழத்தி வாழியே" தக்கயாகப் பரணி

"ஆற்றங் கரையி லரசிருந்தாள் வாழியெனப்
போற்றலும் புலவர்பிரான் பொன்பாடல்—வற்றமே
காட்சிபல காட்டிப்பின் கந்தழியைக் கூட்டுங்காண்
வேட்டவர்க்கு நன்றாக வே"

என்ற பரணி யடியாலும், மேற்கோள் வெண்பாவாலும், அரிசொல் நதிக்கரையில் ஆலயங்கொண்ட காளி, 'முளைச்சாளம்மை' கூத்தர்க்குப் பரணிபாட அருளியதும், அத்தகுதிக்கேற்பப் புலவர் அவ்விறைவிக்கு வாழ்த்துக் கூறுதலும் தெற்றெண விளங்கும்.

அங்ஙனம் வந்த கூத்தர் வரவை யுணர்ந்த அரசன் மகிழ்வெய்தி யெதிர்கொண்டு, புலவர் பெருமானே! கொலைப்போர் வழக்கு எவ்வாறாயிற்று? என வினவியதற்குப் புலவர், பரணி பாடியது முதலிய செய்திகளை அறிவித்தலும் அரசனுவந்து, வியந்து கூத்தரைப் புகழ்ந்து, அவர்க்கு வரிசை பலவளித்து விடுத்தனன். புலவர் தம் மனையின் எய்தி, அந்தணர் வறியாதியர்க்குச் சிறந்த அறங்களைச் செய்து, முன்போல சுற்றத்துடன் சூழவிருந்து சுகமாகக் காலங்கழித்து வாழ்ந்து வந்தனர்.

இவ்வளவே, ஒட்டக் கூத்தர் தக்கயாகப் பரணி பாடிய வரலாறாகும். இவ் வரலாற்றால் கூத்தரது மெய்ப் புலமையும் கவிபாடுந் திறனும், காலமறிந்து செய்யும் சூழ்ச்சியும், முறை தவறாது ஒழுகும் நேர்மையும், எதனையுந் தட்டின்றி முடிக்க வல்ல ஆற்றலும், ஆன்றோர் மொழியில்பற்றும், மற்றும் இவரது மேம்பட்ட குணங்களும் நன்கு விளங்கும்.

இப் பிரபந்தம் II-ஆம் குலோத்துங்க சோழன் மைந்தன் II-ஆம் இராஜராஜன் அரசாட்சிக் காலத்தில் குடந்தையில்

மூளேச்சாளம்மை கோயிலில் பாடப்பட்டது. காலம் கி. பி. 1146-1162.

இனி, இவ் வரலாறுபற்றி மதுரைச்சங்கத்து, 'செந் தமிழ்' வெளியீட்டின் ஆசிரியராயிருந்தவரும், சென்னே அர சாங்க அகராதிக் கூட்டத் தலைமைத் தமிழ்ப் புலவரும், சிறந்த தமிழ் ஆராய்ச்சி வல்லுநருமான ஸ்ரீமத். மு இராகவை யங்காரர் அவர்கள் "செங்குந்தர் பிரபந்தத் திரட்டு" என் னும் நூலின் ஆராய்ச்சி யுரையில் தமது மதிப்புரையை அடி யில் வருமாறு கூறுகின்றனர். அது—

"இச் சரிதத்தினின்று ஈட்டியெழுபது பாடிய வரலாற் றிற் கூறியதுபோலவே, தக்கயாகப் பரணி பாடிய வரலாறும் உள்ளது. செங்குந்தர்க்குப் பிரதியாகச் சங்கமர்களும்; சோமன் தன் புதல்வனே மூடு சிவிகையில் அனுப்பினன் என்பதற்கு வேருக சோழன் அவ்வாறு செய்தான் என்பதும், அவ்விரண்டு வரலாறுகளிலுமுள்ள வேறுபாடுகளாக வுள்ளன. ஆனல், தமிழ் நாவலர் சரிதையில், "பழிகாரர் தொடர்ந்தபோது கூத் தர் சோமன் வாசலில் ஓடிச்சொன்ன கவி" என்னும் தலைக் குறிப்புடன்:—

"அடையென்பார் தள்ளென்பா ரன்பொன் றிலாமற்
புடையென்பார் தங்கடைக்கே போகேம்—கொடையென்ருல்
முந்துஞ்சோ மாபுவனே முன்னவனே நின் கடைக்கீழ்
வந்துய்ஞ்சோ மாதலான் மற்று"

என்ற கூத்தர் பாட்டொன்று காணப்படுகின்றது. 'பழிகாரர்' என்பதனுற் கொலைக்குக் கொலைவாங்க வந்தோர் என்பதும்; 'சோமாபுவனே முன்னவனே' என்பதனுல், அப்போது கூத் தர்க்கு அடைக்கலங் கொடுத்தவன் சோமன் என்ற புவனேத்

தலைவன் என்பதும் பெறப்படுதலால், எவ்விதத்தும் சோமனே கூத்தரை இடரினின்றுந் தப்பிவைக்க முயன்றவன் என்பது தெளியப்படும். ஆகவே, "சோமன்" என்பதே சோழன் என்று பிற்காலத்தாரால் எழுத்துமாறிக் கதை கூறப்பட்டதென்று கருத விடமுண்டு.

இச்சோமன் சோணாட்டுத் திரிபுவனம் என்ற புவனையில் பெருஞ் செல்வனும், வள்ளலுமாக வாழ்ந்தவன்.

"சொல்லருமை நாலிரண்டிற் சோமன் கொடையருமை
புல்லரிடத் தேயறிமின் போய்" — தனிநிலைக்கவி

"தலையிலங்கிய கொடைச் சோமன்வாழ் புவனையில்" — தமிழ் நாவலர் சரிதை

"சோமனோர் வள்ள லிந்து" — சூடாமணி நிகண்டு

என்பனவற்றால், இவனது கொடைப் பெருமை நன்கு வெளியாகும். ஒருகால், சோழனைக் காணவேண்டி அரண்மனையுள் நுழைந்த சோமன் அவ்வரசனைக் கண்டு திரும்புகின்ற கூத்தரை எதிர்ப்பட்டு, 'அரசன் சமயம் யாது' என்று உசாவ, கூத்தர்,

"தன்னுடைய தேவியர்க்குத் தார்வளவன் றனுரைப்ப
துன்னுடைய சீர்த்தி யுயர்நலமே—துன்னுபுகழ்ச்
சோமா! திரிபுவனத் தோன்றலே! நின்புகழை
யாமா றுரைக்க வினி"

என்று கூறினரென்று தமிழ் நாவலர் சரிதையிற் குறிப்புடன் காணப்படும் வெண்பா, பேரரசரும் மதித்த இவ்வள்ளலின் பெருமைக்குத் தக்க சான்றாகின்ற" தென்பதே.

ஈட்டியெழுபது பாடியதும்—வெட்டிய தலைகள்
ஒட்டியெழுந்ததும்.

ஈட்டியெழுபதென்பது கவிச் சக்கரவர்த்தி யென்று புலமைப் பெயர் சிறந்த அருந்தமிழ்ச் செல்வர் ஒட்டக்கூத்தர் தம் மரபினராகிய செங்குந்தர்களின் வேண்டுகோளின்படி

தலைப்பிள்ளைகள் ஆயிரத்தெண்மர் சிரங்களை ஆசனமாகப் பெற்று அதன்மீது எழுந்தருளித் தங்குலத்திற்குரிய ஆயுதமாகிய ஈட்டியைச் சிறப்பித்துப் பாடியதொரு தமிழ்ப் பாமாலையாம். தெய்விகம் விளங்கப் பாடிய இத்திப்பியத் தமிழ்ப் பாமாலையின் உண்மைக்குரிய வரலாறு இக்காலத்துப் பல்வகை வேறுபாடுகளுடன் வழங்கப்படுவதால் அவற்றினது உண்மை கண்டறிவது பிரயாசையாகவே இருக்கின்றது. இக் குறையை நிவர்த்தித்து அதன் உண்மை வரலாறு இதுதான் என்று அறிஞர் உணர்ந்து மகிழ ஆராய்ச்சி முகத்தான் இங்கு வெளியிட முற்படுகின்றோம். செங்குந்த மரபினர் பெருமையாதிய சிறப்புக்கள், அன்னார்க்குரிய "கந்தபுராணம்" "செங்குந்தர் புராணம்" "வீர நாராயண விஜயம்" முதலிய நூல்களில் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன. ஈண்டுக் கூறத் தொடங்குவது ஈட்டியெழுபது பாடிய வரலாறும்; அதனைப் பாடினார் மேவருஞ் சிறப்பும், தெய்விகப் புலமையும், அதிசய விளைவும், மற்றும் நூல் பாடப்பட்ட இடம், காலம், கேட்டிருந்த சோழன் என்பனவாதிய செய்திகளை யாம்.

நாமகள் நல்லருள் நன்கு வாய்க்கப்பெற்று வரகவியாய்த் திகழ்ந்த கூத்தர், ஒரு சமயத்துத் தஞ்சை ஜில்லா, திருவிடைமருதூர்க்கு அணித்தாயுள்ள *'திரிபுவனம்' என்னும் திருப்பதி

---

* 'புவனை என்னும் பட்டினம் சிதம்பரம் கோயில் வடமேற்கு ஐந்து கடிகை தூரத்தில் உள்ளது. இப்போது அவ்வூர் 'கீழைப் புவனகிரி' எனவும், 'மேலைப்புவனகிரி' அல்லது 'பெருமாத்தூர்' எனவும் வழங்குகின்றது. இது முற்காலத்தில் ஒரு பகுதியை (பார்ப்பனவீதியைப்)' 'புவனை' என்றும், மற்றொரு பகுதியை (குறுநில மன்னர் வீதியை) 'ஆலூர்' என்றும் வழங்கப்பட்டு வந்ததாம். இக்காலத்தில் 'ஆலூர்' என்னும் பெயர் வழக்கிற் காணவில்லை என்று, (செங்குந்தர் பிரபந்தத்திரட்டு 17-ஆம் பக்கத்தில்) காஞ்சி நாகலிங்க முனிவரவர்கள் கூறுகின்றனர். இது வழங்கப்படும் வரலாற்றிற்கு முரணுவதுடன் பொருந்தா வழக்குமாம்.

யில், கல்வி, செல்வம், கொடை, புகழ், பேரன்பு, பெருமை யாதியவைகளில், மிக்குயர்ந்து, பெருங்கொடை வள்ளலாய் விளங்கிய "சோமன்" என்னும் பெயரையுடைய தமது இன்னுயிர் நண்பரைக் காணச் சென்றிருந்தனர். இங்ஙனம் சென்ற காலம், கி. பி. 1146-க்கும், 1162-க்கும் இடைப்பட்டதாம். அப்போது சோழராஜ்யத்தை நீதிகோடா நெறிமுறையில் அரிசுபுரிந்து வந்தவன் இரண்டாம் ராஜராஜன் ஆவன். கூத்தர், சோமன் நல்விருந்தினராய்த் திரிபுவனத்தில் இருந்து வருவதை யுணர்ந்து கும்பகோணத்திற்கு அடுத்த ஆவூரிலிருந்த *குலாபிமானம், மரபுகாத்தல், கல்விவளர்ச்சி, தெய்வ சிந்தனை, முன்னேற்றம், புலவரைக் காத்தல், பேணல், ஆதரித்தல் முதலிய அரும்பெருங் குணங்களில் மேம்பட்ட செங்குந்தப் பெருமக்கள் ஒருங்குகூடிக் கூத்தர்பாற் சென்று மரபு விளக்கவல்ல அரியநூலொன்று தமிழில் சிறக்கப் பாடித் தரும்படிக் கேட்கவேண்டுமென்ற பேராவலுடையவராய், அப்புலவர் பெருமானைக் காணத் தம்முள் பலரோடு கூட்டமாகச் சென்று, முறைப்படி கண்டு வணங்கி உபசரித்தனர். கூத்தரும் தம்மினத்தர் வருகைக்கும், தம்மைவணங்கி வரவேற்று உபசரித்தமைக்கும் மிகமகிழ்ந்து, அவர்களுடன் நகைமுகமும், இன்சொலுமாய் அளவளாவி இருந்தனர். இங்ஙனம் இருக்கும் இடையில் அவர்களில் மிக்காராயுள்ளார் ஒருவர் எழுந்து, புலவரைப் பணிந்து 'நமது குலம் விளங்கத் தோன்றிய நன்மணி விளக்கே! நற்றமிழ் நாயகமே! கல்விக் கடலே! கலைமகளார் கருணையுருவே! புலவர் பெருமானே! இப்பேருலகிற் சிற்சில மரபினர், தமது மரபின் வளர்ச்சி கருதியும், வண்மை பெருக நினைந்தும், ஒரு சில கவிஞர்களால் பாமாலைகள் பாடுவித்து, அவைகளைப் போற்றி வருகின்றனர். நமது குல உண்

மையைப்பற்றி ஒரு பிரபந்தமேனும் இதுவரை நம்மில் காணப் படவில்லை. புலவரேறுகிய தாங்கள், நமது குலத்தின் பெருமை உலகெங்கும் ஒளிருமாறு ஒரு அரிய பாமாலை இனிய நலஞ் சிறக்க இசைத்துத் தரல்வேண்டும். அங்ஙனம் செய்யின், தமிழ் உலகில் வழங்குந்தனையும் நங்குல மாட்சிமை தளராது' என மிக வேண்டி நின்றனர். புலவருக்கோ, அங்ஙனம் தாம் பிறந்த குலத்தைச் சுட்டி நூல் இயற்றுதல் தகுதியாகத் தோன்றவில்லை. அதனால் கூத்தர் அவரை நோக்கி 'நமரங்காள்! நீங்கள் கொண்ட கொள்கை எமக்கு வியப்பைத் தருகின்றது. நமது மரபிற்குத் தனிமையாக ஒரு பிரபந்தம் வேண்டுவதில்லை. முன்னமே வடமொழியிலுள்ள ஸ்காந்தத்தில் நன்றாக நம் முடைய முன்னைய வரலாறு, குலப்பெருமை முதலியவை களைப்பற்றி விளக்கம்பெறக் கூறப்பட் டிருக்கின்றது. ஆனதால் தனியாக நூல் பாடவேண்டிய அவசியமில்லை' என்றனர். இங்ஙனம் கூத்தர் கூறிய சொல்லில் ஆவூர்ச் செங் குந்தர்கள் அமைதியடையாது மீட்டும் அப்புலவர் பிரானை வணங்கி, 'புன்கவிகளைப் பூடறுக்கும் புலவர் சிங்கமே! தாங்கள் கூறிய அனைத்தும் உண்மையே. பிரமாண்ட புராணம் முதலிய புராணங்களுள், அவ்வவ் வருணவொழுக்கம் பற்றியும், செயல் பற்றியும், விவரமாகக் கூறியிருக்க, அவ்வவர்களும் அடங்காது தனித்தனியே வேறு வேறு குலநூல்கள் செய்து கொண்டார் கள். 'புராணம்' என்பது பொது என்பதும், 'குல நூல்' என் பது சிறப்பு என்பதும் தாங்கள் அறியாததன்று' என்று உரைத்தனர்.

அதுகேட்ட புலவர் புன்முறுவல் பூத்து அச்செங்குந்தப் பெரியார்களைப் பார்த்து, 'குலங்காக்கும் குணப்பெருஞ்செல்வர் காள்! ஒரு சில புலவர்கள், அபிமானத்தாலேனும், பொருள்

மோக்த்தாலேனும் கற்பனை வாயிலாகப் பாடிய பாமாலைகளுள், கண்கூடாகக்கண்ட அதிசயம் ஒன்றுமேயில்லை. நம் மரபினர், அந்தணர் முதலிய மூவருணத்தார்களின் ஒழுக்கங்கள் அனைத்தையும் ஒருங்குபெற்றவர், கைலாய பாரம்பரையினர், நந்தி கணத்து அமிசத்தவர், உபசுப்பிரமணிய மரபினர், இத்தகைய ஏற்றமுடையாரது குலவன்மையைப் பற்றிச் சிறப்பித்துப் பாடப்புகுதல் இயற்கை யழகிற்குச் செயற்கையழகு செய்தல் போலாம். அந்தச் செயற்கையழகோ நிலைப்பதன்று. இயல்பிற்றனே பல சிறப்போடுங் கூடிய நமது குலவழகைப் பற்றிப் பாடுவிக்கவேண்டில், நம்மினும் உயர்ந்த குலத்தான் ஒருவனால் பாடுவித்தல் அழகு, நம்மில் தாழ்ந்தோனால் பாடுவித்தல் இழிவின்பாற் படுமேயன்றி உயர்வின் உரிமை பெறாது' என இடித்துரைத்தனர். இவையனைத்தும் கேட்டும் அவர்கள் குலாபிமானம் மிக்கவர்களானதால், அவர்கள் மனம் மீண்டும் அமைதியடையவில்லை. அதனால் அவர்கள் மேலும் புலவர்பெருமானை வற்புறுத்தினர். அப்பொழுது புலவர் கடிந்துரைத்து வெறுப்புடன் வெளியேறச் செய்தனர்.

கருதிய கருமம் கைகூடாது போனதற்குப் பெரிதும்வருந்திய ஆவூர்ச் செங்குந்தர்கள், பலவாறு ஆலோசித்து முடிவில் கடுஞ்சினங் கொண்டவர்களாய், இப்புலவன், நமது மரபினரைக விருந்தும் நமது பெருமையும், பெருங் கீர்த்தியும் விளக்கவல்ல ஒருபிரபந்தம் பாடித்தரும்படி கேட்டுக்கொண்டதற்கு, நம்மின் மேலான மரபினன் ஒருவனைக்கொண்டு பாடல்பெறும்படி கூறிவிட்டா னல்லவா? "இவ்வுலகில் புன்கவிகளா யுள்ளோர் வெளிப்படின், அவர்களை எனது வீரவாளால் பொன்றுவிப்பேன்" என்று ஒரு வெற்றிக்கொடித் தம்பம் நாட்டித் தான் கற்றுள்ள கல்வியின் மாத்திரம் அபிமானம் வைத்துள்ள

இவன், தான் பிறந்துள்ள குலத்தில் சிறிதும் அபிமானம் இல்லாதவனாக இருக்கின்றான். இத்தகையனை இவ்வுலகில் இராதபடி கொன்றுவிடுவதே சரி என்று தங்களுள் நிச்சயித்து முடிவுகொண்டு உடனே, வளை, தடி, வாள் முதலிய ஆயுதங்களேந்திப் புலவர் வரவு நோக்கி வழியில் எதிர்பார்த்து நின்றனர்.

முன்னர் இவர்களைக் கடிந்துரைத்து வெளியேற்றித் தாமும் வெளியேறிச் சென்ற கவிவாணர், அன்றுமாலையிலேயே "தைப்பூச உற்சவம்" மிக்க சிறப்பாக வருடந்தோறும் தவறாது நடைபெறும் மாட்சிமை யுடையதும், தைப்பூசத்தில் காவிரியில் நீராடும் சிறைப்பை 'ஆளுடைய பிள்ளையார், "ஓடே கலன்" என்னும் முதலையுடைய தேவாரத்தில், "வாசங் கமழ்" என்னும் ஐந்தாவது திருப்பாசுரத்திலும், 'போங்கு நூன் மார்பினீர்' என்னும் தலைப்பையுடைய தேவாரத்தில் 'வருந்திய மாதவத்தோர்' என்னும் ஐந்தாவது திருப்பாசுரத்திலும்; திருநாவுக்கரசர் "பாசமோன்றிலாய்" என்னும் திருக்குறுந் தொகையிலும், சிறப்பித்தோதப்பெற்ற சீருடையதுமான திருவிடை மருதூரடைந்து, பெருநல மாமுலை நாயகியாரோடு கோவில் கொண்டெழுந் தருளிய மகாலிங்கேசரைத் தமது இருவிழியாலும், ஆசைதீரப் பருகி,

"வருந்திய மாதவத்தோர் வானோ ரேனோர் வந்தீண்டிப்
பொருந்திய தைப்பூச மாடி யுலகம் பொலிவெய்தத்
திருந்திய நான்மறை யோர் சீரா லேத்த விடைமருதிற்
பொருந்திய கோயிலே கோயிலாகப் புக்கீரே"

என்ற திருத்தேவாரத்தை உள்ளம் நைந்துருக, உரைகுழறக் கண்ணீர் பெருகக் கனிந்தோதி வணங்கித் தொழுது விடைபெற்றுத் திரிபுவனம் வந்து கொண்டிருக்கையில், இவர்

வரவை முன்னமே எதிர் நோக்கி நின்றிருந்த கூட்டத்தார் திரளாகத் தொடர்ந்து புலவரை அலக்கழிக்கப்போந்தனர். அஃதுணர்ந்த கூத்தர், விரைவாக நடந்தோடித் திரிபுவனத்தை அடைந்து, சோழன் மாளிகை புக்கு, நடைவாசலில் நின்று, அச்சோமனை விளித்துப், பழிகாரர் தம்மைத் தொடர்ந்து வருத்த வருவதைக் கூறித் தாம் 'அச்சோமனது அடைக்கலப் பொருள்' என்று கருத்தமைந்த :—

"அடையென்பார் தள்ளென்பார் அன்பொன்றில் லாமற்
புடையென்பார் தங்கடைக்கே போகேம்—கொடையென்றால்
முந்துஞ் சோமா ! புவனை முன்னவனே! நின்கடைக்கீழ்
வந்துய்ஞ்சோ மாதலான் மற்று" (8) தமிழ்நாவலர் சரிதை

என்னும் ஒரு கவியிசைத்து, அவர் பக்கல் சென்றணைந்தனர். இது 'தமிழ்நாவலர் சரிதையில்' "பழிகாரர் தொடர்ந்தபோது சோமன் வாசலிலே ஓடிச் சொன்ன கவி" என்னும் தலைப்பின் கீழ்க் காணப்படுகிறது. இச்சம்பவத்தினையே பின்னர்த் தாம் பாடிய ஈட்டியெழுபதின் பாயிரத்தில், "பூவார் புவனையிற் சோமன் தரும்பழி போனபின்பு" எனக் குறித்தனராவர். பின்னர்த் தம்மைத் தொடர்ந்தோடிவந்த பழிகாரர்கள் சோமன் அரண்மனையணுகி உட்புகுந்து, சோமனை நோக்கி 'உமது திருமனையிற் புக்கிருக்கும் புலவரை வெளியே விடுத்தாலன்றி இங்கு நின்றும் பெயரோம்' என்று உறுதி கூறி ஆரவாரித்தனர்.

கல்வியருமையும், கற்றோர் பெருமையும் நன்குணர்ந்த * 'சோமன்' என்னும் தூய குணச் செல்வன், தன்பால்

* இவன் சோழர் ஆதிக்கம் பிரபலம் பெற்றிருந்த 12-ஆம் நூற்றாண்டில், சோணாட்டுத் திரிபுவனம் என்னும் ஊருக்குத் தலைவனும், பெருங் கொடை வள்ளலுமாவன். இவனது வள்ளன்மையைப்

அடைக்கலம் புகுந்த புலவர் பெருமானைக் காத்தல் வேண்டி அருந்தவத்தால் வந்த தன் ஆருயிர்ப் புதல்வன் தன் குடிக் கொரு கொழுந்தெனக் கருதானாய், அவனை விளித்துப் பக்கத் தணைத்துப் பகர்வன பகர்ந்து கொலைக்களம் புகுதற்குச் சம் மதிக்கச் செய்து, அகன்றதொரு பேழையுள் அவனையிருத்தி மூடிக் கொணர்ந்து தலைவாயிலில் வைத்துத் தொடவழக்கிட்டு நிற்கும் ஆவூர்செங்குந்தர்களை நோக்கி, 'இதோ! இப்பேழையுள் நீங்கள் என்னைத் தருமாறு கேட்ட புலவர் இருக்கின்றனர். இப்பேழையைத் திறவாது கொலைக்களங் கொண்டுபோய் நும் விருப்பத்தின்படி செய்மின்கள்' என்றனன்.

அவர்களும் அங்ஙனமே அப்பேழையை எடுத்துக்கொண்டு போய்க் கொலைக்களத்தே வைத்துத் திறந்துபார்க்க, அப்பேழை யுள், சோமன் உள்ளத்தெழும் அன்பொளி ஆயிரஞ் சோமர் ஒளியென மிளிர்தல்கண்டு, அப்பெரியோன் பண்பைப் பல படப் பாராட்டி அச்செல்வத் திருமகனைத் திரும்பக் கொணர்ந்து, அவர் தம் பொன் மகனை யகத்தே புகவிடுத்து மறைத்து வைத்துள்ள கூத்தரைத் தம்வசம் கொடுக்கும்படி வெகுவாக நெருக்கி வேண்டினர். இவ்வினை வெல்லாம் விவர மாக வுணர்ந்த புலவர் பெருமான் சோமனது பேரறிவையும், பெருங்குண நிறைவையும், அன்புடைமையையும், அடைக்கலங்

---

"பழகு தமிழ்ச்—சொல்லருமை நாலிரண்டிற் சோமன் கொடை யருமை, புல்லரிடத் தேயறிமின் போய்" எனவும் ;

"மலையிலங்கிய கொடைச்சோமன் வாழ்புவனையில்" எனவும்,

"சோமாதிரி புவனத் தோன்றலே நின்கவன
வாமா வழிமறந்து வந்ததோ"

எனவும், வரும் செய்யுட்களாலும், 'சோமனோர் வள்ளலிந்து,' என மண்டல புருடர் தமது நிகண்டில் சிறப்பித்துக் கூறியதனாலும் அறி யப்படும்.

காக்கும் உறுதியையும் உன்னியுன்னி உள்ளங் குழைந்து உடல் உருகி அன்பு மீதூர,

“ தன்னுடைய தேவியர்க்குத் தார்வளவன் தானுரைப்ப
துன்னுடைய சீர்த்தி யுயர்நலமே—துன்னுபுகழ்ச்
சோமா ! திரிபுவனத் தோன்றலே நின்புகழை
யர்மா ருரைக்க வினி ” (தனிச்செய்யுட் சிந்தாமணி)

என்னும் அருமைக்கவி கூறித் தமது ஆர்வமிகுதியைவெளியிட்டனர்.

பின்னர் மறைந்து நின்ற புலவர் வெளிப்போந்து, பூசல் புரியும் செங்குந்தத் தலைவர்களை நோக்கிச் ‘சீலம் நிறைந்த செங்குந்தத் தலைவர்காள்! அடியேன் புகல்வதைப் பொறுமையுடன் கேண்மின்கள். பெரும் புலவர்கள், தேவர்களையும், அரசர்களையும், தமக்காதரவாயுள்ள பிரபுக்களையும், அன்பாலும், அபிமானத்தாலும், பொருள் விருப்பத்தாலும் தனியே துதிவகையாகவும், சரிதமுறையாகவும், வருணித்துப் பாடுதல் உண்டு. நானும் சோழர் மூவர்மீது, ‘உலா’, ‘பிள்ளைத்தமிழ்’, ‘கோவை’ முதலியன பாடியுள்ளேன். அவ்வகை வேறு. சில புலவர் பொருள் விருப்பத்தால் சில மரபினர்களை உயர்த்திப் பாடியிருக்கின்றனர். நான் அவ்வாறு பாடுதற்கு எனக்குப் பொருளாசையில்லை. சோழ வேந்தர்களால் கொடுக்கப்பட்ட கொடைப்பொருள்கள் ஏராளமாய் என்வசத்துள்ளன. இதனை இவ்வுலகே உணர்த்தும். ஒவ்வொரு சமயத்தவரும், தத்தம் சமயத்தையே மேலெனக்கூறி வாதித்தல்போல ஒவ்வொரு சாதியரும் தத்தம் சாதியையே மேலாகப்பேசி வாதிடுதல் வழக்கு. அவ்வழக்கு முடிவில் இழுக்காம் என்பதற்குச் சான்று அவ்வக் குலத்தினரது தொழில் விகற்பமேயாகும்.

இத்தகைய சமயத்தையும், சாதியையும் பற்றி ஒரு பாமாலை பகருமிடத்து அப்பாமாலையால் யாதேனும்ஒருஅற்புதம் விளையின் அதுவே அதனை எல்லாவற்றினும், மேலெனக் கொள்ளற்குச் சான்றாகும். ஆதலால், அடியேன் திருக்கைலாய பரம்பரையில் வந்த செங்குந்த மரபில் தோன்றியுள்ளேன். என் வாக்கில் சத்திய லட்சுமியும், சாரதா தேவியும் குடிகொண்டிருக்கின்றனர். இது முழுதும் மெய்ம்மையே. பரீட்சத்தறிய வேண்டுமாயின், அத்தேவியர்கட்குச் சகஸ்திர நாமார்ச்சனையின் பொருட்டு நங்குலத் தலைப்பிள்ளைகள் ஆயிரத் தெண்மர் சிரங்களைப் பரிசாகத் தருவீரேல்; நான் நமது ஆயுதமாகிய ஈட்டியைச் சுட்டி *"ஈட்டி யெழுபது" என ஒரு பிரபந்தம்பாடி இவ்வுலகினரை வியக்கச் செய்கின்றேன்' என்றனர்.

அதுகேட்ட செங்குந்தர்கள் திடுக்குற்று, ஈதென்ன புலவர் கூற்று மெத்தக் கோரமாய் இருக்கிறது. உலகந் தோன்றிய நாள் முதல் புலவர் கூட்டத்தினர் எவரும் இதுபோன்றதொரு செய்தியைச் செப்பியதாக நாம் கேட்டோ மில்லை. இது புதுமையே. பாமாலை பெறுதற்குப் பிள்ளைப் பலி கொடுக்க எவர்தான் உடன்படுவர்? பிள்ளைப் பலியேற்றுப் பாமாலை பாடிய புலவர் ஒருவர் இப்பேருலகில் இருந்ததாக வரலாற்று முறையினும், கன்ன பரம்பரைச் செய்தியினும் காணப்பட வில்லையே. இவர் மட்டும் புதியதோர் வழியைப் பின்பற்றிய தென்னை? என வியப்பும், திகைப்பும் ஒருங்கே கொண்டவர்களாய்ச் செய்வது இன்னதெனத் தோன்றாது மயக்கவசத்தராயினர். அவர்களது நிலைகண்ட புலவர் பெருமான், தமது மரபின் முன்னோர்களது மேலான வீரம், பேராண்மை, அஞ்சா

---

* ஈட்டி—ஒருவகை ஆயுதம். குந்தம். சவளம் எனவும் பெயர் பெறும்.

நெஞ்சம், அன்புருகு மனம், தமிழின்பாற் கொண்ட தணியாக் காதல், கற்றோர்சொற் கேட்டல், புலவர்கள் ' எது விரும்பினும் இல்லையென்னுதீயும் ஈகை ஆதிய அருஞ்செயல்களை அவர்கள் அகந்தனில் அழுந்தப் பதியுமாறு வெகு உருக்கமும் உற்சாகமுந்தோன்ற வெகு விளக்கமாக விவரித்து விளம்பினர்.

சொல்வோரது தன்மை, பெருமை, சிறப்பு, தூயமனம், சொல்லுறுதி ஆகியவைகளால் கேட்போரது மனம் மலர்ந்து விஷயத்தை மதித்து ஏற்றுக்கொள்வது உலகியல்பு. அவ்வகையில் கூத்தரது அருண்மேவியதும், பெருமிதம் சிறந்ததுமான உள்ளத்திலிருந்து உண்டான கல்வி நலங்கலந்த அமுதவாக்கும், வீரஞ்செறிந்த சொற்பெருக்கும், உலகுள்ளளவும் நின்று நிலவிய செங்குந்தரதுஏற்றம் இனிதுவிளக்கவல்லதான மெய்ப்பொருளுண்மையும், பாமாலை பெறும் பெருநோக்கமும் உடைய ஆவூர்ச் செங்குந்தர்கள் மனத்தின்கண் தைத்து, நினைத்தற்குத் துணிதற்கும், செய்தற்கும் அரிதானதொரு பெருஞ் செயலைச் செய்து முடிப்பதென்னும் துணிவும், துரிதமும் தோன்றி அவர்கள் ஒருமுகமாக இணங்கும்படி செய்தன.

" விரைந்து தொழில் கேட்குஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின் "

என்பது தேவர் திருவள்ளுவர் திருவாக்கன்றோ !

இங்ஙனம் புத்துயிரும், புதியதோர் உணர்ச்சியும் செங்குந்தர்களின் ஜீவநாடிகளில் பளீரெனப் பாவியதால், அவர்கள் ஒருங்குசேர்ந்து நன்குக ஆலோசித்து முடிவில் தலைப்பிள்ளைகளது அருஞ்சிரங்களைப் பனுவல் பாடுவதற்குப் பரிசாகத் தருவதில் ஒருமுகமாக இணங்கி ஊக்க மேற்கொண்டு,

ஒரு நன்னாளையும், இடத்தையும், காலத்தையும் குறித்துக் கொண்டு, புலவர்பால் விடைபெற்றுச் சென்றனர்.

பின்பு புலவர், சில பகல், சோமன் நல்விருந்தினரா யிருந்து அவர்பால் பிரியா விடைபெற்று, அப்பொழுது இரண்டாம் இராஜராஜ சோழனுக்கு அரசிருக்கைத் தானமாய் வீறு பெற்றுப் புகழுடன் சிறந்து விளங்கிய உறையூரடைந்து அரண்மனைசார்ந்து இராஜராஜனைக்கண்டு, தாம் புவனை சேர்ந்து சோமன் மனையில் தங்கியதையும், ஆங்கு ஆவூர்ச் செங்குந்தர்கட்கும் தமக்கும் நடந்த சம்பாஷணைகளையும், தமக்காகச் சோமன் பரிந்து காட்டிய அருஞ்செயலையும் அடைவுடன் விளக்கி, இனிச் செங்குந்தர் பொருட்டுத் தாம் நடாத்தப்புகும் அரிய காரியத்தையும், பெரிய செயலையும், அது நடைபெறுங் காலத்தையும் விவரப்பட மொழிந்தனர். புதுமையும் அதிசயமுமான இவ்வருஞ் சொல்லைக் கேட்ட சோழன், தமிழின் அளப்பரிய ஆற்றலையும், அதன் தெய்விகத் தன்மையையும் செவ்வனம் அறிந்தவன் ஆனதினால், வியந்த சிந்தையனாகிக் கவிப்பெருமானின் பெரும்புலமைத் திறனுக்கும், திருவிளையாடலுக்கும் பெரிதுங் களித்து அத்தெய்விகச் செயல் நிகழும் நன்னாளை எதிர்பார்த் திருந்தனன்.

கூத்தர்பால் விடைபெற்றுச் சென்ற செங்குந்தர்கள், இனி ஆகவேண்டியிருக்கும் பெருவிஷயத்திற்காகத் தங்களுள், ஒரு மகாநாடு கூட்டி அதில், பாமாலை பெறவிருக்கும் விருப்பத்தையும், அது பாடுவோரின் பெரும்புலமையையும், பாடுதற்காகப் புலவர் பரிசாகக்கோரும் தலைப்பிள்ளைகள் சிரங்களையும், அவைகளைத் தருவதாகத் தாங்கள் தீர்மானித்திருப்பதையும், அத்தலைகள் இன்னகாலத்தில் இன்னவிடத்தில் வந்து தருவ

தென்ற விவரத்தையும், நூல் பாடித் தருவதாகப் புலவர் கூறியுள்ள நன்னூலையும் பற்றி விவரப்பட எடுத்தோதி அனை வரையும் தாங்கள் கொண்டுள்ள விருப்பத்தை நிறைவேற் றும்படி வற்புறுத்தி, ஏகமனதாய்ச் சம்மதிக்கச்செய்து ஒரு தீர் மானமாக்கி, அத்தீர்மானத்தைத் தங்கள் நாட்டுக்குச் சம்பந் தப்பட்ட கிளைநாடுகளுக்குத் தெரிவிக்க ஒரு திருமுகம் வரை ந்து அதனை அந்நாடுகளுக்குத் தூதுவர் மூலம் அனுப்பி வைத் தனர்.

அத்திருமுகம் பெற்ற ஒரு நாட்டூர் நீங்க, மற்றைய நாட்டாரெல்லாம் இவ்வுலகினர் என்றும் கேட்டிராத ஓர் அதி சய சம்பவத்தைத் தமிழ்நாட்டுமக்கள் கண்டுவியக்கும் வண்ணம் அரிதினும்அரியதும், உளந்திடுக்கிடச்செய்யவல்லதும், நெடிது ஆலோசனைக்கு இடந்தருவதுமாகிய பெரிய காரியத்தை வெகு எளிதாகச் செய்யத் துணிந்துகொண்டிருக்கும் ஆலூர் நாட்டி னர் குலங்காக்கும் பெரிய செயலுக்கு மகிழ்ந்து, தாமும் மகா நாட்டுத் தீர்மானத்துக்கு உடன்பட்டுக் குறித்த காலத்தில் உறையூரடைந்து வாய்மை தவறாது கூத்தர் குறித்த சோழன் அரண்மனைச் சபா மண்டபத்தில் தங்கள் தங்கள் வீதாசாரம் தலைப்பிள்ளைகள் தலைகளை யரிந்து சிரவாசனஞ் சேர்த்து அதன் மீது இரத்தப் பாவாடை விரித்து அலங்கரித்து வைத்தனர்.

இவற்றிற்கு அடியில் வரும் செய்யுட்கள் சான்றாகக் காண்கின்றன.

---

* திருமலைராயன் பட்டினத்து நாட்டார் தலைகொடுக்க அஞ் சினராதலால், தலைகொடா மரபினர் எனப் பெயர்பெற்று மற்றைய நாட்டாரோடு மணவினையாதிகளிற் சம்பந்தப்படாது தனியே இருக் கின்றனர் என்ப. வேறு சிலர் தலைகொடுக்க மறுத்தவர் சோழநாட் டுத் திருமகல் நாட்டினர் எனவும் கூறுவர்.

"மற்றைய குலத்தி னோர்நம் மகிமைநன் குணர வேண்டி
யிற்றையீ தரங்கேற் றற்கா யிரந்தலை தருதி ரீண்டப்
பொற்றைமீ திருந்து சொல்வே னென்றனன் பொருக்கென் றீந்தார்
அற்றையாங் குரைப்பக் கேட்டோர் அதிசயத் தயர்ந்தார் அம்மா!"

புலவர் புராணம்

"மெய்யுளுக் காதநன் னுவைப் படைத்தவர் மெய்யிற்சற்று
மையுளுக் காநமற் கோலைவிட் டோர்வெற்றி வாள்கொடுச்சி
கொய்யுளுக் காவண மென்றே·கவியொட்டக் கூத்தன் சொன்ன
செய்யுளுக் காச்சிரப் பாவாடை யிட்டவர் செங்குந்தரே."

செங்குந்தர் மாலை.

மேற்குறித்த சம்பவத்தைக்கொண்டு, 8 - 9 - 10 - ஆம் நூற்றாண்டுகளில் சோழர், பல்லவர் அரசாட்சி பிரபலம் பெற்றிருந்த காலத்தில், அவ்வரசர்களிடத்துச் செங்குந்தர்கள் எனும் கைக்கோளர்கள், முதற்றரப்படை வீரராய்ச் சிறந்து, முன்னணியில் அஞ்சாது நின்று ஆண்மை செலுத்திப் பகைவரைப் புறங்கண்டு வெற்றிமாலை புனைந்து "கைக்கோளப் பெரும்படை" என்று பெயர் சிறந்து உயிரை ஒரு பொருட்படுத்தாது துரும்பென மதிக்கும் இயல்பினராய் விளங்கினதாகத் தெரிகிறது. இம்மரபினர் தலை கொடுப்பதும், ஆன்மத் தியாகம் செய்வதும் சர்வசாதாரணமான செயலாய்ப் பழக்கத்தில் கொண்டிருந்தார்களென்பது இவர்களது பழைய வரலாறுகளை ஆராய்ந்தறிவார்க்குத் தெற்றெனப் புலப்படும். அன்றியும், அக்காலத்தில் இவ்வீரச் செயலை "வஞ்சின மொழிதல்" என்று வழங்குவர் தமிழ் நூலார். இவர்கள் அரசர்களிடத்தே யன்றிப் பெரும் பிரபுக்களிடத்தும் "வேளைக்காரர்" என்ற உத்தியோகத்தில் அமர்ந்து ஆன்மத் தியாகிகளாய்த் தறுகண்மறவராய் வீறுபெற்று வந்தார்களென்பதும் பழந்தமிழ்ச்

சாஸனங்களில் ஏராளமாகக் காணலாம். இவ்வழக்கம் ஜப்பானிலும் "ஹாராகிரி" என்ற பெயருடன் க்ஷத்திரிய ஜாதியினரால் அனுஷ்டிக்கப்பட்டு வந்ததாகப் பழஞ்சரிதங்களில் காணப்படுகிறது. இது வீரர்க்கு ஒருவகைத் தருமம்போலும்.

இத்தகைய வீரர்கள் பெருமரபின் வழிவந்த செங்குந்தர்கள், பிரபந்தம் பெறுதற்குத் தலைப்பிள்ளைகள் தலைகளை அரிந்து சிரச்சிங்காதனம் அடுக்கி இரத்தப் பாவாடை விரித்தது ஓர் அதிசயமன்று.

இங்ஙனம் சிரச்சிங்காதனமிட்டுச் சிவந்த பாவாடை விரித்து வைத்திருப்பதை யுணர்ந்த கூத்தர், தம் குலத்தவரின் தீரத்திற்கும், வீரத்திற்கும், சொற் றவறாத வாய்மைக்கும், பாமாலை பெறுவதில் அவர் கொண்டுள்ள பேராவலுக்கும், மற்றும் தியாகபுத்தி, உற்சாக சிந்தை, உரம்பெற்ற குணம், தமிழ் விருப்பம் முதலிய வற்றிற்கும் மிகவியந்து, அவர்களை நோக்கி, 'வெற்றிப்பாட்டினையுடைய வேற்படைக் குந்தர்காள்! நீங்கள் அலங்கரித்துள்ள அருந்தலை ஆசனத்தருகே சென்று அமர்ந்திருங்கள். நாம் விரைவில் அங்கு வருகின்றோம்' என்று கூறி அவர்களை அனுப்பிவிட்டுத் தாம் ஸ்நானஞ் செய்து நீறணிந்து, சபம், தவம், தியானம், ஸ்தோத்திரம் முதலியவைகளை முறைப்படி முடித்து, உபாசனை தெய்வத்தை உள்ளன்புடன் பூசித்து, வணங்கித் தொழுது, தமது கோரிக்கையை இடையூறின்றி இனிது நிறைவேற்றித் தருமாறு பிரார்த்தித்து, வணங்கித் தமக்குரிய விருது வரிசைகளோடு மங்கல வாத்திய முழங்கச் சபா மண்டபத்திற்கு எழுந்தருளினர்.

இவர் இங்ஙனம் சபாமண்டபம் வருவதற்கு முன்னரேயே, அரசரேறுகிய இராஜராஜன் எண்பேராயங்களுடனும், மற்றும் தன்னைத் தொடர்ந்த பிரதான நகர மாந்தரோடும் சபா

மண்டபத்தை யடைந்து தனது ஆசனத்தில் அமர்ந்தனன். மற்றையரும் அவரவர்தந் தகுதிக்கேற்ப இருக்கைகளில் இருந்தனர். இங்ஙனம் சோழர்பிரானும் மற்றும் பலரும் தெய்வத் தமிழ்பாடும் பெருமித வீரத்தைக் காண்பதற்கு அரண்மனையில் குழுமியிருந்தனர் என்பது :—

"கோட்கவி கொண்டு மாக்கள் கொடுந்தமிழ் கூறநீத்துத்
தாட்கவிப் புதிய வாட்டந் தலைக்கடை துரந்து சாட
வாட்கவி கொண்ட மன்னன் வளவனு மகிழ நாமே
நாட்கவி பாடு நாட்போ லிருப்பது பெரிய நாடே" (2)

என்ற செய்யுளாலும், ஈட்டியெழுபது.

"புல்லிய கவிவாணர், முன்னோரது மேற்கோளாகிய பழமொழிப் பொருளைக்கொண்டு சில சில தமிழ்ப் பிரபந்தங்களைப் பாடிவந்து அரங்கேற்றும் கொடுந்தமிழை நீக்கி, நாடோறும் உண்டாகும் இப்புதிய ஆட்டங்கள்கெட அப்போலிக் கவிகளைத் தலைவாயில் அளவும் துரத்திச் சாடும்படி வாள்போன்ற என்னைக் கவிச்சக்கரவர்த்தியாகக் கொண்டிருக்கும் இராஜராஜ சோழனும்மகிழ்ந்து கேட்கக்கூத்தனாகியநாமே நாடோறும் புதிதாக விளங்கும் இக்கவிபாடுகின்ற இந்நாளைப் போலவே பெரிய சோழ நாடானது சிறப்புற்றது" எனவரும் அதன் உரையாலும் ; பின்னும்,

" வட்டமா ரவையுழை வந்த மேலவர்
இட்டபா வாடைகண் டிசைபெ ருதுமண்
டூட்டவந் துயிர்பெறீஇ மொய்த்து ளேமெனக்
கட்டுள குந்தர்சீர் கழறி யேத்தினர்" (63) ஈட்டியெழுபது.

எனவரும் பாடலாலும்,

" வட்டமான இச்சபையின் கண்வந்த பெரியோர், செங்குந்தத் தலைவர்கள் பிரபந்தங் கேட்கக் கூத்தனாகிய நமக்குச்

செய்வித்த சிரச்சிங்காதனத்துடன் விரிக்கப்பட்டிருந்த இரத்தப் பாவாடையைக் கண்டு, நாம் இவ்வுலக முழுதும் பல குலங்களிற் பிறந்துவந்து இத்தகைய மேலான புகழைப் பெற்றுக் கொள்ளாது, உயிர்பெற்று நெருங்கியிருக்கின்றோம். இஃதென்னே? என்று தம்மை இகழ்ந்து கட்டுப்பாட்டினையுடைய செங்குந்தத் தலைவாது சிறப்புக்களை யெடுத்துச் சொல்லித் துதித்தனர்,'' எனவரும் அதன் பொருளாலும் நன்கு அறியலாகும்.

அங்ஙனம் பூஜா கோலத்துடன் வந்த கூத்தர், செந்தமிழ்த் துறையனைத்தும் தோய்ந்து, இனிய கவிகளை எழில்பெற இசைக்க வல்லாராய், தெய்வத்தினிடத்துச் சீரிய பக்தியும், அடியாரிடத்து உள்ளங்கனிந்த உவப்பும், ஒழுக்கத்தை உயிர் என ஓம்பும் ஒள்ளிய குணமும், எல்லாம் தெய்வச் செயலெனக் கருதும் தெள்ளிய தன்மையும் சிறக்க வாய்ந்தவரானதால், அழகுற அமைக்கப்பட்டிருந்த தலைத்தவிசை வலம் வந்து, வாழ்த்திப் பின், அதின்மீதிவர்ந்து பதுமாசனமிட்டு வீற்றிருந்து, இனிக் கூறப்புகும் நூல் இனிது முடியுமாறு இரு கரங்களையும் சிரத்தின்மீது கூப்பி, நாமகளாரை நலம்பெற வாழ்த்தி, அவர் பொன்னார் திருவடியைப் புந்தியில் நினைந்து, அவரது திவ்யமங்களத் திருவுருவை உள்ளக்கிழியில் உவகை பெற வரைந்து, மனம் வாக்குக் காயங்கள் ஒன்றுகூடி ஒருமைப்படச் செய்து,—

"நாட்டிலுயர் செங்குந்த நாயகர்மீ திற்சிறந்த
ஈட்டி யெழுப திணைப்பாடக்—கோட்டில்
பருமா வரையதனிற் பாரதநூல் தீட்டும்
கரிமா முகன்கழலே காப்பு"

எனக் காப்புச் செய்யுள் தொடங்கி,

"பூவார் புவனையிற் சோமன் றரும்பழி போனபின்பு
நாவாணர் போற்றிய நாடகங் கேட்ப நலமுடனே
யாவாணர் செங்குந்த ராயிரத் தெண்டலை கொய்திரத்தப்
பாவாடை யிட்ட துலகமெல் லாம்புகழ் பாலித்ததே"

எனப் பாயிரங் கூறி,

"பூதலம் வாழ்க குந்தர் பொலிவுடன் விளங்க நான்கு
வேதமெந் நாளு மோங்க வேதியர் பசுக்கள் பல்க
மாதவர் வளவன் செங்கோல் வளமைதன் றூதுநிற்க
ஓதமே யறையும் பொன்னி யுறந்தைபுஞ் சிறக்க மாதோ"

என நூல்கூற ஆரம்பித்து,

"செந்தமிழ்க் காகப் போந்து சிவந்தபா வாடை யாக
நந்தமக் கிடுங்கா லெந்த நகரமும் உளம்வி யந்த
அந்தரத் தமரர் வாழ்த்தி யணிமலர் மாரி பெய்தார்
இந்தச்செங் குந்தர்பெற்ற விசையெவர் பெற்றா ரம்மா"

ஈட்டியெழுபது

எனப் பாடி முடித்துச் சிரச்சிங்காதனத்தினின்றும் இழிந்தனர். நூலின் இடையிலுள்ள 2 முதல் 69 பாடல்களில் செவ்வேளின் சீர்த்திகளும், செங்குந்தர்களது அரசு, வீரம், வெற்றி, விளங்குபுகழ், பெருமை, கொடை, முதலிய மாட்சிமைகளும், ஐந்தெழுத்து, திருவெண்ணீறு, உருத்திராக்கம் முதலியவைகளின் அருமை பெருமைகளும், சைவ நலச் சிறப்பும், தமிழ் மணங்கமழப் பாடியிருக்கும் அருமைப் பாடுகளும் தமிழ்நல முணர்ந்தார் சுவைக்கத் தக்க மாண்புடையன.

பின்னர், நிறைமொழிச் செல்வரும், மெய்ப்புலமைக் கவிஞருமாகிய கூத்தர் அச்சிரச் சிங்காதனத்தின் எதிரே

சென்று மீண்டும், அந்நாமகளாரின் நல்லுருவை மனத்தில் நிறுத்தித் தியானபரராய் நின்று, எண்வகைச் சித்திகளில் ஒன்றை யுட்கொண்டு,

" கலைவாணி நீயுலகில் இருப்பதுவுங் கல்வியுணர்
கவிவல் லோரை
நிலையாகப் புரப்பதுவு மவர்நாவில் வாழ்வதுவு
நிசமே யன்றோ !
சிலைவாண னுவிருந்தா யிரம்புயங்க டுணிந்துமுயர்
சீவ னுற்றான்
தலையாவி கொடுத்திடுஞ்செங் குந்தருயிர் பெற்றிடவுந்
தயைசெய் வாயே" எழுப்பெழுபது

என்று பிரார்த்தித்தனர். புலவர் தம் வாக்கு விசேடமும், செந்தமிழின் தெய்விகத்திறனும், சித்திப்பயிற்சியில் தேறிய செய்கையும், சகலகலாவல்லியின் தண்ணருளும் ஒருங்கு கூடி, முன்னம் உடம்பைவிட் டறுபட்ட சிரங்களிற் சென்று பரவ, அவை உணர்ச்சிதோன்றித் தம்தம் உடம்போடு சென்று பொருந்தின. உடனே அவ்வீரர்களனைவரும் உயிர்பெற்று எழுந்து குதூகலத்தால் கூத்தாடினர். இதுகண்ட செங்குந்தர் கள் யாவரும் சந்தோஷத்தால் ஆரவாரித்தனர்.

சபாமண்டபத்தில் கூடியிருந்த அரசனும் அவையினரும் இப்பெரும் புதுமைக்கு மிகவியந்து, இது, நினைத்தற்கும் செய் தற்கும் அரிய பெரிய காரியமாகவே காண்கின்றது என மேலும் நிச்சயித்து, இது கல்வி நிறைவுடைய கவிச்சக்கரவர்த் தியின் அருள்வாக்கின் அருமைப்பாடோ? "நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து—மறைமொழி காட்டிவிடும்" என்ற மூதுரையின் தத்துவமோ? தமிழ்த்தேவியின் தண்ணருளோ? செங்குந்த நன்மக்களது உண்மை வழிபாட்டின் பயனோ?

தலைப்பிள்ளைகளது ஆன்மத்தியாகத்தின் அரும்பெருந்திறனே? செய்தற்கரிய இவர்களது செய்கையை உலகம் மதித்துப் பேச வேண்டுமென்பது தெய்வத்தின் திருவுளமோ? மற்றும் யாதோ? எத்தகையோர்க்கும் பெருவியப்பைத் தரும் இத்தினக் காட்சி அதிசயம்! அதிசயம்!! எனக் கூறிக் கொண்டாடினார்கள். தெய்வத் திருவருள் பெற்றோர்க்கு ஏதுதான் சாத்தியமாகாது?

இங்ஙனம் ஒட்டக்கூத்தர் சாரதாதேவியின் தண்ணருளை நாடிப் பிரார்த்தித்ததற்கு அருள்சுரந்த அப்பிராட்டியார் உண்மைப் புலவருக்குத் தமது நிறைகருணை எப்பொழுதும் உண்டென்பதை உணர்த்தவே புலவரை அப்பொழுது உய்யக் கொண்டனராவர். இது பின்னர்ப் பாடிய "கலைவாணி நீ" என்னும் செய்யுளால் நன்கு உணரலாகும்.

இவ்வாறு துணிக்கப்பட்ட தலைகளையும், உடல்களையும் ஒட்டப்பாடிய காரணத்தால், அதுமுதல் புலவர் பெருமானுக்கு ஒட்டக்கூத்தர் என்னும் காரணப் பெயர் விசேடப் பெயராய்ச் சிறந்து வழங்கியது. ஒட்டன்—ஒட்டுத்தொழிலையுடையவன். ஒட்டனாகிய கூத்தன் என்க.

"இவரது நூற்புலமையைக் காணுமிடத்து இவர் கலைமகளார் பெருங்கருணை பெரிதும் பெற்ற வரகவிப் பெரியாரென்றே கொள்ளுதல் வேண்டும். ஒட்டக்கூத்தருடைய அகச்சான்றினால், போந்த இவ்வரலாற்றை நம்புவதற்குப் போதிய காரணங்கள் உள. கடவுள் உயிருக்குத் தோன்றி அருள் செய்யார் என்னும் கொள்கையுடையாரே இதனை நம்பாதிருக்கலாம். கடவுள் உயிர்க்குத் தோன்றி அருள் செய்வது உயிர்களின் பரிபக்குவத்திற் கேற்ற செயலேயாகும். இது

னைத் தக்க ஆதாரங்காட்டி மறுப்பவர்களே இச்சம்பவத்தை நம்ப இடமில்லை யென்று நாட்டுதற்கு உரியவராவர். இதனைக் கருதாவிடத்து ஒட்டக்கூத்தர் சம்பவத்தை ஆராய்கின்றவர் அவர் திருவருள் சிறக்கப் பெற்றவர் என்பதை நம்பாதிருத்தற்கு வேறு காரணங் காட்ட முடியாது.

ஒட்டக்கூத்தர் முதலிய அருட்கவிப் புலவர்கள் தமது புகழ் நாட்டுதற்பொட்டு அற்புதங்கள் யாவும் செய்திலர். பெருங்கருணையானே பிறவுயிர்கட்குப் பேருதவி செய்யக் கருதியகாலை, அவர்கள் கருதியவண்ணமே கடவுளுடைய திருவருள் அவர்கட்குத் துணைநின்று அற்புதங்களை நிகழ்த்தியது. அற்புதங்களை இயற்கை விரோதம் என்பார், ஒடுங்கிய ஆராய்ச்சியுடையவ ராவார். உலகத்தையும், உயிர்களையும், ஆண்டருளும் ஒரு தனி முதல்வனது திருவருளினாலே நிகழக்கூடாத செய்தி யாதுளது? போன்பினால் வழிபடும் அறிஞர்க்கு அவர்கள் வேண்டியவாறே கடவுள் வேண்டியதை ஈவர். உடலில் உயிர் நிற்பதும், அதனை நீத்துப் பிறிதோர் இடத்திற்குச் செல்வதும், அங்கு நின்று மீள்வதும், இறைவனது கட்டளைப்படியே ஆமென்று கருதுவோர் சென்ற உயிரை அவனது திருவருளால் மீட்பித்தல் முடியாத காரியமென்று கொள்ளமாட்டார். போன்பில்லாதவர்க்கு அவர்கள் அவர்கள் விரும்பிய வண்ணம் இறைவன் அருள்செய்யாத காரணத்தை வைத்துப் போன்பாது திடவருட் பேற்றினை மறுத்தல் தவறாகும்.

"ஆட்பால வற்கருளும் ஆதியும் ஆதிமாண்பும்
கேட்பான் புகில் அளவில்லை"

என்ற வண்ணம் அவரவர் அன்பிற்குத் தக்கவாறே இறைவர் வெளிப்பட்டு அருள் செய்வர். பலமக்கட்குத் தந்தையாகிய

ஒருவர், தம்மக்கள் எல்லாரிடத்தும் ஒத்தகருணை யுடையார் எனினும், அவரவர் செயலுக்கும், அறிவிற்கும், ஆற்றலுக்கும் ஏற்ப, அவர்கட்கு வேண்டியவற்றை உதவுதல் போல, இறைவரும், எல்லாவுயிர்களிடத்தும் ஒத்த கருணையை உடையவராயினும், பக்குவத்திற் கேற்றவாறு வெவ்வேறு உயிர்கட்கு வெவ்வேறு முறையாக அருளைச் செய்வார். உலகத்திலே செல்வம், ஆயுள், உடல்வலி முதலியன வெவ்வேறு உயிர்கட்கு வெவ்வேறு விதமாக அளிக்கப்பட் டுள்ளன. இவ்வுண்மையுணராது கலைமகளார் ஒட்டக்கூத்தர்க்கு நேர்நின் றருளினமை இல்லையென வுரைப்பதும் எண்ணுவதும் நுண்ணறிவுடையார் செயலாகா.

இயற்கைச் சட்டங்கள் அனைத்தையும், தாம் அறிந்துவிட்டதாக எண்ணி, அச்சட்டங்களுக்கு மாறாக அற்புதம் நிகழ முடியாது என்று கூறுதல் ஆராய்ச்சிக் குறைவால் எழுவதேயாம். தீ எந்த இடத்தில் இருந்தாலும் புகையிருக்க வேண்டுமென்றால் மின்சார விளக்குப் புகையாமை கண்டு, அவ்வொளி தீயின் ஒளி அன்றென்று கொள்ளுதல் எவ்வாறு தவறிய கொள்கையாகுமோ அவ்வாறே இறந்த உயிர் மீள்வதில்லை யென்ற அனுபவத்தைக் கைப்பற்றிக் கடவுள் திருவருளாலும் இறந்த உயிரை மீட்பித்தல் கூடாதென்று கூறுதல் பிழைபட்ட கூற்றாகும். இக்காரணங்களால் ஒட்டக்கூத்தராகிய அருட்புலமையாளர் அற்புதங்கள் இயற்றவில்லை யெனக் கூறுதலும் ஆராய்ச்சிக் குறைவேயாகும். இவ்வாறே அவர் சரித்திர ஆராய்ச்சியால் எழும் தடைகட்கெல்லாம் விடை தேடிக்கொள்ள முயலாது, விஷயத்தை வாசித்த அளவிலேயே தமக்குத் தவறென்று தோன்றுவதை உண்மைத் தவறென்றே கொள்ளுதல் ஆராய்ச்சிக் குறைவேயாம். இக்காலத்தில்

ஆராய்ச்சியென்ற பெயரால், பலர், தத்தமக்குக் குற்றமாகத் தோன்றுவதை யெல்லாம், உண்மையாகக் குற்றமென்றே சாதிக்க முயலுகின்றனர். உள்ளத் தெளிவோடு நுணுகி ஆராயும் முறையானது நாளடைவில், வளர்ந்தோங்குமாயின், இவ்வாராய்ச்சிக் குற்றங்கள் இல்லாதொழியும். ஆராய்ச்சிக் குறையினால் ஏற்படும் சமயப் பழிப்பும் பெரியாரைப் பழித்தலும் ஆராய்ச்சி இன்மையால் வரும் மூட நம்பிக்கையும், சரித்திரக் கண்ணின்றித் தவறாகக் கொள்ளப்படும் பொருள் கோண் முறையும், நடுநிலைபற்றிய உண்மையான ஆராய்ச்சி நிலை பெறுமாயின், நாம் நமது சமயப் பெரியார்கள் நிகழ்த்திய அற்புதங்கள், புலவர்கள் தம் வரகவிப் புலமையால் காட்டிய அதிசய சம்பவங்கள் எல்லாம் உண்மையென்றே கருதக் கூடிய ஆஸ்திக புத்தி உரம் பெற்று விளங்கக் கூடும்.

இனி, இப்புலவர் பெருமான் அருங்கவி, ஊழையும் வெல்ல வல்ல ஆற்றல்வாய்ந்த தென்பதைப் பிற்காலக் கவி யொருவர், புகழ்ந்து பாடியிருப்பது இவர் இறந்த உயிரை மீட்பிக்கும் ஆற்றல் வாய்ந்த அருட்புலமை வல்லா ரென்பதற்குத் தக்க சான்றாகின்றது. அது:—

"தேசுபெறும்
ஊழுக் தக் கூத்தன் உவக்கப் புகழேந்தி"

என்பதாம். இதற்கேற்பத் தேவர் திருவள்ளுவரும் தமது திருக்குறளில் 27-ஆவது 'தவம்' என்னும் அதிகாரத்தில்,

"கூற்றங் குதித்தலுங் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு"

எனக் கூறித் தவம் கைவரப்பெற்றுச் சாபாநுக்கிரக சக்தி வாய்ந்தவர் எமனது கட்டளையையும் கடக்கவல்ல ஆற்றல் வாய்ந்தா ரென்பதை விளங்க வைத்தனர். இக்கருத்தினையே நீதிநெறிவிளக்க நூலாசிரியர்,

" உலையா முயற்சி களைகணு மூழின்
வலிசிந்தும் வன்மையு முண்டே—உலகறிய
பான்முளை தின்று மறலி உயிர்குடித்த
கான்முளையே சாலுங் கரி "

எனக் கூறி ஒரு உபமானத்தாலும் உண்மைபெற வைத்தனர். இவைகளினால், மெய்ப்புலமையும், தவமும், கடவுளருளும், கைவரப்பெற்றோர் எதனையும் ஆற்றவல்ல திறமுடையா ரென்பது நன்கு அறியப்பட்டது.

இங்ஙனம் தெய்வத் தமிழ்ப் பாவால் அறபட்ட சிரங்கள் உயிர்பெற்றெழுந்த அரிய சம்பவத்தைப் பிற்காலத் தமிழாசிரியர்களும் தம்தம் நூல்களிற் சிறப்பாக எடுத்தாண்டிருக்கின்றனர். அவைகள் இதன் உண்மையை உறுதிப்படுத்தற்குப் போதிய ஆதாரங்களாகக் காணப்படுகின்றன. அப்பாடல்கள் அடியில் வருமாறு:—

" நாட்டிற் சிறந்தவ ரெல்லா நடுங்க நராதிபர்முன்
பூட்டு சிம்மாதன ராயிரத் தேண்மர்க்தும் போனவுயிர்
மீட்ட கவிச்சக்கர வர்த்தி........."

வீரநாராயணர் விஜயம்.

" ஈடற்ற வம்பலக் கூத்தன் றலைத்தவி சேறித்தரும்
பாடற் புனைந்தபின் மெய்யாவுந் தந்தலை பற்றியுயிர்
கூடப் புகலு மெழுப்பேழ்ப தாலொட்டக் கூத்தனென்னத்
தேடற் கரிய திருப்பேரைத் தந்தவர் செங்குந்தரே. 78

செங்—கலித்துறைமாலை.

" .................சோழன் றிருமுன்னர்
வல்லமையி னாலே வழங்கியவன்—நல்லசிரச்
சிங்கா தனத்திருந்து சிந்தைமகிழ்ந் தெவ்வெவரும்
அங்கா தாவி னகங்குளிரத்—தங்குமிகு

விண்ணி னமரர் விடாது மலர்மாரி
மண்ணிற் சொரிந்துமிக வாழ்த்தெடுப்ப—எண்ணரிய
ஈட்டி யெழுபதென வின்புறுதஞ் சாதிநூல்
நாட்டிவைத்துப் பின்னரவர் நல்சிரம்—வாட்டமற
ஒட்டும் படிக்கோ ரெழுப்பெழுப தென்றொருநூல்
கட்டுரைத்தே நற்கலைகள் கற்றோரால்—இட்டமொடு
கூறுதமி ழொட்டக் கூத்தரெனப் பேர்பெற்றார்
வீறுமவர் கீர்த்தி வியனுலகிற்—றேறுகலை
கற்றவரெல் லாமறிவார் கைக்கனிபோற் கல்லாத
மற்றவருங் கேள்வியுற்று வாழ்கின்றார்.''

சேனைத்தலைவர் மரபு விளக்கச் சூறவளி 49—55.

' ... ... ... ... ... ... —யின்மைசொலா
தாற்றலொடு மட்டசிர வாதனத்தி லான்றோர்கள்
போற்றவருந் தீட்டிபுகழ் பூரணக்கை—வீற்றுசிரம்
யாவுந்தத் தம்முடலோ டாகியுயிர்ப் பான்புரிந்து
கூவுமொட்டக் கூத்தனென்பேர் கொள்ளுங்கை.'' 55—58.

செங்—திருக்கை வழக்கம்.

" வளம்பெறு சென்னிச்சிம் மாசனங் கூத்தர்க்கு
வைத்த செங்கை " (6)

" மதுரைத் தமிழ்க்குத் தலையே கொடுத்த
மகிமைச் செங்கை " 32

செங்—திருக்கை வழக்கத்தந்தாதி.

"வெட்டத்தா மிருகூ றகி விழுந்தவர் தம்மை யெல்லாம்
கிட்டப்பார்த் திருந்தோர் மெச்சக் கிளர்ந்தவே லவனைப் போற்றும்
இட்டத்தாற் பழைய வண்ண மிலங்கிடப் பொருந்தி விட்டான்
ஒட்டக்கூத் தனெனு நாம முலகமுற் றுரைத்த தன்றே "

புலவர் புராணம்.

'ஈட்டியெழுபது' என்னும் இவ்வரும் பிரபந்தம் உறையூரின் கண்ணே பாடப்பட்டது. இது—இந்நூல் காப்பாகிய

'பூதலம்வாழ்' என்னுஞ் செய்யுளில் "வேதமேயறையும் போன்னி யுறந்தையுஞ் சிறக்கமாதோ" எனவரும் ஈற்றடியால் உணரப்படும்.

பாண்டிய பல்லவச் சக்கரவர்த்திகள் தங்கள் நல்லரசாட்சிக்குத் தலைமை நகரங்களாக மதுரையையும், காஞ்சிபுரத்தையும் வகுத்துக்கொண்டதுபோலச் சோழ சக்கரவர்த்திகள் தங்களது ஆளுகைக்கு உறையூர், தஞ்சை, பழையாறை, தில்லை, ஆரூர், கங்கைகொண்ட சோழபுரம் ஆதிய நகரங்களை ஏற்படுத்திக் கொண்டனர். இவ்வுறையூரை, 'டாலமி சோர்னகாஸ்' என்னும் பெயருடைய வரலாற்று ஆசிரியர், அரசிருக்கைத் தலை நகரான "ஒரு தௌரா" என்கின்றனர். உறந்தை யென்பதும் இதுவே. இந்நகரம் காவிரியாற்றின் தென்கரையில் உள்ளது. இக்காலத்திலும் உறையூர் என்ற பெயரையே வகித்துத் திரிச்சிராப்பள்ளிக்குப் பக்கத்தேயுள்ளது. திரிசிரபுரக்கல்வெட்டிலும் 'உலகமடந்தை நுதலுறந்தைப்பதி-யந்நுதற்குத் திலதம் பரமனமருஞ் சிராமலை' என வருவதும் இவ்வுண்மையை வலியுறுத்தும். சுமார் ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முந்திய அப்பழங்காலத்தில் இப்பட்டினம் ஒரு கோட்டையாலும், அதன் வெளியே ஒரு அகழியாலும், இதன் புறம்பே ஒரு காவன் மரக்காவாலும், சூழப்பட்டிருந்தன. சிலப்பதிகாரத்தில் நாடுகாண் காதையில், 'உறையூர் நொச்சி யொருபுடை யொதுங்கி' என்று கூறப்பட்டிருக்கிறது. மேலும் இந்நகரம் சரித்திர சம்பந்தத்தால் 'கோழியூர்' எனப்படும். முற்காலத்தில், கோழியொன்று யானையைப் போரில் வென்று சிறந்ததால், * அந்நிலத்திற் கட்டப்பட்ட நகரத்திற்

* ஆனைகுந்தியில் முயலொன்று சிங்கத்தைத் துரத்தியவிடத்தில் விஜய நகரம் கட்டப்பட்டதற்கு வரலாறிருப்பதுபோல இதனையுங் கொள்க. (ஸ்ரீகிருஷ்ணதேவராயர் சரிதம், 7-ஆம் பக்கம்.)

குக் 'கோழி' என்பது பெயராயிற்று என்பர் அடியார்க்கு நல்லார்.

இதனைச் 'சிலப்பதிகாரம்' நாடுகாண் காதையுள்,—

" முறஞ்செவி வாரண முன்சம முருக்கிய
புறஞ்சிறை வாரணம் புக்கனர் "

என்று இளங்கோவடிகள் கூறுவார்.

இங்ஙனம் சீரும், சிறப்பும் பெற்றிலங்கிய இந்நகர் இத்தகைய தெய்விகங்கள் விளங்கிப் புகழ்தற்குரிய சிறந்த நிலைக்களங்களாக விருந்ததென்றால் இதன் பெருமை அளவிடற் பாலதோ ?

இவ்வுறையூரை அக்காலத்தே அரசுபுரிந்து இவ்வதிசய விளைவைத் தமது சபாமண்டபத்தில் நிகழ்க்கண்டவன் இரண்டாங் குலோத்துங்கன் மகன் இரண்டாம் இராஜராஜசோழன் ஆவன். இது—

கலிவிருத்தம்

" முத்தமி ழிராசரா சேந்திரன் முன்னமே
சுத்தவீ ரத்திறந் துலங்கு தற்கொரு
பொய்த்தலை கொடுத்தவிற் புகழ்பெ றுதென
மெய்த்தலை கொடுத்தன வீரக் குந்தமே " 60

ஈட்டியெழுபது.

எனவரும் திருவிருத்தத்தால் உணரப்படும்.

ஆராய்ச்சி.

இவ்வரலாற்றில் ஒட்டக்கூத்தர் அறுபட்ட சிரங்களை ஒட்டப்பாடிய செய்கை நம்பத்தகாததும், இயற்கை விரோதமானதென்று இக்கால ஆங்கில நாகரிக யுக்திவாதமிக்கார் சிலர்

கூறுவர். இது தமிழின் அளப்பரிய சக்தியையும், தெய்வத் தன்மையையும், அணிமா முதலிய எண்வகை அருந்தொழில் களின் ஆற்றல்களையும் அறிந்தேனும், உணர்ந்தேனும், கேட் டேனும் இருப்பின், ஒருபோதும் இங்ஙனம் கூறத் துணியார். முதலில் தமிழ்ப் பாஷையின் தெய்வத்தன்மையைச் சுருங்கக் கூறிப் பின், மற்றதைக் கூறுவாம். தமிழ்ச்செய்யுளின் பெரு மையை,—

"தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
யுண்ட பாலனை யழைத்தது மெலும்பு பெண்ணுருவாக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்"

என்று திருவிளையாடற் புராணங் கூறும்.

இஃதன்றித் தமிழில் 'அங்கதம்' பாடுதல் என்கிற ஒரு விதியைத் 'தொல்காப்பியம், பொருளதிகாரம் செய்யுளியல்' 49-ஆம் சூத்திரத்துள் "நிறைமொழி மாந்தராணை" என்று கூறுகின்றது. அங்கதம் ஒருவர் வாழவும் தாழவும் செய்ய வல்ல மந்திரச் செய்யுள்.

மதுரை 'வடமொழிச் சங்கத்தார் தலைவனாக இருந்த குயக்கொண்டான்' என்பவன் தமிழை இகழ்ந்ததுபற்றி நக்கீரதேவர் அவனை முனிந்து,

"முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி
பரணர் கபிலரும் வாழி—அரணிலா
ஆனந்த வேட்கையான் வேட்கோக் குயக்கொண்டான்
ஆனந்தஞ் சேர்கசுவா கா"

என்றுபாட அவன் இறந்தனன் என்றும், அதுகண்ட 'வட மொழிச் சங்கத்தார்' திடுக்கிட்டு மிகவருந்தி அறியாது செய்த

பிழையை மன்னித்தல் வேண்டும் என்று இறைஞ்சி நிற்க, நக்கீரதேவர் கோபம் தணிந்து,

"ஆரிய நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தாற் காலக்கோட் பட்டானைச்—சீரிய
அந்தண் பொதியி லகத்தியனு ராணையினாற்
செந்தமிழே தீர்க்கசுவா கா"

என்று பாடி அவனைப் பிழைக்கச் செய்தனர் என்றும் 'தமிழ் நாவலர் சரிதை' கூறும்.

இவ்வெண்பா இரண்டினையும் பேராசிரியர் 'தொல்காப்பியப்' பொருளதிகார உரையில் அங்கதப்பாட்டிற்கு உதாரணமாக எடுத்துக் காட்டி, 'இவை தெற்கண் வாயில் திறவாத பட்டி மண்டபத்தார் பொருட்டு நக்கீரர் ஒருவன் வாழவும் ஒருவன் சாவவும் பாடிய மந்திரம் அங்கதப் பாட்டாயின' என்று கூறுவர்.

இதனால் தமிழின் தெய்வத்தன்மை நன்கறியப்படும். இனி, எண்வகைச் சித்திகளில், 'ஈசத்துவம்' என்பதுபற்றி மட்டும் கூறி இவ்விஷயத்தை முடிப்பாம்.

அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராப்தி, பிராகாமியம், வசித்துவம், ஈசத்துவம் என்பன எண்வகைச் சித்திகள். இவைகளில் ஈசத்துவம் என்பது,—கடவுட்டன்மை பெற்று ஆக்கல், அளித்தல், அழித்தல் (சம்ஹரித்தல்), மறைத்தல், அருளல் என்னும் ஐம்பெருஞ் செயல்களைப் புரிதலே ஈசத்துவமாம். எம்பெருமான் எவ்வாறு உயிர்களை உடலில் குடிபுகுத்தி அவரவர் இருவினையை அவரவர்க்கு ஊட்டி, வினைநீக்கி அடியவராக்கி அவைகளை முத்திக்கரையில் சேர்ப்பனோ, அவ்வாறே அவனருள் பெற்ற சிவயோகிகளும் அவனுக்குரிய ஐந்தொழிலையும் அவனருளால் இயற்ற வல்லவராவர்.

மூவாண்டிலே ஞானப்பாலுண்டு, அருள்பெற்ற பெரியா ராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார், திருமயிலாப்பூரில் 'பூம் பாவை' என்ற பெண்ணணங்கின் எலும்புக்கு மீட்டும் உயிர் கொடுத்தருளினானன்றோ? அவ்வாறு உயிர் கொடுத்தலோடு நில்லாமல் அவர் சிவபெருமான் அருளால், அப்பெண்ணைச் சின்னாளளவும் அவ்வுடலோடு வாழச் செய்தனரல்லவா? இத்திருச்செயல்களை ஆக்கல் ஆம். மற்றும், ஒருகால் திருஞான சம்பந்தப் பெருமான் எழுந்தருளி வரும்போது, அவரது விருதுகளையும், சின்னங்களையும் தடுத்த புத்தன் தலையில் இடி விழச் செய்து மடித்த அவர் திருவிளையாடலே அழித்தல் ஆம்; எம்பிரான் தோழராகிய சுந்தர மூர்த்திகள், முதலையுண்ட பாலனை அழைத்து, அவனை நெடுநாள் உலகில் வாழும்படி செய்த திருவிளையாடலும், படைத்தலுக்கும், காத்தலுக்கும் போதிய சான்றும். இனி, மறைத்தலாவது, ஞானத்தை மறக் கும்படி செய்து இருவினைப்பயனை நுகர்விப்பது. திருவாசக மோதிய மணிவாசகனார் திருப்பெருந்துறையை நண்ணி, அருட் கடலாகிய ஐயன் திருவருள் நாடி, கோவிலை வலம் வரும் பொழுது குருந்த மரத்தடியிலே சிவபெருமான் தமது அடியா ரோடு ஞானாசிரியராக எழுந்தருளியிருந்து, அவருக்கு அருள் மொழிகாட்டி ஆட்கொண்டு, 'மணிவாசக' என்று திருவாய் மலர்ந்தருளினரல்லவா! அப்போது, மணிவாசகர் இறைவ னிடத்து ஈடுபட்டு அன்பு மயமாகித் தான் என்றும், இறைவன் என்றும், வேறுபாடு உணராது வீட்டின்ப நுகர்ச்சியில் பூரித் திருந்தனராக. கண்ணுதற் கடவுள் அந்நுகர்ச்சியினின்றும் நீக்கி அவரைத் தக்க காலம் வருமளவும் இருவினைப் பயனை அடையுமாறு உலகிற் புகுத்தினரன்றோ! இதுவே மறைத்தல் ஆம்; அருளலாவது—பாசத்திலகப்பட்டு இடருற்று இறை

வன் அருள்நாடி நிற்கும் உயிர்களை அவனது திருவடி யின்பம் பெறச் செய்தலேயாம். திருஞான சம்பந்த சுவாமிகள் தமது திருமணம் காணவந்த அனைவரையும் திருப்பெரு மணமாகிய திருக்கோயிலிலே தோன்றிய பேரொளியி னுள்ளே செலுத்தி அவர்களெல்லாரும் வீட்டின்பம் பெறும்படி அருள் செய்த திருவிளையாடலே அருளல் ஆம்.

இச்சித்தி இறைவனடிக்கு மெய்யன்பு செலுத்துகின்ற உண்மை யடியவர்பால் தாமே தோன்றித் திகழும் அவ்வடியா ரும் அவைகளை விரும்புபவர் அல்ல. ஆயின், அவர்கள் வருந் தும் ஏனைய உயிர்களிடத்துக் கொண்டுள்ள அருட்டிறத்தாலே அவ்வப்போது அவ்வுயிர்களைக் காக்கும்படி இச்சித்திகள் பிறர் காண அவர்களிடம் விளையும். அங்ஙனம் விளைந்ததே ஒட்டக் கூத்தர் மாண்ட பிள்ளைகளை மீண்டும் எழுப்பிய சம்பவமாம்.

இவர் தவம்புரிந்து தண்டமிழ்த் தேவியின் தரிசனம் பெற்று வரகவிப் பெயர்வாய்க்கப் பெற்றாரென்பதனாலும், அது காரணமே இவர்க்கு வாணிதாசன் என்ற சிறப்புப் பெயர் வழங் கப்பட்டு வருகிற தென்பதனாலும், சாசுவதி தம்பலங் கொடுக்கக் கவிதையுண்டாகிய கூத்த முதலியார் என்று பிரயோகமிருப்ப துண்மையாதலானும், வரகவியுடையார் சாவவும், வாழவும் பாட வல்ல சாபாநுக்கிரக சாமர்த்தியம் வாய்ந்தாரென்பது தமிழுல கம் அறிந்த செய்தியாதலானும், இத்தெய்வக்கவிஞர் மேற்குறித்த சம்பவத்தை நடாத்திக்காட்டித் தமது மெய்ப்புலமையை விளக் கச்செய்தன ரென்பதில் யாதும் ஐயமேயில்லை. அக்காலத்துத் தமிழ் மக்களுக்குத் தமிழினிடத்தும், தெய்வத்தினிடத்தும், அரசனிடத்தும் பூரண அன்பும், பக்தியும், விசுவாசமும் நிறைந் திருந்தது. அதனைச் செயலளவிலும் காட்டி வந்ததால், உலகம்

அவைகளை ஏற்று நன்கு மதித்துவந்தது. இக்காலத்து அவை கள் அதற்குமாறாக விளங்குவதால், நம்பிக்கைக்குப் பாத்திர மற்று உண்மைச் செய்தியையும் பொய்யாக மதிக்கச் செய்கி றது.

### கூத்தர் வாக்கும்—அதன் திறமும்.

இப்புலவர் பெருமானுக்கு வழங்கிய 'கவிராக்ஷதன்' 'கௌடப்புலவன்' என்னும் பெயர்களாலேயே இவர் அருங் கவிபாடும் பெருந்திறமுடையாரென் றறியப்படும். இதற்குச் சான்றாகப் பண்ணைத் தமிழ்வாணரும் தமிழ்த் தண்டி அலங் கார நூலாசிரியருமாகிய 'அம்பிகாபதி' யென்னும் அருந் தமிழ்ப்புலவர், தமது இனிய நூலில்,

*" சென்று செவியளக்குஞ் செம்மையவாய்ச் சிந்தையுள்ளே
நின்றளவி லின்ப நிறைப்பவற்றுள்—ஒன்று
மலரிவருங் கூந்தலார் மாதர்நோக் கொன்று
மலரிவருங் கூத்தன் றன்வாக்கு" (49)

என்று அழகுபெறத் தமிழ்ப்புனைந்து புகழ்ந்து பாடியிருப்ப தனால் இவரது வாக்கின் திறம் எத்தகையதாய் இருக்கவேண்டு மென்பதை அறிஞர்களே அறிந்துகொள்ள விடுகின்றோம். மேற்குறித்த வெண்பாவில் கூத்தர் பாடல்கள் கற்பவரது நெஞ் சகத்தே பொதிந்து இன்பத்தை நிறைக்கும் இயல்புடைய தெனக் குறிப்பிடுவது பாராட்டற்பாலதாம். இக்கவிதா சார்வ பௌமன் புலமைத்திறனை யுணர்வதற்கு இவரது மூவருலாக் களே போதுமானதாம். பிற்காலத்துப் பெரும்புலவராக விளங்

---

*இந்நூலாசிரியர் அம்பிகாபதி. அவருடைய தந்தையாகிய அம் பிகாபதியேபோலும். இவர் ஒட்டக்கூத்தருக்கு மாணாக்கராகல் வேண் டும், இல்லையாயின், உற்ற நண்பினராகல்வேண்டும். (தமிழ்நாவலர் சரிதை.)

கிப் பொற்பந்தம், யானைக்கன்று, வளநாடு, முதலிய பரிசு பெற்ற அந்தகக்கவி வீரராகவரும், பாகவதம், சந்தரசேகரம் முதலிய நூல்கள் இயற்றிய வாயல் அநதாரியும், தத்துவப் பிரகாசரும், தத்தம் புலமையாற்றலைப் புகழ்ந்து கூறுமுகத் தால்,

" ஒட்டக்கூத் தன்கவியு மோங்கியகம் பன்கவியும்
பட்டப் பகல்விளக்காய்ப் பட்டவே—அட்டதிக்கும்
வீசுங் கவிவீர ராகவனும் வேளாளன்
பேசுங் கவிகேட்ட பின்." (தமிழ்நாவலர் சரிதை 5)

(ஒட்டக்கூத்தன், கம்பன் கவிகள் பட்டப்பகல் விளக்குப் போல ஒளியழுங்கித் தோன்றின. ஒட்டக்கூத்தன் கவிபட் டது, கம்பன் கவிபட்டது என்று தனித்தனி கூட்டிமுடிக்க.) என்றும்,

" கம்பனென்றுங் கும்பனென்றுங் காளியொட்டக் கூத்தனென்றுங்
கும்பமுனி யென்றும் பேர் கொள்வரோ—அம்புவியில்
மன்னு வலர்புடைசூழ் வாயிலன தாரியப்பன்
அந்நாளி லேயிருந்தக் கால்."

என்றும்,

ஒட்டக்கூத்தனென்று பெயர்புனைந்த புலவன் ஒருவன் சில கவிகள் பாடிவந்ததைக்கேட்ட 'தத்துவப் பிரகாசர்' என்ற புலமைப் பெரியார்,

"பறியாரோ நின்வாயிற் பல்லதனைப் பாரோர்
முறியாரோ நின்முதுகின் முள்ளைச்—சிறுகவொரு
மட்டப்பேர் போதாதோ வாக்கிதுவே யானக்கால்
ஒட்டக்கூத் தன்று னுனக்கு"

என்று, அவன் வாக்கை வெறுத்து இழித் (தமிழ் நாவலர் சரிதை 235) தனரென்றும் சுட்டுவதாலும், கூத்தனாது வாக்

கின்திறம் அறியலாகும். அன்றியும், வடமொழியை வளம் பெறக் கற்று அதன் அருஞ்சுவையை இனிதுணர்ந்து, கலா விநோதராயும், வடமொழிவாணர்தம் செவிலித் தாயாகவும் சிறந்த அரசர் பெருந்தகை போஜராஜன், காளிதாஸரது சுலோகத்திற்கு அட்சரத்திற்கு லட்சம் பொன் கொடுத்தது போல, இரண்டாம் ராஜராஜனும் தனது பவனியைச் சிறப்பித்துப் பாடித் தனது பேரவைக்களத்தே அரங்கேற்றிய "இராஜ ராஜ தேவருலா" என்ற அரும்பிரபந்தத்தின் இனிய சுவைக்கு மிக மகிழ்ந்து கண்ணிதோறும் ஆயிரம்பொன் சொரிந்து புலவரைப் பாராட்டினதாக, "...............பாடிய

வெள்ளைக் கலியுலா மாலையொடு மீண்டுமவன்
பிள்ளைத் தமிழ்மாலை பெற்றோனுந்—தெள்ளித்தம்
முன்னு யகரினவன் மூதுலாக் கண்ணிதொறும்
பொன்னு யிரஞ் சொரிந்த பூபதியும்"—

என்ற 'சங்கர சோழனுலா' வால் அறியப்படுவதாலும் புலவர் தம் வாக்கின் திறத்திற்கு இதுவும் சிறந்த சான்றாகக் கொள்ளற் பாலது. விரிக்கிற் பெருகும்.

கூத்தர் விழுப்புலமையும், நுண்ணறிவுங் கொண்டு கேட்போருளத்தையும், செவியையும் தமது வளங் கெழுமிய கவிகளால் இன்பமூட்டுந் திறமுடையாரென்பதற்கு அவர் பாடிய சில தனிநிலைக் கவிகளையும், உலா, பிள்ளைத்தமிழ் முதலியவைகளிற் சிலவற்றையும் உதாரணத்திற்கு இதன்கீழ்க் காட்டுகின்றோம். அவை வருமாறு:—

இந்த விருதுகள் யாருக்கேன்றபோது,

"பத்து என்று எண்ணிக்கை கொண்ட திக்குகளிலுள்ளாரும் பதறியோடி முடியும் படியாகவும், பசிய பொன்மய

மான நட்சத்திரக் கூட்டங்கள் சிந்தும்படியாகவும், இந்த வெளியண்டத்திலே மந்தரம் என்னும் மத்துக்கொண்டு பாற் கடலைக் கடையும் கணையாழியுடைய திருமாலினது அம்சமாகி இந்தப் பூமண்டலத்தைக் கைக்கொண்டு ஆண்டருளும் மானுபரணு! (சோழனே!) திருவரத்துறையில் ஈசனளித்த முத்துப் பந்தரின் கீழ் நின்ற சிங்கக்குட்டி போன்ற ஞான சம் பந்தப் பிள்ளைக்கும், கோபமுடைய மன்மதன் போன்ற முருகப் பிரானுக்கும், பொதிகை மலையிலுள்ள முனிபுங்கவராகிய அகத்தியற்கும், தாமரை மலர் வசிக்கும் பிரமற்கும், சடையை யுடைய* சிவபிரானுக்கும் அல்லாமல், வறுமை மிகுந்த தண் தமிழருக்குக் கொடியும் காளமும் ஏன்?" என்று பொருள் தொனிக்கப் பாடியது:—

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பத்துக்கொண் டனதிக்கும் பதறிப்போய் முடியப்
பைம்பொற்று ரகைசிந்தப் பகிரண்டத் திடையே
மத்துக்கொண் டமுதத்தைக் கடையாழித் திருமால்
வடிவாகிப் புவிகைக்கொண் டருண்மானு பரணு
முத்துப்பந் தரினிற்குங் குருளைக்குஞ் சினவேள்
முருகற்கும் பொதியக்கோ முனிவர்க்கும் பதுமக்
கொத்தற்குஞ் சடிலற்குந் தளருக்கு மல்லாற்
கூழைத்தண் டமிழர்க்கேன் கொடியுங்கா ளமுமே" 119

தமிழ்நாவலர் சரிதை.

உலாப் பாடியபோது *பேராசிரியர் நேமிநாதர் பட் டோலை பிடித்தபோது,

---

* இச் செய்யுளின் தலைப்பிற் கண்ட பேராசிரியர் நேமிநாதர் என்பது ஒருவர் பெயரே போலும். பேராசிரியராகிய நேமிநாதர் என்க. இவர் தொல்காப்பியத்திற்கு உரையெழுதிய பேராசிரியரல் லர். அவர் ஆத்திரையன் பேராசிரியன் எனப்படுவர். அவர் இயற்

"மதுரேசர்களாகிய பாண்டியர்கள், தங்கள் காதலிமார்களும், மக்களும் உடனுக இருக்க, உமை வணங்கி அகளங்கா! கொங்கா! மனதுங்கா! எமது தலைகளைக் காப்பாய், எமது உடல் காப்பாய், எமதுயிர் காப்பாய் என வணங்கும் போரிற் கொல்லுந் தொழிலையுடைய யானைக் கூட்டத்தை யுடையாய், சிவந்த காலையுடைய இள அன்னங்கள் படர்ந்து வருகின்ற தீயோவென்று பயந்து தங்கள் சிறகுகளில் தங்கள் பெடைகள் மறையும்படியாகக் கொண்டு திரும்பும்படியாகத் திரண்ட பாக்கு மரங்களின் பசிய காய்களாகிய மரகதத்தின் மேற்படர்ந்து ஏறி, மணமும் குளிர்ச்சியும் பொருந்திய அக்கமுகின் பாளைகளுக் கிடையில் பவளக் கொடிகள் படர்கிற காவிரி நாட்டை யுடையாய்! இந்த என் மகள் உன்னைக் காணுமல், வேய்ங்குழல் ஓசை கேட்டுப் பொருதிருக்கிருள் என்னும் பொருள்படும்படி பாடியது :—

விருத்தம். (நற்றுயிரங்கல் துறை)

செங்கான்மட வன்னம்படர் தீயாமென வெருவிச்
சிறையிற்பெடை மறையக்கொடு திரியத்திரள் கமுகின்
பைங்காய் மரகதமீது படர்ந்தேறி நறுந்தண்
பாளைக்கிடை பவளக்கொடி படர்காவிரி நாடா
தங்காதலி யருமைந்தரு முடனுக வணங்கித்
தலைகாவெம துடல்காவெம துயிர்காவக ளங்கா
கொங்காமன துங்காவென மதுரேசர் வணங்குங்
கொல்யானைய பங்காவிவள் குழலோசை பொருளே"(29)

தமிழ்நாவலர் சரிதை.

---

பெயர் மகேசுவரர் போலும். இவர் நேமிநாதஞ் செய்தவருமல்லர்; நேமிநாதஞ் செய்தவர் குணவீரபண்டிதர்"

ஒட்டக்கூத்தர் என்னும் தலைப்பின் கீழ்வரும் ஏனைய பாட்டுக்கள்போல இதுவும் ஒட்டக்கூத்தர் பாடியதேயாம்; நேமிநாதர் பட்டோலை பிடிக்க இதனைப் பேராசிரியர் பாடினுர் என்று கொள்வது பொருந்துவதாகக் காணவில்லை.

குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ்—செங்கீரைப்பருவம்.

"பருவ வனங்குயில் பயில்வன பைந்தளிர்
கொந்தோ டுங்கோதப்
பருகு பெருங்களி யளிகுல பந்திகள்
கந்தா ரம்பாடக்
கருவி வியன்கதிர் கனிய மணந்தவர்
சந்தா பந்திர
கழிகுரு கின்கிளை கலக மிடும்படி
பொங்கோ தம்போகப்
புருவ நெடுஞ்சிலை புரள வளைந்தொரு
வெஞ்சா பங்கோவிப்
புதுமல ரம்புகள் பொழிய மணந்தவர்
தந்தே ரன்றேறித்
தெருவின் மதன்புரு விதனை யபங்குர
செங்கோ செங்கீரை
தினகர செம்பிய செயதர பஞ்சவ
செங்கோ செங்கீரை யாடியருளே." (11)

ஏட்டுப்பிரதி.

சிறுதேர்ப்பருவம்.

"பாடிய பொய்கை களிவழிகேட்டுப் பழம்படியே படிந்து
வாடியுண்......றையனை சிறைவிடு மன்னவ னொருதிருமகன்
கோடிய புலவர் விறலியர் பாணர் குலகிரிகளுங் குறைநிறையத்
தேடிநிதியம் குலோத்துங்க சோழன்னுருட்டுக சிறுதேரே"

ஏட்டுப்பிரதி.

விக்கிரம சோழனுலா—தேரிவை.

வருணனையும்—சிருங்காரமும்.

"ஓரணங்கு
கோது விரவாக் கொழும்பாகு கொய்தளிரின்
போது புலராப் பொலங்கொம்பு—மீது

முயலா வழுங்கா முழுத்திங்கள் வானிற்
புயலா வழுங்காப் புதுமி—னியல்கொண்
டெழுதாத வோவ மெழுசிறைய வண்டு
கொழுதாத கற்பகத்தின் கொந்து—முழுது
மிருளாக் கலாபத் திளந்தோகை யென்றுந்
தெருளாக் களியளிக்குந் தேறல்—பொருளால்
வருந்தக் கிடையாத மாணிக்கம் யார்க்கு
மருந்தத் தெவிட்டா வமுதந்—திருந்திய
சோலைப் பசுந்தென்ற றூது வரவந்த
மாலைப் பொழுதின்கண் மண்டபத்து—வேலை
விரிந்த நிலாமுன்றில் வீழ்மகரப் பேய்வாய்
சொரிந்த மணிக்கற்றை தூங்கப்—பரிந்துழையோர்
பூசிய சாந்தங் கமழப் பொறிவண்டு
மூசிய மௌவன் முருகுயிர்ப்பத்—தேசிகப்
பேரிசை யாழ்ப்பாணன் பேதை விறலியொடுஞ்
சேர வினிதிருந்த செவ்விக்கண்—ணேரியுங்
கோழியும் வேங்கையு முப்பணையுங் கோரமும்
பாழி யயிராத பதப்பகடு—மாழியான்
சூடிய வாரமு மாணையுஞ் சோணாடுங்
காடு திரைத்தெறியுங் காவிரியும்—பாடுகெனக்
கூன லியாழெடுத்தான் பாணன் கொதித்தெழுந்து
வேனி லரசனுந்தன் வில்லெடுத்தான்—றேனிமிர்
தந்திரி யாழ்ப்பாணன் றைவந்தான் றைவந்தான்
வெந்திறன் மாரனுந்தன் வில்லினான்—முந்த
நிறை நரம்பு பண்ணி நிலைதெரிந்தான் பாணன்
றிறன்மதனு மம்பு தெரித்தான்—விறலியொடும்
பாண னொருபாணி கோத்தான் பலகோத்தான்
றூணி தொலையச் சுளிந்துவேள்—மாண

விசைத்தன பாண ளியாழ்ப்பாணி பெய்து
விசைத்தன வேனிலான் பாணி".

## குலோத்துங்க சோழனுலா

### குலோத்துங்கன் சிதம்பரத்தில் செய்த திருப்பணி.

தாதைக்குந் தங்கள் தபனற்குந் தோலாத
போதத் திமிரப் பொறைதீர்த்து—மாதரி
லொக்க வபிடேகஞ் செய்யு முரிமைக்கட்
டக்க தலைமைத் தனிதேவி—மிக்க
புவன முழுதுடைய பொற்றொடியுந் தானு
மவனி சுரர்சுருதி யார்ப்ப—நவநிதி தூ
யேத்தற் கருங்கடவு ளெல்லையி லானந்தக்
கூத்தைக் களிகூரக் கும்பிட்டுப்—போத்தின்மேற்
றில்லைத் திருமன்றின் முன்றிற் சிறுதெய்வத்
தொல்லைக் குறும்பு தொகுத்தெடுத்து—மல்லற்
றசும்பு பசும்பொ னடுக்கி—விசும்போ
ரலகை யிகந்த வசலகுல வச்ரப்
பலகை தழும்பப் பதித்து—மலர்கவிகை
காக்குங் கடலேழின் முத்தும் வரகங்கை
தூக்கு மருவியிற் சூழ்போக்கி—நோக்கந்
தொடுக்குஞ் சிரச்சேடன் சூடா மணிகொண்
டெடுக்குந் திருத்தீப மேற்றி—யடுக்கிய
தூய வயிரத்தால் வாவியாய்ச் சூழ்கிடந்த
பாய மரகதத்தாற் பாசடையாய்ப்—போய
பருமுத்தா லாலியாய்ப் பற்பரா கத்தாற்
றருமிக்க செந்தா மரையாய்ப்—பெருவற்க
நீலத்தால் வண்டி னிரையா யுரையிகந்த
கோலத்தாற் கோயிற் பணிகுயிற்றிச்—சூலத்தா
னுடுந் திருப்பெரும்பே ரம்பலமுங் கோபுரமு

மாடம் பரந்தோங்கு மாளிகையுங்—கூடிப்
பொலங்கோட்டு மாமேருப் பூதரமும் போய
வலங்கோட் டிகிரியு மானத்—தலங்கொ
ணிலையேழு கோபுரங்க ணேரே நெருங்கு
மலையேழு மென்ன வகுத்துத்—தலைபின்
மகரங்கொள் கோபுரமும் வான விமானச்
சிகரங்க ளாகித் திகழ—நிகரி
லெரிபொற் படர்பாறை யென்னலா யெங்கும்
விரிபொற் றிருமுற்ற மின்னச்—சொரிபொற்
கடாரம் பனிநீர் கவினிக் கனபொற்
றடாகங்க ளாகித் ததும்ப—விடாதுநின்
றற்பக லாக வனந்த சதகோடி
கற்பக சோதி கதிர்கதுவப்—பொற்பூண்
வரமகளிர் தத்தம் பணிமுறைக்கு வந்து
சுரமகளி ராகத் துவள—வொருதான்
பிறக்கு மிமையப் பெருங்கடவுள் வெற்பை
மறக்கும்படி செல்வ மல்கச்—சிறக்கு
மிருக்காதி யெம்மறையு மெவ்வுலகு மீன்று
டிருக்காமக் கோட்டந் திகழ்வித்—தருக்கன்
புனையா மணியாலும் பொன்னாலு மின்ன
மனையா லொருதேர் வகுத்து—முனைவன்
திருவீதி யீரிரண்டுந் தேவர்கோன் மூதூர்ப்
பெருவீதி நாணப் பெருக்கி—வருநாளிற்."

இராசராச சோழனுலா.

பெருமையும்—சீலமும்.

—சென்னி
திருமகன் சீராச ராசன் கதிரோன்
மருமக னாகி மதித்துந்—திருநெடுமா

லாதிப் பிறவி யனைத்தினு மும்பர்க்குப்
பாதிப் பகைதடிந்த பாதிக்கு—மேதினியிற்
செந்தா மரையா டிருமார்பில் வீற்றிருக்க
வந்தான் மனுவங்கிச மாமேரு—மூர்த்தி
யுடுத்த திகிரி பதினொ ருலகு
மடுத்த வரராச ராச—னடற்றிகிரிக்
கண்ணன் கனகள்வன் கண்டன் கதிரோனுந்
தண்ணென் கவிகைச் சனநாத—னென்னுந்
தவன குலதிலகன் றன்பெருந் தேவி
புவன முழுதுடைய பூவை—யவனியி
லெண்பெரு மாதிரத்து மேரு முடனுணைப்
பெண்பெருமா னந்தப் புரப்பெருமாண்—மண்பரவ
வோகை விளக்கு முபய குலரத்னத்
தோகை யுடனே துயிலெழுந்—தாகிய
மூர்த்தத் தனந்த முரசார்ப்பக் காவேரித்
தீர்த்தத் தபிடேகஞ் செய்தருளிப் போர்த்திகிரி
மேலைக் குரவர்க்கும் விண்ணவர்க்கும் வேதியர்க்குங்
காலைக் கடவ கடன்கழித்து—மூலப்
பெரும்பே ரணிதம் பிதாமகன் காலை
வரும்பே ரணியென்ன வாய்ப்ப—விரம்பப்
பவளச் சடையோன் பணித்த படியே
தவளத்ரி புண்டரஞ் சாத்திக்—குவளைப்பூங்
கார்க்கோல மாடியிற் காண்பான் மகன்காமன்
போர்க் கோலங் காண்பானே போற்கண்டு—பார்த்திபர்தங்
தொல்லைத் திருமரபுக் கெல்லாந் தொழுகுலமாந்
தில்லைத் திருநடனஞ் சிந்தித்து—வல்லவர்
சூழச் சுருதி யனைத்துந் தொடுத்தெடுப்ப
வேழப் பெருமானை மேல்கொண்டு"

### உத்தரகாண்டம்—அசுவமேத பருவம்.

"கனக்கரு நிறத்தி னுனென் கண்வழி யதனுல் வந்தென்
மனத்திடைப் புகுந்தான் வந்த வழியவன் போகிற் பின்னை
எனக்கவன் பிடிகொ டானென் றிமைக்கத வடைத்தா ளேழை
நினைத்தது முடித்தே னென்று நெடுநிலை மாடம் புக்காள்"

இச்செய்யுளில், "கண்வழியதனுல் வந்தேன் மனத்திடைப் புகுந்தான்" "இமைக் கதவடைத்தான், நினைத்தது முடித்தேனென்று நெடுநிலை மாடம் புக்காள்" என்ற தொடர்களில் அமைந்த திரண்ட கருத்துக்கள் சுவைத்தற் குரியன.

### இராவணன் அரம்பை அழகை வியத்தல்.

"விண்ணோர் உலகெல்லாம் வெற்றவெறும் பாழாக
மண்ணோரில் என்னை வழியடிமை கொள்ளவந்த
பெண்ணோ நான்செய்த பெருந்தவத்தின் பேறோஎன்
கண்ணோ களகண்ணோ காமத்தின் தீங்கனியோ"

### விதவையர் துன்பம்.

*"மக்க ளிழந்த இடும்பையினும் மனையா ளிழந்த இடும்பையினும்
மிக்க இடும்பை ஓவாத விதவை யிடும்பை எனவிளம்பத்
தக்க ததனுல் என்கழுத்தில் தாலி நீதந் தருளென்று [லும்"
தொக்க மணிப்பூண் மார்பனைத் தொழுது பின்னும் இவைசொல்

திக்குவிசயப் படலம். (138)

### கூத்தரும் அவர்காலத்துச் சோழமன்னர்களும்.

நம்புலவர் பெருமானுகிய கூத்தர் காலத்தில் சோழ மண்டலத்தில் அரசாண்ட சோழமன்னர்கள் விக்கிரமசோழன், இரண்டாம் குலோத்துங்கசோழன், இரண்டாம் இராசராச சோழன் என்ற மூவருமே யாவர். இது,

---

*இச்செய்யுள் சிலப்பதிகாரத்துக்கு அடியார்க்கு நல்லார் எழுதிய உரையில் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

'கூடிய சீர்தந்த வென்றெடுத்த கூத்தனுலாச்
சூடிய விக்கிரம சோழனும்—பாடிய
வெள்ளைக் கலியுலா மாலையொடு மீண்டுமவன்
பிள்ளைத் தமிழ்மாலை பெற்றோனுந்—தெள்ளித்தன்
முன்னோ யகரினவன் மூதுலாக் கண்ணிதொறும்
பொன்னாயிரஞ்சொரிந்த பூபதியும்—என்னுமிவர்,

என்னும் சங்கர சோழன் உலாவடிகளால் நன்கறியக் கிடக்கின்றது. இம்மூவரது வரலாற்றை யாம் ஆராய்ந்து கண்டவளவில் அடியில் வரைவாம்.

## விக்கிரம சோழன் கி. பி. 1118—1136.

இவ்வரசன் கி. பி. 1070 முதல் 1118 வரை நம் சோழ மண்டலத்தில் சக்கரவர்த்தியாக வீற்றிருந்து தனக்கு மிக்காரும் ஒப்பாருமின்றிச் செங்கோல் செலுத்தியவனும், சுங்கந் தவிர்த்து மக்களது இன்னலைப் போக்கியவனுமாகிய முதல் குலோத்துங்க சோழனது மகன் ஆவன். நமது விக்கிரம சோழன் அரசிளங்குமாரனாக விருக்கும் நாளில் தன் தந்தையின் முன்னோரும், தனது தமையனும் ஆட்சிபுரிந்து வந்த வேங்கி நாட்டிற்கு அரசப் பிரதிநிதியாக கி. பி. 1093 ஆண்டிற் சென்று அதனை ஆண்டுவந்தனன். வேங்கிநாடு என்பது கிருஷ்ணை கோதாவிரி என்ற இருபேராறுகளுக் கிடையில் கீழைக்கடலைச் சார்ந்திருந்த ஒரு நாடாகும். இந்நாட்டில் விக்கிரமசோழன் அரசப் பிரதிநிதியாயிருந்து வாழ்ந்து வரும் நாளில் கி. பி. 1096 ஆண்டில் தென்கலிங்க நாட்டிற்குப் படையெடுத்துச் செல்லல் இவனுக்கு இன்றியமையாததாயிற்று. அங்ஙனம் போருக்குச் சென்றவன், அந்நாட்டு மன்னனாகிய தெலுங்க வீமனைப் போரிற் புறங்கண்டு வெற்றித்திரு

வுடன் திரும்பினான். இவன் இங்ஙனம் கலிங்கத்தை வென்ற செய்தியைப் புலவர் தலைவராகிய ஒட்டக்கூத்தரும்,

"ஏனைக்கலிங்கங்கள் ஏழினையும் போய்வென்ற
தானைத்தியாக சமுத்திரமே"

என்று விக்கிரமசோழன் மீது தாம் பாடியுள்ள உலாவிலும் பாராட்டிக் கூறியுள்ளார். அன்றியும், இதனை விக்கிரமசோழனது மெய்க்கீர்த்தி,

'தெலுங்கவீமன் விலங்கன் மிசை யேறவும்
கலிங்க பூமியைக் கனலெரி பருகவும்
ஐம்படைப் பருவத்து வெம்படை தாங்கி
வேங்கை மண்டலத் தாங்கினி திருந்து
வடதிசை யடிப்படுத் தருளி'

என்று தெளிவாக விளக்குதல் காண்க.

வேங்கி நாட்டில் அரசு புரிந்து கொண்டிருந்த நம் விக்கிரம சோழனை கி. பி. 1108 - ஆம் ஆண்டில் சோழ மண்டலத்திற்குத் திரும்ப அழைத்து முதற் குலோத்துங்க சோழன் அவனுக்கு இளவரசுப் பட்டங் கட்டினான். அந்நாளில் வேங்கி மண்டலத்தில் தனக்குத் திறை செலுத்துங் குறுநில மன்னனாகவிருந்து ஆண்டு வருமாறு வெலநாண்டு சோழன் ஒருவனுக்குக் குலோத்துங்க சோழன் உத்திரவிட்டு அதற்குத் தக்க ஏற்பாடும் புரிந்திருந்தான். சோழ மண்டலத்தில் இளவரசனாயிருந்த விக்கிரம சோழனும், தன் தந்தைபால் அரசியல் நுட்பங்களைக் கற்று வல்லனாயினான். பின்னர், கி. பி. 1120 - ஆம் ஆண்டில் முதற் குலோத்துங்க சோழன் விண்ணுலகெய்தவே, விக்கிரம சோழனும், சோழ மண்டலத்தின் தலை நகராகிய

*கங்கைகொண்ட சோழபுரத்தில் சக்கரவர்த்தியாக முடி சூடிக்கொண்டனன். முடி சூட்டு மங்கல நாளிலே விக்கிரமனும் வீரருட் சிறந்த வீரனாகிய தன் தந்தை குலோத்துங்க சோழனைப் போலத் திரிபுவனச் சக்கரவர்த்திகள் என்ற பட்டமும் புனைந்து கொண்டான். சோழ மன்னர்கள் ஒருவர் பின் ஒருவராகப் புனைந்துகொண்டு வந்த இராஜகேசரி, பரகேசரி என்ற பட்டங்களுள் இம்மன்னன் பரகேசரி என்ற பட்டம் புனைந்தவன்.

நம் விக்கிரம சோழன் சோழ மண்டலத்தில் சக்கரவர்த்தியாக வீற்றிருந்து அரசாண்டது 17 ஆண்டுகளாகும். சோழ மண்டலத்தைச் சிறப்புடனும் பெருமையுடனும் ஆட்சிபுரிந்த சோழ மன்னர்களுள் விக்கிரமனும் ஒருவன். இவனது ஆட்சியின் ஆறும் ஆண்டில் வடக்கேயுள்ள திருவோத்தூர் முதல் தெற்கேயுள்ள தஞ்சாவூர்வரையில் மழை மிகுதியினால் உண்டாகிய பெருவெள்ளத்தினால் பஞ்சம் உண்டாயிற்று என்பது கோவிலடி, உடையார்கோயில், திருவதிகை திருவோத்தூர் முதலிய இடங்களிலுள்ள கல்வெட்டுக்களால் புலப்படுகின்றது. அந்நாளில், அரசனாகிய விக்கிரம சோழன் குடிகளது துன்பத்தைப் போக்கிப் பல நன்மைகள் புரிந்தான்.

விக்கிரம சோழனுக்குக் கப்பஞ் செலுத்திவந்த வேங்கி நாட்டின் குறுநில மன்னனாகிய வெலநாண்டு சோழன், சோழர்களுக்குப் பெரும் பகைஞனாகிய மேலைச் சளுக்கிய ஆறும் விக்கிரமாதித்தனோடு சேர்ந்துகொண்டு முரண்படவே, நம் விக்கிரமனும் அங்குப் படையெடுத்துச் சென்று அதனை

* இது தென்னிந்தியா புகைரதப் பாதை ஆடுதுறையிலிருந்து 16 மைலிலுள்ளது.

வென்று கைப்பற்றிக் கொண்டான். இது கி. பி. 1125-க்கு முன்னர் நிகழ்ந்ததாகும்.

சோழ மன்னர்களுக்குக் குலதெய்வம் தில்லையம்பதியில் எழுந்தருளியுள்ள பொன்னம்பலவாணர் என்பது கல்வெட்டுக்களாலும் பிறவாற்றானும் அறிந்த உண்மையாகும். அதுபற்றியே ஆதித்தன் I, பராந்தகன் I முதலான சோழர்கள் தில்லையம்பலத்திற்குப் பொன்வேய்ந்து சிறப்பித்துள்ளனர். விக்கிரம சோழனும் தன் ஆட்சியின் பத்தாம் ஆண்டில் புறநாட்டு மன்னர்கள் செலுத்திய திறைப்பொருளைக் கொண்டு தன்முன்னோர்களைப் போலத் தில்லையம்பலத்திற்கும் திருமாளிகைக்கும், பலிபீடத்திற்கும் பொன்வேய்ந்து சிறப்பித்தனன்; அங்குத் தன்பெயரால் திருவீதியும் மாளிகையும் கட்டுவித்தான்; தான் பிறந்த நாளாகிய புரட்டாசித் திங்கள் உத்திரட்டாதி நாளில் அம்பலம் நிறைந்த அற்புதக் கூத்தருக்கு ஆண்டுதோறும் பெருவிழா நிகழ்த்த ஏற்பாடு புரிந்தான். இதனால் இவ்வேந்தனது அளப்பரிய சிவபத்தி நன்கு விளங்குகின்றது * இச்செய்திகளை எல்லாம் இவனது மெய்க்

* தஞ்சாவூர் ஜில்லா மாயூரந் தாலூகாவிலுள்ள குற்றாலத்திற் கருகிலுள்ள திருமங்கலம் என்னும் ஊரில் ஒரு சிவாலயம் விக்கிரமனால் எடுப்பிக்கப் பெற்றுளது என்பது அவ்வூர்க் கல்வெட்டால் அறியப்படுகின்றது. குற்றாலத்திலுள்ள ஒரு சிவாலயத்திற்கு விக்கிரம சோழேச்சுரம் என்றும், அதன் அண்மையிலுள்ள ஓர் ஆற்றிற்கு விக்கிரமன் ஆறு என்றும் பெயர்கள் உள. குற்றாலத்திற்கே விக்கிரமன் தற்றலம் என்ற பெயர் முன்னாளில் வழங்கியுள்ளது. ஒருகால் இவ்வூர் மேற்கூறிய சிவாலயங்களுக்கு நிபந்தம் விட்ட ஊராகவும் இருத்தல் கூடும். திருமாகாளம் கோயில் முதற்பிரகாரம் நம் விக்கிரமனால் கட்டுவிக்கப் பெற்றது என்பது அவ்வூர்க் கல்வெட்

கீர்த்திகளில் பரக்கக் காணலாம். இவனது அவைக்களப் புலவர் தலைவராக வீற்றிருந்த புலவர் பெருமானாகிய ஒட்டக்கூத்தருக்கு இவன் கொடுத்துள்ள விருதுகளாலும் வரிசைகளாலும் இவ்வேந்தன் புலவர் பெருமக்களிடத்து வைத்திருந்த பேரன்பு இத்தன்மையது என்பது ஒருவாறு விளங்கும். கூத்தரும், இவ்வேந்தன் மீது 'உலா' ஒன்று பாடியிருத்தலும், இக்காரணம் பற்றியே போலும். அவ்வுலா, 'விக்கிரம சோழ தேவருலா' எனப்படும்.

இவன், திருவரங்கத்தில் தன் பெயரால் இரண்டு திருவீதிகள் கட்டுவித்திருப்பது இவனது வைணவமத அபிமானத்தை நன்கு விளக்குவதோடு இவன் மதக் கோட்பாட்டில் சமரசக் கொள்கையுடையவனா யிருந்தனன் என்பதையும் இனிது புலப்படுத்துகின்றது. இவன் தன் பெயரால் எடுப்பித்த இருபெரு வீதிகளும் 'திருவிக்கிரமன் திருவீதி' எனவும், 'அளங்கன் திருவீதி' எனவும் கூறப்படுகின்றன.* கோயிலொழுகு என்ற வைணவ நூல் இவனைப் பெரிதும் பாராட்டிப் புகழ்கின்றது.

இவனுக்கு அகளங்கன், தியாக சமுத்திரம் என்ற வேறு பெயர்களும் உண்டு. இப் பெயர்கள் கலிங்கத்துப் பரணியி

---

டால் புலப்படுகிறது. சங்காரம நல்லூர் (உடுமலைப் பேட்டைக்கருகில் உளது) னெப்படும் கொழுமங் கோயிலிலுள்ள கல்வெட்டால் விக்கிரமன் காலத்தில் அங்குள்ள கோயிலில் நாள்தோறும் யாழ் வாசிக்கும் வழக்கம் உண்டென்று தெரிகிறது. விக்கிரம சோழனுக்குக் குருவாக இருந்தவர் சுவாமிதேவர் என்ற ஸ்ரீகண்ட சிவர் என்று சில ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

* தஞ்சைப் பெரிய கோயில் கர்ப்பக்கிருகத்திலுள்ள தெற்குத் திருவாசல் 'திரு விக்கிரமன் திருவாசல்' என்ற பெயருடையது.

னும் விக்கிரம சோழனுலாவிலும் பயின்று வருதலைக் காண லாம். இவ்வேந்தனது மனைவிமார்கள் இதுகாறும் ஆராய்ந்து கண்ட வரையில் நால்வர் என்பது கல்வெட்டுக்களால் வெளியா கின்றது. அன்னோர் முக்கோக்கிழானடிகள், திரிபுவன முழு துடையாள், தரணி முழுதுடையாள், நேரியன் மாதேவியார் என்போர். இவர்களுள் முதலவளாகிய முக்கோக்கிழானடி கள் என்பாள் இவ்வேந்தனது ஆட்சியில் ஒன்பது ஆண்டுகள் வரையில் பட்டத்தரசியாயிருந்து பின்னர் இறந்தனள். பிறகு இரண்டாம் மனைவியாகிய திருபுவன முழுதுடையாள் பட்டத் தரசியாக விளங்கினாள். இவளைத் 'தெரிவையர் திலதம்' என வும், 'தியாகபதாகை' எனவும், 'புனிதகுண வனிதை' எனவும், விக்கிரம சோழனது மெய்க்கீர்த்தி புகழ்ந்து கூறுகின் றது. அம்மெய்க் கீர்த்தியே இவனது மூன்றாம் மனைவியாகிய தரணி முழுதுடையாளைப் 'பூதலத்தருந்துதி' எனவும் 'அர ணியற் கற்பிற்றரணிமுழுதுடையாள்' எனவும் கூறிப் பாராட் டுதல் காண்க.

நம் விக்கிரமனுக்கு எத்தனைப் புதல்வர் இருந்தனர் என்பது இதுபோது அறியக்கூடவில்லை. ஆயினும் இவ்வரசனுக்குப் பின்னர் முடிசூடிக்கொண்ட இரண்டாம் குலோத்துங்க சோழன் இவனது தவப்புதல்வன் ஆவன். இவ்வரசிளங் குமரனும் விக்கிரம சோழனது மனைவியருள் யாருடைய புதல்வன் என்பது தற்காலத்துப் புலப்படவில்லை. 'தந்தை மகற்காற்று நன்றி யவையத்து—முந்தியிருப்பச் செயல்'. என்னும் பொய்யிற் புலவர் பொருளுரைக்கேற்ப, நம் விக்கிரம னும் தன் தவப்புதல்வனாகிய குலோத்துங்கனைக் கவிச் சக்கர வர்த்தியாகிய ஒட்டக்கூத்தர்பால் ஒப்பித்து கல்வி பயின்று வரச் செய்தான். அப்புதல்வனும் புலவர் தலைவர் பால் கற்று வல்லனாகிக் கவிமழை பொழியும் காளமேகமாய்த் 'தந்தை

யினுஞ் சதமடங்கு தனயன்' எனும் ஆன்றோர் வாக்கை மெய்ப்பித்து ஈடும் எடுப்பும் அற்ற அரசிளஞ் சிங்கமாய் விளங்கினன். இஃது இங்ஙனமாக, நம் விக்கிரமனும் தனக்குக் கடவுள் விதித்த வாணாள் முடிவுறவே, கி. பி. 1136 ஆண்டில் வானுல கெய்தினன்.

விக்கிரமசோழ மெய்க் கீர்த்தி I.

"பூமாலை மிடைந்து பொன்மாலை திகழப்
பாமாலை மலிந்த பருமணித் திரள் புயத் •
திருநில மடந்தையொடு சயமக ளிருப்பக்
கனவரை மார்வந் தனதெனப் பெற்றுத்
திருமக ளொருதனி யிருப்பக் கலைமகள்
சொற்றிறம் புணர்ந்த கற்பின ளாகி
விருப்பொடு நாவகத் திருப்பத் திசைதொறுந்
திகிரியொடு செங்கோல் நடப்ப வகில
புவனமுங் கவிப்பதோர் புதுமதி போல
வெண்குடை மீமிசை நிழற்றக் கருங்கலி
யொளித்துவன் பிலத்திடைக் கிடப்பக் குளத்திடைத்
தெலுங்க வீமன் விலங்கன்மிசை யேறவுங்
கலிங்க பூமியைக் கனலெறி பருகவும்
ஐம்படைப் பருவத்து வெம்படை தாங்கியும்
வேங்கை மண்டலத் தாங்கினி திருந்து
வடதிசை யடிப்படுத் தருளித் தென்றிசைத்
தருமமுந் தவமுந் தானமுந் தழைப்ப
வேதமும் மெய்மையும் மாதியுகம் போலத்
தலைத்தலை சிறப்ப வந்தருளி வெலற்கரும்
போர்ப்புலி யாணை பார்த்திவர் சூட
நிறைமணி மகுட முறைமையிற் சூடி
மன்னுயிர்க் கெல்லா மின்னுயிர்த் தாய்போற்

றண்ணளி *பரப்பித் தனிதனி பார்த்து
மண்முழுதுங் களிப்ப மனுநெறி வளர்த்துத்தன்
கோயிற் கொற்ற வாயிற் புறத்து
மணிநா வொடுங்க முரசுகண் முழங்க
விசயமும் புகழும் மேன்மே லோங்க
வாழி வாழியிம் மாநிலங் காக்கத்
திருமணிப் பொற்றோட் டெழுபத் தாண்டு
வருமுறை முன்னே மன்னவர் சுமந்து
திறைநிறைத்துச் சொரிந்த செம்பொற் குவையாற்
றன்குல நாயகன் தாண்டவம் பயிலுஞ்
செம்பொனம் பலஞ்சூழ் திருமா ளிகையும்
கோபுர வாசல் கூடசா லைகளும்
உலகுவலங் கொண்டொளி விளங்கு நேமிக்
குலவரை யுதய குன்றமொடு நின்றெனப்
பசும்பொன் வேய்ந்த பலிவளர் பீடமும்
விசும்பொளி தழைப்ப விளங்குபொன் வேய்ந்து
இருநிலந் தழைப்ப விமையவர் களிப்பப்
பெரிய திருநாட் பெரும்பெயர் விழாவெனும்
உயர்புரட் டாதி யுத்திரட் டாதியில்
அம்பல நிறைந்த வற்புதக் கூத்தர்
இம்பர் வாழ வெழுந்தருளு வதற்குத்
திருத்தேர்க் கோயில் செம்பொன் வேய்ந்து
பருஉத்திரண் முத்தின் பயில்வடம் பரப்பி
நிறைமணி மாளிகை நெடுந்திரு வீதிதன்
திருவளர் பெயராற் செய்து சமைத் தருளிப்
பைம்பொற் குழித்த பரிகல முதலாச்
செம்பொற் கற்பகத் தொடுபரிச் சின்னமும்
அளவில் லாதன வொளிபெற வமைத்துப்

* தன்னொளி.

பத்தா மாண்டிற் சித்திரைத் திங்கள்
அத்தம் பெற்ற வாதிவா ரத்துத்
திருவளர் மதியின் திரயோதசி பக்கத்து
இன்ன பலவு மினிது சமைத் தருளி
ஒருகுடை நிழற் கீழ்த் தலமுழுதுங் களிப்பச்
செழியர் வெஞ்சுரம்புக சேரலர் கடல்புக
அழிதருஞ் சிங்கள ரஞ்சிநெஞ் சலமாக்
கங்கர் திறையிடக் கன்னடர் வெருவிடக்
கொங்க ரொதுங்கக் கொங்கணர் சாயமற்
றெத்திசை மன்னருந் தத்தமக் கரணெனத்
திருமலர்ச் சேவடி யுரிமையி னிறைஞ்ச
அங்கவன் மகிழுங் கங்கையொப் பாகிய
தெரிவையர் திலதந் தியாக பதாகை
புரிகுழன் மடப்பிடி புனித வனிதை
திரிபுவன முழு துடையா ளெனவுட னிருப்ப
ஊழி யங்கெடு மாலா கத்துப்
பிரியா தென்னுந் திருமக ளிருந்தென
மாதர் மடமயில் பூதலத் தருந்ததி
அரணியல் கற்பிற் றரணிமுழு துடையா
ளிவன்திரு மார்வத் தருளொடு மிருப்பச்
செம்பொன் வீர சிம்மா சனத்துத்
திரிபு வனமுழு துடையா ளோடும்
வீற்றிருந்தருளிய கோப்பர கேசரி வர்மரான
திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீவிக்கிரம சோழ தேவர்க்கு."

## விக்கிரமசோழன் மெய்க்கீர்த்தி II.

"பூமாது புணரப் புவிமாது வளர
நாமாது விளங்கச் சயமாது விரும்பத்
தன்னிரு பதமலர் மன்னவர் சூட

*மன்னிய வுரிமையான் மணிமுடி சூடிச்*
*செங்கோல் சென்று திசைதொறும் வளர்ப்ப*
*வெங்கலி நீங்கி மெய்யறந் தழைப்பக்*
*கலிங்க மிரியக் கடமலை நடாத்தி*
*வலங்கொ ளாழி வரையாழி திரிய*
*இருசுட ரளவு மொருகுடை நிழற்ற*
*விசயாபி டேகம் பண்ணி வீரசிம்மா சனத்து*
*முக்கோக்கிழா னடிகளோடும் வீற்றிருந்தருளிய*
*கோப்பர கேசரிவன் மரான திரிபுவன சக்கரவர்த்திகள்*
ஸ்ரீ விக்கிரமசோழ சோழ தேவர்க்கு"

## இரண்டாம் குலோத்துங்கசோழன் கி. பி. 1136—1146.

*இரண்டாம் குலோத்துங்க சோழன் என்பான் விக்கிரம சோழனது புதல்வன் என்பது முன்னரே கூறப்பட்டது. இவனது ஆட்சிக்காலம் கி. பி. 1136-க்கும் 1146-க்கும் இடைப்பட்டதாகும். இவனது ஆளுகையில் குடிகள் எல்லாரும் வறுமையும் பிணியு மின்றி இனிது வாழ்ந்து வந்தனர் என்பது இவனது மெய்க்கீர்த்தியால் நன்கு விளங்குகின்றது. அன்றியும் இவனது பெயர்களுள் ஒன்றாகிய 'கலிகடிந்த சோழன்' என்பது இச்செய்தியைக் குறித்தல் காண்க. இவன் தன் தந்தையாகிய விக்கிரம சோழனும் பாட்டனாகிய முதற் குலோத்துங்க சோழனும் பாதுகாக்கப்பட்டு வந்த சோழ மண்டலம் முழுவதையும் அதன் சீரும் சிறப்பும் ஒரு சிறிதும் குன்றாதவாறு அமைதியுடன் ஆட்சி புரிந்து வந்தான். எனவே இவனது ஆட்சிக்காலத்தில் போர் நிகழ்ச்சிகளே சிறிதும் இல்லை என்றே கூறலாம். இவன் தன் ஆட்சிக்காலத்தில் தனது அரும்பெறல் ஆசிரியரும் தன் அவைக்களப் புலவருமாகிய ஒட்டக் கூத்தரையே உற்ற உசாத்துணையாகக் கொண்டு*

ஒழுகி வந்தனன். ஆகவே, பெரும் புலவர் ஒருவரது துணை கொண்டு இவன் நடாத்திவந்த அரசாங்கத்தில் மக்கள் எல்லோரும் துன்பமின்றி வாழ்ந்து வந்தனராதல் வேண்டும். ஆயினும், எத்துணைப் பெரியோரும் ஊழ்வயத்தினராகிச் சில சமயங்களில் சிறிது பிழைபட நடத்தலும் இயல்பே யன்றோ? ஒட்டக்கூத்தரால் சிவபெருமானது அளப்பரிய பெருமையினையும் சிறப்பினையும் நன்குணர்ந்த நம் குலோத்துங்க சோழன் அப்பெருமானிடத்துப் பெரிதும் ஈடுபாடுடையவனாய்த் தன் முன்னோர்களைப் போலத் தில்லையம்பலத்திற்குப் பொன் 'வேய்ந்து சிறப்பிக்க எண்ணித் தில்லையம்பதிக்குச் சென்று மன்றுக்கிடங் காணவேண்டி ஆண்டுள்ள திருச்சித்திரக் கூடத்தில் அரவணைமிசை அறிதுயிலமர்ந்த செங்கண் மாலை அலைகடலில் கிடத்துமாறு உத்திரவிட்டனன். இச்செய்தி,

"தில்லைத் திருமன்றின் முன்றிற் சிறுதெய்வத்
தொல்லைக் குறும்புதொகுத் தெடுத்து—மல்லல்"

என்ற குலோத்துங்க சோழனுலா வடிகளாலும்,

——......"புறம்பிற் குறும்பனைத்து
முன்னர்க் கடலகழின் மூழ்குவித்த—சென்னி"

என்ற இராசராசனுலா வடிகளாலும்,

"முன்றிற் கிடந்த கருங்கடல் போய்
முன்னைக் கடல் புகப்பின்னைத் தில்லை
மன்றுக்கிடங்கண்ட கொண்டல் பெற்ற
மாகதமேருவை வாழ்த்தினவே"

என்ற தக்கயாகப் பரணியின் தாழிசையாலும்,

"சென்னி குலோத்துங்கன் சித்ரகூடச் செங்கண்மால்
தன்னை யலையெறிநாள் தான்"

என்ற பழையபாடல் ஒன்றாலும் புலப்படுதல் காண்க வைணவ நூல்களாகிய இராநுஜர் திவ்யசரிதை, குருபரம்பரை என்பவை நம் குலோத்துங்க சோழனது செய்கையை எடுத்துரைத்து இவனைக் கிருமிகண்ட சோழனென்று வழங்குவதாலும் இவ்வுண்மை விளங்குவதோடு அன்னோர் இவ்வேந்தன்பாற் கொண்டிருந்த பெருவெறுப்பும் நன்கு புலனாம்.

இனி, மன்றுக் கிடங்கண்ட மன்னனாகிய குலோத்துங்கன் தில்லையம்பதியில் செய்துள்ள திருப்பணிகள் அளவற்றன என்பர். இவன் * சிற்றம்பலத்தையும் பேரம்பலத்தையும் பொன்வேய்ந்து அவற்றைச் சுற்றிலும் திருச்சுற்று மாளிகையும், *மண்டபம் தோரணவாயில் முதலியவற்றையும் அமைத்து கோயின் முன்னர் எழுநிலை கோபுரமும் எடுப்பித்தான். அன்றியும், சிவகாமக்கோட்டத் திருப்பணியும் சிவகங்கைத் திருப்பணியும் ஆற்றியவன் இவனே யாவான். இவன் தில்லையம்பலத்தில் தன் பெயரால் 'குலோத்துங்கன் திருவீதி' என்ற இருவீதிகள் அமைத்த செய்தியும் இங்குக் குறிப்பிடத் தக்கது. இவன் தில்லைமாநகரில் இயற்றிய திருப்பணிகளை எல்லாம் இவன்மீது கவிச்சக்கரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தர் தாம் பாடியுள்ள உலாவில் 'ஏத்தற் கருங்கடவுள்' என்று தொடங்கும் 75-ஆம் அடிமுதல் 116-ஆம் அடிமுடிய தெளிவாகவும் விரிவாகவும் கூறியுள்ளனர். அப்புலவர் பெருமான் இவ்வேந்தனது மகனாகிய இரண்டாம் இராசராச சோழன்மீது இயற்றியுள்ள உலாவிலும் இவனது அரும்பெரும் பணிகள் கூறப்பட்டுள்ளன. (வரிகள் 59—66 முடிய) அன்றியும் நம் புலவர் இயற்றியுள்ள தக்கயாகப் பரணியும்,

* இம்மண்டபம் நடராசர் சந்திக்கு மேற்கிலும், கோவிந்தராசர் சந்திக்குக் கிழக்கிலும் உள்ளது. இச்சோழன் பெயர் அம்மண்டபத்தில் ஒரு கற்றூணில் வெட்டப்பட்டிருப்பது இன்றுங் காணலாம்.

" கூடமெடுத்த குளத்தொடு கோபுர
மாடமெடுத்த பிரான்மகன் வாழியே "

" கோயின்முன் னேழ்நிலைக் கொண்டதோர் கோபுர
வாயில்வகுத்த பிரான்மகன் வாழியே "

" எண்டரு திக்கினிற் றில்லையினோர் பெறு
மண்டபம் வைத்த பிரான்மகன் வாழியே "

என்று* குலோத்துங்கசோழன் தில்லையம்பதியில் இயற்றிய திருப்பணிகளை விதந்து கூறுதல் காண்க.

இனித் தமிழ் நாட்டிலுள்ள பல சிவாலயங்கட்கு இவ் வேந்தன் திருப்பணி செய்திருத்தலோடு அவற்றிற்கு நிபந்தங் களும் விட்டிருக்கின்றனன் என்பது பல கல்வெட்டுக்களால் அறியக்கிடக்கின்றது. செங்கற்பட்டு ஜில்லா செய்யாறு தாலுகாவிலுள்ள பிரமதேசம் உருத்திர கோடீசுவர சிவாலயத் திற்குத் தன் பெயரால் 'அநபாய நல்லூர்' என்ற ஒரு கிரா மத்தை நிபந்தமாக விட்டனனென்றும், அஃது ஐந்நூறு கல நெல் வருவாயுடையது என்றும் ஒரு கல் வெட்டு உணர்த்து கின்றது. (1915-ஆம் ஆண்டு 271-ஆம் நம்பர் கல்வெட்டு) திருக்கண்ணபுரத்திற் கண்மையிலுள்ள இராம நதீச்சுரமுடைய மகாதேவர்க்கு நித்தியபூசை இன்மையின் அதை நன்கு புரிந்து வருமாறு நிபந்தம் விட்டு அவ்வூர்க்கு நம் குலோத்துங்கன் 'சிவபாத சேகர மங்கலம்' என்ற பெயரும் வழங்கினன் என்று 1922 - ஆம் ஆண்டு 533 - ஆம் சாசனம் கூறுகின் றது. இத்தகைய நிகழ்ச்சிகளால் குலோத்துங்கனது சிவ பத்தியின் மாண்பு ஒருவாறு இனிது விளங்கும்.

புலவர் பெருமக்களைப் புரக்கும், தண்டமிழ்ப் புலமை யொண்டிறன் மன்னனாகிய நம் குலோத்துங்கன் மீது இவனது ஆசிரியராகிய ஒட்டக்கூத்தர் உலாவும் பிள்ளைத் தமிழும்

பாடிப் பாராட்டி யிருத்தல் ஈண்டு அறிந்து மகிழத் தக்கது. நம் புலவர் தலைவர் இவ்வேந்தனுக்கு மணம் புரிவிக்க மதுரைமா நகரஞ் சென்று பெண் பேசி வந்த செய்திகள் எல்லாம் மற்றோர் பகுதியிற் பாரக்கக் கூறப்பட்டிருக்கிறது. தண்டமிழ்ப் புலமையிற் சிறந்து விளங்கிய குலோத்துங்கன் தன் ஆசிரியரிடத்துக்கொண்டிருந்த பெரு மதிப்பு, "பாடுங்கவிப் பெருமானொட்ட கூத்தன் பதாம்புயத்தைச் சூடுங் குலோத்துங்க சோழனென்றே யெனைச் சொல்லுவரே" என்ற பாடற் பகுதியால் நன்கு விளக்கமுறுதல் காண்க. இவனுக்குரிய வேறு பெயர்கள் அநபாயன், கலிகடிந்த சோழன் என்பன. இவனது மனைவிமார்கள் 'செம்பியன் கிழானடிகள்,' 'உலக முழுதுடையாள்' என்போர். இவ்விருவருள் செம்பியன் கிழானடிகளே பட்டத்தரசி என்பர். இவ்வேந்தனுக்கு இராசராசன் என்ற ஒரு புதல்வன் இருந்தனன். இவ்வரசிளங் குமரனே குலோத்துங்கனுக்குப் பின்னர் பட்டம் எய்தியவன். நம் குலோத்துங்கனும் கி. பி. 1146-ஆம் ஆண்டில் சிவபெருமான் திருவடி நீழல் அடைந்தான்.

### இரண்டாவது குலோத்துங்கன் மெய்க் கீர்த்தி I.

"பூமன்னு பதுமம் பூத்தவே ழுலகுந்
தாமுன்செய் தவத்தாற் பரிதிவழித் தோன்றி
நெடுமா லிவனெனச் சுடர்முடி சூடி
இருநில மகளை யுரிமையிற் புணர்ந்து
திருமகள் பணைமுலைச் செஞ்சாந் தணைந்து
பருமணி மார்வம் பனிவரை நிகர்ப்பச்
சயமகள் செழுந்தண் சந்தனச் சுவட்டாற்
புயமிரு கயிலைப் பெருப்பெனத் தோன்ற
பாமகள் தானுமெங் கோமகன் செவ்வாய்ப்
பவளச் சேயொளி படைத்தன ளியாமெனச்

தவள நன்னிறந் தனித்துடை யோரெனப்
புகழ்மகள் சிந்தை மகிழு நாளிலும்
ஒழுகுடை நிலவும் பொருபடைத் திகிரி
வெயிலுங் கருங்கலி யிருளினைத் துரப்ப
நீடுபல் லூழி யேழ்கடற் புறத்தினுங்
கோடாச் செந்தனிக் கோலினி துலாவ
மீன்முஞ் சிலையுஞ் சிதைத்து வானுயர்
பொன்னெடு மேருவிற் புலிவீற் றிருப்ப
உம்ப ரியானை யோரெட் டினுக்குந்
தம்ப மென்னத் தனித்தனி திசைதொறும்
விசயத் தம்ப நிற்பப் பசிபகை
யானது தீங்கு நீங்க
மன்னுயிர் தழைப்ப மனுவாறு விளங்க
மாதவர் தவமு மங்கையர் கற்பும்
ஆதிய ந்தண ராகுதிக் கனலு
மீதெழு கொண்டல் வீசுதண் புனலு
மேதினி வளருஞ் சாதியொழுக்கமும்
நீதி யறமும் பிறழாது நிகழப்
பாவும் பழனப் பரப்பும் பணைக்கை
மாவு மல்லது வன்றளைப் படுதல்
கனவினுங் காண்டற் கரிதென வருந்திப்
புடையினும் பல்வேறு புள்ளினு மல்லது
இறையெனப் படுத லின்றி நிறை பெருஞ்
செல்வமோ டவனி வாழப் பல்லவர்
தெலுங்கர் மாளுவர் கலிங்கர் கோசலர்
கன்னடர் கடாரர் தென்னர் சேரலர்
சிங்கணர் கொங்கணர் சேதியர் திரிகர்த்தர்
வங்க ரங்கர் வத்தவர் மத்திரர்
கங்கர் சோனகர் கைகயர் சீனரென்

றறைகழல் வேந்தருமெல்லா வரைசரும்
முறைமையில் வருந்தித் திறை கொணர்ந் திறைஞ்ச
அம்பொன் மலர்க்கொடி செம்பியன் கிழானடி
ஒருமருங் குடனமர்ந் திருப்ப வருள்புரி
சிமயப் பொற்கொடி யிமையப் பாவையுஞ்
சிவனும் போலப் புவன முழுதுடையா
ளிவன்திரு மணிமார்வத்
துலகமுழு துடையா ளொனவுட னிருப்பச்
செம்பொன் வீர சிம்மா சனத்துப்
புவன முழுதுடையாளொடும் வீற்றிருந் தருளிய
இராசகேசரி வன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள்
குலோத்துங்க சோழ தேவர்க்கு "

## இரண்டாங் குலோத்துங்கன் மெய்க் கீர்த்தி II.

" பூமன்னு பாவை காமுற்று முயங்க
இருநிலக் கிழத்தியைத் திருமணம் புணர்ந்து
கலையின் செல்வி தலைமை யோங்கப்
போர்மகள் சாப்பச் சீர்மகள் போற்ற
மரகதப் புரவி யிரவிகுலம் விளங்கப்
பாற்கடல் றெய்வப் பள்ளி நீங்கி
நாற்கடல் வட்ட நாடொறுந் தாங்கி
எண்டிசை யானை தண்டுவிடை நிற்பக்
காவற் றேவர்க ளேவல் கேட்பக்
கலிப்பகை யோட்டிப் புலிக்கொடி யெடுத்துத்
தென்னவர் கேரளர் சிங்களர் தெலுங்கர்
கன்னட ரிலாடர் கலிங்கர் முதலாகக்
கொற்றவர் வந்து குடிமை செய்ய
ஒற்றை வெண்குடை யுலகுதனி கவிப்ப
ஊழிபல கோடி யாழி நடாத்திச்

செம்பொன் வீர சிம்மா சனத்துத்
திரிபுவன முடையாளொடும் வீற்றிருந் தருளிய
கோவிராச கேசரி வன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள்
ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு.

## இரண்டாம் இராஜராஜசோழன் கி. பி. 1146—1162.

இவ்வரசன் இரண்டாம் குலோத்துங்க சோழனுடைய புதல்வன். கி. பி. 1146 - ஆம் ஆண்டில் கங்கைகொண்ட சோழ புரத்தில் சக்கரவர்த்தியாக முடிசூட்டிக் கொண்டான். இவன் பரகேசரி இராசராச சோழன் என்று கல்வெட்டில் கூறப்படுகின்றனன். இவன் தன் தந்தை, பாட்டன் முதலானோரைப்போல் திரிபுவனச் சக்கரவர்த்திகள் என்ற பட்டமும் உடையவனு யிருந்தனன். இவனது தந்தையின் ஆட்சியைப் போல் சோழ மண்டலத்திலும், புறமண்டலங்களிலும் இவனது ஆட்சியும் அமைதியுடன் நடைபெற்றது. குடிமக்கள் எல்லாரும் தம் அரசர் பெருமானை வாயார வாழ்த்தி இன்புற்று வாழ்ந்து வந்தனர். இவ்வேந்தனது ஆளுகையில் போர் நிகழ்ச்சியே சிறிதும் இல்லை. எனவே, இவன்நாட்டில் மக்கள் துன்புறுதற்கு ஏதுவான செயல்கள் இவன் காலத்தில் சிறிதும் நிகழ்ந்திராது என்றே கூறலாம். இம்மன்னர் மன்னன் 'தந்தையிலோர்க்குத் தந்தையாகியும், தாயிலோர்க்குத் தாயாகியும்,—மைந்தரிலோர்க்கு மைந்தராகியும் மன்னுயிர்கட் குயிராகியும், பொருகலியி னிருளகற்றியும் புகழெனும் நிலாப் பரப்பியும் செங்கோல் செலுத்தி வந்தானென்று இவனது மெய்க்கீர்த்தி யுணர்த்து கின்றது.

இனி, இவனை முத்தமிழ்க்கும் தலைவனென்று இவனது மெய்க்கீர்த்தி மிகவும் சிறப்பித்துக் கூறுதலால், இவ்வரசன் தன் தந்தையாகிய குலோத்துங்க சோழனைப்போல் செந்தமிழ்ப்

புலமையிற் சிறந்து விளங்கினன் என்பது நன்கு புலப்படுகின்றது. இச் செந்தமிழ்ப் புலமையும் இவன் புலவர் தலைவராகிய ஒட்டக்கூத்தர்பால் கல்விபயின்று பெற்றிருத்தல் வேண்டும். நம் கவிச்சக்கரவர்த்தியாகிய கூத்தர் இவன்காலத்தும் உயிர் வாழ்ந்திருத்தல் வேண்டுமென்பது இவர் இவ்வேந்தன் மீது பாடியுள்ள ஓர் உலாவினால் இனிது வெளியாகின்றது. இவ்வுலா 'இராசராச சோழனுலா' எனப்படும். பாட்டன்விக்கிரம சோழன், தந்தை குலோத்துங்க சோழன் ஆகிய இன்னோர் மீது உலாமாலைகள் சூட்டிய கவிச் சக்கரவர்த்தி தமது முதுமைப் பருவத்தில் இவன்மீதும் ஒரு உலாவை இயற்றியுள்ளது இவ்வரசனுக்கு மகிழ்ச்சியையும் பெருமையையும் அளித்திருத்தல் வேண்டும் என்பது ஒருதலை. இங்ஙனம் தன் மீது புலவர் பாடிய உலாவிலுள்ள கண்ணிகள் ஒவ்வொன்றிற்கும் ஆயிரம் ஆயிரம் பொன் பரிசில் அளித்து இவ்வேந்தன் பாராட்டி யுள்ளானெனின் இவன் புலவர் பெருமானையும் அவர் இயற்றியுள்ள இந்நூலையும் எவ்வாறு மதித்திருத்தல் வேண்டுமென்பது வெள்ளிடைமலையென விளங்குகின்றதன்றோ? இவனுக்கு முன்னர் இங்ஙனம் புலமையைப் பாராட்டிப் பெருமைபடுத்தியவன் நம் இராசராசனது முன்னோர்களுள் ஒருவனும் கடைச்சங்க நாளில் சிறப்புடன் வாழ்ந்தவனும் ஆகிய சோழன் கரிகாற் பெருவளத்தான் ஆவன். இவ்வேந்தர் பெருமான் தன்மீது கடியலூர் உருத்திரங் கண்ணனார் பாடிவந்த பட்டினப்பாலை என்னும் செந்தமிழ்நூலைப் பதினாறு லட்சம் பொன் பரிசிலாக * அளித்துப் பெற்றுக்கொண்டனன்

* "தத்து நீர்வாரற் குருமி வென்றதுந்
தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன்
பத்தொ டாறுநூ றாயி ரம்பெறப்
பண்டு பட்டினப் பாலை கொண்டதும்"
கலிங்கத்துப் பரணி இராசபாரம் பரியம் 21-ம் கண்ணிகள்.

என்பது ஈண்டு அறிந்துகோடற் குரித்தாகும். இவ் விராசராச சோழனது ஆட்சிக் காலத்தேதான் புலவரேறாகிய ஒட்டக்கூத்தர் ஈட்டி யெழுபது என்ற நூலைப்பாடி உறையூரில் அரங்கேற்றினார் என்பதும் தக்கயாகப்பரணி என்ற நூலை இயற்றிக் குடந்தையில் அரங்கேற்றினார் என்பதும் ஆராய்ச்சியிற் புலப்படுகின்றன. எனவே, சிறந்த தமிழ் நூற்கள் தோன்றிய காலப்பகுதிகளுள் இவ்வேந்தனது ஆட்சிக்காலமும் ஒன்றாகும்.

இவன் தன் முன்னோர்களைப்போலச் சிவபெருமானிடத்துச் சிறந்த பத்தியுடையவன்; பல சிவாலயங்கட்குத் திருப்பணிகள் புரிந்திருத்தலோடு நிபந்தங்களும் விட்டிருக்கின்றனன். ஆயினும், தன் தந்தையைப்போல் வைணவரிடத்துச் சிறிதும் வெறுப்புக்காட்டியவன் அல்லன். வைணவ ஆலயங்கட்கும் நிபந்தங்கள் விட்டிருக்கின்றனன். எனவே, இவன் காலத்தில் வைணவமதமும் பெருமை எய்தியதோடு வைணவரும் துன்பமின்றி வாழ்ந்து வந்தனர். இவனது மெய்க்கீர்த்தியும் 'விழுந்த அரிசமயத்தையும் மீள எடுத்து' என்று இச் செய்தியை யுணர்த்துதல் காண்க. ஆகவே, இவ்வேந்தன் தன்பாட்டன் விக்கிரம சோழனைப்போல் சமயப் பிணக்கின்றிச் சமரசக் கொள்கையுடையவனா யிருந்தனன் என்பது நன்கு விளங்குகின்றது. இவனுக்கு 'இராச கெம்பீரன்' என்ற ஒரு பெயருண்டென்பது ஒரு கல்வெட்டால் புலப்படுகின்றது. கும்பகோணத்திற் கண்மையில் தாராசுரம் என்று தற்காலத்தில் வழங்கும். இராசராசபுரத்திலுள்ள சிவாலயத்தில் சித்

திர நுட்பங்கள் பெரிதும் அமையப்பெற்ற ஓர் அழகிய மண்டபம் இராசகெம்பீரன் திருமண்டபம் * என்ற பெயருடையதாயிருக்கின்றது. அன்றியும், 'சோழேந்திர சிங்கன்' என்ற ஒரு பெயரும் இவனுக்குண்டென்பது இவன்மீது பாடப்பட்டுள்ள உலாவினாலும் கல்வெட்டுக்களாலும் அறியப்படுகின்றது. இவனது மனைவிமார்களாகத் தற்காலத்தில் அறியப்படுபவர்கள் 'புவன முழுதுடையாள்,' 'தரணி முழுதுடையாள்' 'அவனி முழுதுடையாள்' 'தென்னவன் கிழானடிகள்' என்போர். இவர்களுள், புவனி முழுதுடையாளே பட்டத்தரசியாவள். இப்புவனி முழுதுடையாள் 'பெண்ணரசாய் முடி சூடி உடனுணையும், உடனிருக்கையும், உடனரசும், உடன் சிறப்பும்,—கடனாகவே படைத்தருளி அறம் புரக்குங் கருணைவல்லி' யாய் விளங்கினாள் என்று நம் இராசராசனது மெய்க்கீர்த்தி கூறுகின்றது. இதனால் அக்காலத்துச் சோழ மன்னர்கள் தம்முடைய பட்டத்தரசிகளுக்கு ஒத்த உரிமையும்,சிறப்பும், அளித்து வந்தனர் என்பது பெறப்படுகின்றது. இரண்டாவது மனைவியாகிய தரணி முழுதுடையாளைத் 'தையலார்க்கோரு சூளாமணி' எனவும் 'சதுர்வேத சிந்தாமணி' எனவும் 'புண்ணிய மொருவடிவு கொண்டு புகமெழனும் மணி புனைந்து—பெண்ணியல்பு தனதாகப் பிறந்ததெனச் சிறந்த பேதை' எனவும் இராஜராஜனது மெய்க்கீர்த்தி மிகப் பாராட்டிப் புகழ்கின்றது. மூன்றும் மனைவியாகிய அவனி முழுதுடையாளை அருந்ததிபோன்றவள் என்று அம்மெய்க்கீர்

---

* திருப்பனந்தாளில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் கொள்ளிடத்திற்குத் தீர்த்தம் கொடுக்கச் செல்லுவதற்கு ஒரு திருவீதி ஏற்படுத்தி அதற்கு இராஜகெம்பீரன் திருவீதி என்று பெயரிடப்பெற்றது என்று ஒரு சாசனங் கூறுகின்றது.

த்தி உரைக்கின்றது; அன்றியும், இவள் பலாட குலத்துதித்த பெண் என்றுங் கூறுகின்றது. நான்காம் மனைவியாகிய தென்னவன்கிழானடிகள் பாண்டியனது புதல்வி என்று தெரிகின்றது.

மன்னுயிரனைத்தும் தன்னுயிரெனக் கருதிச் செங்கோல் செலுத்திவந்த இராசராசன் கி.பி. 1162-ஆம் ஆண்டில் அரண்மனையில் நோயுற்றுக் கிடக்குங்கால், தன் தலைமைச் சேனபதியும், ஜயங்கொண்ட சோழ மண்டலத்து ஆமூர்கோட்டத்துச் சிறுகுன்றநாட்டுக் காரிகைக் குளத்தூர்மன், 'திருச்சிற்றம்பல முடையான் பெருமான் நம்பியான பல்லவராயனை' யழைத்துத் தனது அரசாங்கத்தை நடத்திவருமாறு செய்து தனக்குப் பிறகு தன் மகள்வயிற்றுப் பெயரனுகிய எதிரிலிப் பெருமானைக் கொணர்ந்து கங்கைகொண்ட சோழபுரத்தில் இராசாதிராச சோழன் என்ற பெயருடன் முடி சூட்டுமாறு உத்திரவிட்டு கி. பி. 1162 ஆம் ஆண்டில் இறைவன் திருவடியை எய்தினன். பின்னர், இவன் இறந்த நாலாம் ஆண்டாகிய 1166-ஆம் ஆண்டில் தலைமைச் சேனபதி திருச்சிற்றம்பல முடையானை பெருமான் நம்பி அரசன் கூறியவாறு அவ்வரசிளங் குமரனை அழைத்துக் கொண்டுவந்து முடிசூட்டினன். முடி சூட்டு மங்கல நாளிலே அவ்வரசிளங் குமரனும் இராஜாதி ராஜசோழன் என்னும் பெயர் எய்தினன். இவ்வேந்தனே நம் இராசராசனுக்குப் பிறகு சோழமண்டலத்தில் செங்கோல் செலுத்தியவன். அரசாங்கக் கல்வெட்டு இலாகாவின் தலைவர் நம் இராசராசன் இறக்குங் காலத்தில் அவனுக்கு ஓராண்டுவயதுள்ள ஓர் ஆண் மகவு இருந்ததென்றும், அக்குழந்தைக்குப்பிரதிநிதியாகவே இராஜாதிராஜன் ஆண்டுவந்தனன் என்றும், கி. பி. 1178-ஆம் ஆண்டில் முடிசூடிக்

கொண்ட மூன்றும் குலோத்துங்க சோழன் அக்குழந்தையே யாவன் என்றும் அவர்களது அறிக்கையில் வரைந்துள்ளனர். இவற்றுள் எக்கொள்கை வலியுடைத்து என்பது இதுபோது அறியக்கூடவில்லை. இனி வெளிவரும் கல்வெட்டுக்களிலிருந்து ஒருகால் உண்மைச் செய்திகள் வெளிவரினும் வரலாம். இராச ராச சோழனது வரலாற்றில் பல உண்மைகளை ஆராய்ந்து கண்டு தமிழகத்திற்கு உணர்த்தியவரும், இலக்கணவிளக்க ஆசிரியரது பரம்பரையைச் சேர்ந்தவருமாகிய திருவாளர் சோமசுந்தர தேசிகர் அவர்கள் இவ்வேந்தனுக்கு ஆண்மகவு இல்லை என்றும், இரண்டு பெண்மக்களே இருந்தனர் என்றும் கூறுகின்றனர்.

## இரண்டாம் இராஜராஜன் மெய்க் கீர்த்தி.

பூமருவிய பொழிலேழும் பொருப்பேழும் புனைநித்திலத்
தாமநெடுங் கொடைபொழிந்த தவளவெண்ணிலா குளிர்பொதியச்
சுடர்ச்சக்கர வெற்பில்தன தடற்சக்கர வெயிலெறிப்பச்
சினப்புலியுஞ் செங்கோலு மனைத்துயிர்க்குங் காவல்பூணப்
பணியணைமிசைப் பாஞ்சோதி பாற்கடல்நின் றெழுந்தருளி
மணிநெடுமுடி [1] கவித்துநெடு மண்மடந்தையைக் கைப்பிடித்துப்
பகைமடந்தை கொழுநனுகிப் போர்மடந்தையை மணம்புணர்ந்து
பருதிமுதற் குலம்விளக்கிச் சுருதிகளின் முறைவாழ்த்தெழ[2]
விழுந்தஅரி சமயத்தையு மீளவெடுத்து ஆதியுகங்
கொழுந்துவிட்டுத் தழைத்தோங்கக் கோடாதறங் குளிர்தூங்க
மாரிவாய்த்து வளஞ் சுரக்கத்[3] தாரணியோர் பிணிநீங்க
நல்லோர்தங் கற்புயர நான்மறையோர் தொழில்வளர[4]
எல்லாருந் தனித்தனியே வாழ்ந்தனமென மனமகிழ்ந்து
ஒருவருடன் ஒருவர்க்கும் ஒன்றினுடன் ஒன்றுக்கும்

---

பிரதிபேதங்கள். 1. கவித்தானென. 2. பொருள்வாய்ப்ப. 3. வளஞ்சுரந்து. 4. துறைவளர.

வெருவருபகைமை மனத்தின்றி விழைந்துகாத[5] லுடன்சேர
இந்திரன்முதற் றிசாபாலர் எண்மருமொரு வடிவாகி
வந்தபடி தரகின்று மனுவாணை தனிநடாத்தி (ய்)
மாலியானையே பிணிப்புண்பன மணிச்சிலம்பே யாற்றுவன*
சோலாடையே கலக்குண்பன [6]தேமாவே[7] கடியப்படுவன[8]
மாமலரே கடியவாயின வருபுனலே சிறைப்படுவன
காவுகளே கொடியவாயின கள்ளுண்பன வண்டுகளே
பொய்யுடையன வனவேயே போர்மலைவன வெழுகழனியே[9]
மையுடையன நெடுவரையே மருளுடைய இனமான்களே
கயற்குலமே பிறழ்ந்தொழுகும் [10]கைத்தாயரே க்டிந்தொறுப்பார்
இயற்புலவரே பொருள்வேட்பார் இசைப்பாணரே கூடஞ்செய்வார்
இவன் காக்குந் திருநாட்டில்[11] இயல்விதுவென
நின்றுகாவல் நெறிபூண்டு நன்றியல்லது நினையாது
தந்தையிலோர்க்குத் தந்தையாகியுந் தாயிலோர்க்குத் தாயாகியு
மைந்தரிலோர்க்கு மைந்தராகியு மன்னுயிர்கட் குயிராகியும்
விழிபெற்ற பயனென்ன அமையப்பெற்ற வருளெனவும்
மொழிபொரு [ளா-யிவ]னெனவும் முகம்பெற்ற பனுவலெனவுந்
எத்துறைக்கும் இறைவனென்னவும் வரஞ்செயும்பெருந்தவமெனவும்
முத்தமிழ்க்கும் தலைவனெனவும் மூன்றுலகின் முதல்வனெனவும்
அரசியற்கை முறைநிறுத்தி யல்லவைகடிந் தாறுய்த்துப்
பொருகலியி னிருட்டகற்றிப் புகழென்னு நிலாப்பரப்பிக்

---

* நளவெண்பா பாட்டு ஈண்டு கவனிக்கற் பாலது.

(பி-ம்.) 5. யரிதகற்றிக்காத. 6. கலக்குவன. 7. தேமாவேய் என்று 'ய்' எழுத்து ஏகார, இகார, ஈறுகளில் காணப்படுவது கல்வெட்டுக்களில் வழக்கம். ஈண்டும் அவ்வாறே காணப்படுவதால் மாதிரிக்காக 'தனிநடாத்தி' எனபதன்பின் யகரம் காட்டிப் பின்னர் நிறுத்தப்பட்டது. 8. வடுப்படுவன. 9. சூழ்கழனி. 10. பிறழ்ந்தொழுக்கும். 11. 'திருநாட்டின் இயல்பிது' வென்று வாசிக்க.

கன்னடருங் காலிங்கருந் தொற்றவருஞ் சிங்களருங்
கைகயருங் கொங்கணருங் கூபகருங் காசிகருங்
காம்போதருங் கோசலருங் கொந்தளரும் கம்பளரும்[12]
பப்பளரும் பாஞ்சாலரும் பொப்பளரும் பூலுவரும்
மத்திரரு மாராட்டரும் வத்தவரு மாகதருங்
கொடிநுடங்கு கனககோபுரக் கொற்றவாசலில் வந்தீண்டி
[13]கொட்பாவயறப் பாவல ரோரா வகற்றிக்
கருமாமுகில் திருநிறத்துக் கனகளப[14] ராஜராஜன்
திருமார்பிலுந் திருத்தோளிலுந் திருமனதிலும் பிரியாது
பற்றார் குழலியர்க்கொரு சூளாமணி ரத்நமென்ன[15]
சிந்தாமணி மஹாரத்னம் திலதசோள [16] குலரத்னம்
[17]பூமகளும் ஜயமகளும் புகழ்மகளும் புவிமகளு
நாமகளுந் தனித்தேவி நாதுங்கற் கிவளென்ன
பாரரசர் பெருமையுட.........டென்றரற்றப்
பேரரசு தனிநடாத்திப் பெண்ணரசாய் முடிசூடி
உடனுணையு முடனிருக்கையு முடனரசும் உடன் சிறப்புங்
கடனுகவே படைத்தருளி அறம்புரக்குங் கருணைவல்லி
கவனவயல் பசும்புரவி கடவுட்டோர் கடாவவருந்
தவனகுலத் துலகந்தொழ வந்தருளி சந்தரவுதய(ம்)[18]
ஞானமுதற் குலநான்கு நல்லொழுக்கமும் பெருங்கற்பும்
பேணுமயில் ராஜராஜன் பிரியா வேளைக்காரி[19]
அகலாத மாதரென் றாரணங்க ளொருநான்கும்
புகலவருந் தனிநாயகி புவனமுழு துடையாளும்
அக்கிரமத் தொழிலால் அருள்மழைபொழி கிளர்வெண்குடைச்

---

(பி-ம்.) 12. சிலவற்றிலில்லை. 13. இவ்வடி விளங்கவில்லை. 14. கற்கள்வன். 15. 'என்ன' சிலவற்றிலில்லை. 16. சோழ. 17. பூமகளிலும், சிலவற்றிற் காணப்படுகிறது. 18. சந்திர உதயம் என்று கிரந்தாட்சரம். 19. காறி என்று காணப்படுகிறது.

சக்ரவர்த்தி ஜனநாதன் தரணிபாலன் தனிநாயகி
ஆரலங்க மலர்ச் சோலையி லுலாவுங்கிளி தன்காதற்
பேரருளா மொருபாற்கடல் விளையாடும் பெடையன்னம்
பேர்படைத்த சிலைநுதல்மயில் பூலோக சுந்தரியாம்
பேர்படைத்த நான் முகத்தோன் பெரும்படைப்பை வளர்க்கும்பணை
வையமேத்துஞ் சமந்தகமணி மாநதன்புனை கவுத்துவமணி
தையலார்க்கொரு சூளாமணி சதுர்வேத சிந்தாமணி
புண்ணியமொரு வடிவுகொண்டு புகழென்னு மணிபுனைந்து
பெண்ணியல்பு தனதாகப் பிறந்ததெனச் சிறந்தபேதை
மன்னவர்தந் தேவியர்நின் வழியடியோ மடியோமென
முன்னின்று தொழுதேத்த முதன்மை பெற்ற மூலநாயகி
இனம்பொழியுங் கவிராஜன் யானையோடு தீதாடத்
தனம்பொழியும் ராஜராஜன் தாய்வேளை தரித்தபொற்கொடி
இசைமுழுதுங் குடைமுழுதுங் குணமுழுதும் ஈண்டுற்று
திசைமுழுது மண்முழுதுந் திருமுழுது முடையாளொரு
முந்தைமுழு துலகுய்ய முடிசூடும் ராஜபண்டிதன்
த[ன் மன]முழு ஒரு சீர் துடையதேவி தரணிமுழு துடையாளும்
பார்வாழவும் மண்வாழவும் பனுவல்வாழவுந் [மனுவாழவும்]
சீர்வாழவு மலாடகுலத் தவதரித்துத் திசைவிளக்கு
மேன்மையுடன் பெருங்கீர்த்தி மண்மிசை வளர்க்குங்குயில்
உலகுடைமுக் கோக்கிழா னடிகளென்னு மலகில்கற்பி
லரவிந்த மடையுந் திருந்தியதன் பெருங்குணத்திற்
சிறந்தோங்கி யறந்தழைக்கும் மருந்ததியா
மென்னவரும் பெருமையும் அவனிமுழு துடையாளு
மன்னியபெரும் புகழ்படைத்த தென்னவன் கிழானடிகளும்
ஊழியூழி பலகற்பம் வாழிமணம் புணர்ந்திருப்ப
உதயகிரி உச்சியேறி மதிவெண்குடை புதுநிழற்கீழ்
சந்திரமுக மண்டலத்துத் தாமரைக்குள் செம்பவளவாய்
இந்த்ரநீல குஞ்சரமோ டிளம்பிடியுட னிசைந்ததெனச்

செம்பொன் வீரசிம்மாசனத்துப் புவனமுழுதுடையாளோடும்
வீற்றிருந்தருளிய கோபரகேசரி பன்மரான
திரிபுவன சக்கரவர்த்திகள் ராஜராஜ தேவர்க்கு
யாண்டு எழாவது கன்னிநாயிற்று அபர
பட்சத்து நவமியும் புதன்கிழமையும்
பெற்ற ஆயில்யத்து நாள்.........

## கூத்தரும்—பாடிய நூல்களும்

கூத்தர் பாடிய நூல்கள்: * நாலாயிரக் கோவை, * அரும்பகைத் 'தோள்ளாயிரம், † விக்கிரம சோழனுலா, † குலோத்துங்க சோழனுலா, † இராசராசனுலா, * 'குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ், * தக்கயாகப்பரணி, † ஈட்டியெழுபது முதலியன. இவையன்றி * 'எதிர் நூல்' என்ற இலக்கணம் ஒன்றும் கூத்தரால் பாடப்பட்டுளதென்பது,

"ஆரவார விலக்கணநூலைந்து முழங்க வதற்கெதிர்நூல்
பாரின்மீது தமிழ்க்கூத்தன் பாடியமைத்தான் பயனோர்ந்தே."

என்ற சோழமண்டல சதகச் செய்யுளால் புலப்படுகின்றது. "அவர் உடம்படாதனசொல் உளவென்று "எதிர் நூல்" என ஒருவன் பிற்காலத்து நூல் செய்யுமாயின்" (தொல்-மரபி-64) என்று பேராசிரியர் எழுதியது இந்நூல் வழக்கைக் குறிப்பிக்கின்றது. இவையன்றி, தனிப் பாடல்களாகக்கூத்தர் பாடியவை பலவாக வழங்குகின்றன. அவற்றுள் சில வரலாற்றுள் சந்தர்ப்

* இவ்வடையாள மிடப்பட்டுள்ளவை ஏட்டுச் சுவடிகள். இன்னும் அச்சிடப் பெறவில்லை. † இவ்வடையாள மிட்டவை அச்சிடப் பெற்றுள்ளன. அடையாறு தேசீய கல்லூரித் தலைமைப் புலவர், ஸ்ரீமத் அ. கோபாலையரவர்களிடம் கிடைக்கும். ஈட்டியெழுபது எம்மிடம் கிடைக்கும்.

யம் நோக்கிச் சேர்க்கப்பட்டுள்ளன. எஞ்சியவை இறுதியில் காட்டப்படும். கூத்தர் இராமாயணம் உத்தர காண்டம் பாடினரில்லை யென்பது சில பேரறிஞர்களது கருத்து. ஆயின் நிலைபெறுதற்குப் போதிய ஆதாரம் காட்டப்படவேண்டும். அவ்வாதாரம் வெளிவரும் வரையில் உத்தரகாண்டம் கூத்தர் பாடினரென்று ஒப்பித்தாகவேண்டும். ஆனதால், 'உத்தர காண்டமும்' அவர் பாடினதாகும்.

கூத்தர் அவ்வப்போது பாடிய தனிப் பாடல்கள் நூலி னிடை வந்தனபோக எஞ்சியவை அடியில் வருமாறு:—

கண்டன் சேண்டு வெளியிற் குதிரை யேறியபோது பாடியது.

வெண்பா.

"கண்டன் பவனிக் கவனப் பெருக்கான்
மண்டுளங் காதே யிருந்தவா *—கொண்டிருந்த
பாம்புரவி தாயல்ல பாருரவி தாயல்ல
வாம்புரவி தாய வகை" தமிழ் நாவலர் சரிதை

இராசா கைகொடுத்தபோது பாடியது.

கலித்துறை.

"கொலையைத் தடவிய வைவே லரக்கர் குலமடியச்
சிலையைத் தடவிய கையே யிதுசெக தண்டத்துள்ள
மலையைத் தடவிய விந்தத் தடவி மலைந்தவொன்னர்
தலையைத் தடவி நடக்குங்கொல் யானைச் சயதுங்கனே"

(தா. ந. ச. 134)

(பொழிப்புரை) பூமியண்டத்திலுள்ள மலையை யெல்லாந்தடவி யெழுந்த விந்தமலைக்காட்டில் வந்துபொருத பகைவர்களுடைய தலையைத் தடவி நடக்குங் கொல்லுந் தொழிலையுடைய யானை

* வாறென்னே—என்பது பாடபேதம்.

யைப்பெற்ற ஜயதுங்கமன்னவா! கொலைத் தொழிலைத் தடவிய கூரிய வேலாயுதத்தையுடைய அரக்கர் குலம் மடியும் படியாக வில்லைத் தடவியெடுத்த கையே இதுவாகும். எ-று

## மடையனைத் தண்டஞ் செய்ததை விலக்கப்பாடியது.

**கலித்துறை.**

“ மீனகம் பற்றிய வேலையு மண்ணையும் வெற்படங்கப்
போனகம் பற்றிய மாலலை யோபொருந் தாவரசர்
கானகம் பற்றக் கனவரை பற்றக் கலங்கள்பற்ற
வானகம் பற்ற வடிவேல் விடுத்த மனதுங்கனே ”

(தா. நா. ச. 135)

(பொழிப்புரை) பொருந்தாத பகையரசர்களுடைய காட்டரண் பற்றவும், கனத்த மலையரண் பற்றவும், ஆபரணங்கள் பற்றவும் இவற்றோடு நில்லாமல் ஆகாயம் பற்றவும் கிரணம்பொருந்திய வேலாயுதத்தை விடுத்த மனதுங்கமன்னனே! அகத்தில் மீன் பற்றியுள்ள சமுத்திரத்தையும், பூமியையும், மலைகளோடடங்கவும் ஆகாரமாகப் பற்றிய விஷ்ணுவம்சன் நீயல்லையோ? எ-று.

## 24-ம் பக்கம் ‘ஆரேயெனும்’ என்ற செய்யுளின் பொழிப்புரை

(பொழிப்புரை) பெருத்த நான்கு வேதங்களின் அடிப் படையே? மிதிலையில் தோன்றிய மின்னல்போன்ற சீதையுடனே கொடிய காடுகளையடைந்த மேகம்போன்றவனே! கடல்பற்றி யெரியும்படி வில்வளைத்த காகுத்தனே! யாரையேனும் ஒன்று சொல்லத் தொடங்கினாலும், அந்த இடத்திலும் உன் பேரே வந்துநிற்கும்; இதற்கு நான் என்னபாக்கியம் பெற்றேன். எ-று.

இப்பாடல், “கூத்தர் முதன் முதற் சோழனைக்காணவந்த போது அவரது புலமையைச் சோதிக்கவேண்டி ‘அரியைப்பாடுக

என்று கூற, தாம் அரசனைப்பார்த்த முதற்கண் திருமால் அவன் வாயினின்று அங்ஙனம் வந்ததனையே வியந்து, 'ஆரே எனும் ஒன்றுசொல்லத் தொடங்கினும் அவ்விடத்து உன் பேரேவரும்' என்று அவன் கொடுத்த விஷயத்தையே திருப்பி அழகுபெறப் பாடி அரசவையினரை மகிழ்வித்தனர் புலவர் என்பர். எனும்-ஏதேனும். இதனைக் கம்பர் வாக்காக இக்காலத்தார் மாறிக் கருது வர். (பெருந்திரட்டு)

### 14-ஆம் பக்கம். 'கையுமலரடியுங்' என்ற செய்யுளின் பொழிப்புரை.

"கைகளும் தாமரைபோன்ற பாதங்களும் கண்களும் கொவ்வைக்கனிபோன்ற அதரமும் சிவந்த—கருநிறமுடைய திருமால் போன்றவனே! உலகளந்தவனே! அகளங்கா! ஆலிலை மேல் சயனித்தவனே! என் பெண்ணாகிய மான் நின் வரவைக் காணாது தளர்ந்திருக்கிறாள்." எ-று.

### 65-ஆம் பக்கம் 'கரத்தும்' என்ற செய்யுளின் பொழிப்புரை.

"துதிக்கையாலும், தலையாலும் களித்து ஆடுகின்ற பட்டத்து யானையையுடைய கண்டன் வந்திருக்கின்றான். பெண்ணே! இவ்வரசன் முன்னாள் ஈழநாட்டு இலங்காபுரத்தி லும், பாண்டியநாட்டுக் கபாடபுரத்திலும், கலியாணபுரத்திலும் உள்ள வீரரை மார்பையும், சிரத்தையுங் கதவு திறந்ததுண்டு. ஆகையால், இரங்கியேனும் இனி நீ கதவுதிறந்திடுவாய்." எ-று.

### 69-ஆம் பக்கம் 'தொழுகின்ற' என்ற செய்யுளின் பொழிப்புரை.

"தன்னைத்தொழுகின்ற மன்னர்கள் கொணர்ந்து சொரிந் திட்ட செம்பொன் நிறைந்த தராசில் வண்டுகள் உழுகின்ற

மாலையையுடைய சோழன் ஏறியபோது அச்செம்பொன் நிறைந்ததாகிய ஒருதட்டு பூர்ணசந்திரன் சென்று விழுகின்றதை ஒத்திருக்கின்றது. மற்றொரு தட்டாகிய எதிர்த்தட்டிலே ஏறிய சூரியகுல தீபனாகிய அக்கண்டன் காலை வேளையில் கடலிலிருந்து வந்து மேலெழுகின்ற சூரியனை ஒத்திருந்தான்." எ-று.

## 19-ஆம் பக்கம் 'இன்னங்கலிங்க' என்ற செய்யுளின் பொழிப்புரை

" அகளங்க சோழ பூபதியே! உன்னுடைய ஐராவதம் போன்ற பட்டத்து யானையினது காற் சங்கிலிகளைக் காலிலிருந்து விடுவிக்கும்படி செய்த நினைவானது இன்னமும் கலிங்கதேசத்தில் பகையரசர்களுண்டென் றெண்ணியதோ அல்லது பாண்டியன் தமிழ் நாட்டைக் கோபித்தெழுந்ததோ"? எ-று.

## 46-ஆம் பக்கம் ' ஆடுங்கடைமணி ' என்ற செய்யுளின் பொழிப்புரை.

கடைவாயிலில் ஆடிக்கொண்டிருக்கும் மணியின் நாக்கு அசையாமல் இருக்க உலகமெல்லாவற்றையும் நீண்ட தனது வெண்கொற்றக் குடையின் கீழ்த்தாங்கி நின்ற பிரான் என்று தினந்தினம் புதிது புதிதாகக் கவிகள் பாடுங் கவிச்சக்கரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தனது பாததாமரைகளைச் சிரசில் சூடிக்கொள்ளுங் குலோத்துங்க சோழனென்றே யென்னை யுலகோர் சொல்லுவர் ". எ-று.

## 145-153-ஆம் பக்கங்கள் 'தன்னுடைய' என்ற செய்யுளின் பொழிப்புரை.

" நெருங்கிய புகழுடைய சோமா! திரிபுவனம் என்னும் நகரத்தில் உதித்தவனே! மாலையுடைய அரசன், தான் தன்

னுடைய தேவியர்களுக்குச் சொல்லிக் கொண்டிருப்பது உன்னுடைய புகழாகிய உயர் நலமேயாகும். அங்ஙனமிருக்க உன்னுடைய புகழை இனியவருக் கெடுத்துரைக்க நான்யார்? எ-று.

## 144-151-ஆம் பக்கம் 'அடையென்பார்' என்ற செய்யுளின் பொழிப்புரை.

"கொடைத் தொழிலென்றால் முன்னணியில் வந்துநிற்குஞ் சோமா! திரிபுவனத்தில் முன்னற் கூறப்படும் அவனே! உனது வாயிலின்கீழ் ஓடிவந்து பிழைத்தோமாதலால், இவனைப் பிடித்தடையென்று சொல்லுபவராகியும், உள்ளே தள்ளென்று சொல்லுபவராகியும் அன்பு சிறிதுமிலாமல் அடியென்று சொல்லுபவராகியும் உள்ள பகைவர்தம் கடைவாயிலுக்குப் போகமாட்டோம்." என்று.

பின்வரும் மூன்று செய்யுட்கள் இன்னருடையனவென்று பெயர் குறிக்கப்படாமல் ஏட்டுச் சுவடியிற் காணப்படுகின்றன. நடைச் சிறப்பையும் பொருளையும் நோக்குங்கால், அவை கூத்தருடைய வாக்கென்றே கொள்ளக் கூடியனவாயிருத்தலின், அவற்றை ஈண்டுத் தருகின்றோம்.

* "தண்டாமரை தருநாண்மலர் மீதோதிம மீனத்
தாளத்திரள் பவளத்திர ளென்றேழையர் தங்கைக்
கொண்டாடிட முன்னைக்கிது பின்னைத்தரு செம்மைக்
குணநான்மடி யுளதாகிய குடகாவிரி நாடா!
பண்டாலிலை யமளித்துயில் குழவிப் பருவத்தே
பவ்வத்தொடு முலகைச்சிறு பவளத்துவர் வாயால்
உண்டா யகளங்காங்க ளங்காய்கரி தொழுதாள்
உய்யத்திரு வுளமோவெது செய்யத்திரு வுளமோ"

* "செய்யோனக ளங்கன்வள வன்சோழ குலேசன்
சென்னிக்குல தீபன்னுயர் பொன்னித்திரு நாடன்
பொய்யோடொரு நாளும்முறை செய்யாமனு துங்கன்
போர்வல்லவன் மல்லைப்பொழில் பொங்குங்குருகீரே
ஐயோவவரைப் போலொரு நிட்டூரரு முண்டோ
அஞ்சப்படு கைக்கேதுயர் நெஞ்சம்படு கைக்கே
வெய்யோன்விழு கைக்கேமுழு மதிவந்தெழு கைக்கே
விழிநீர்சொரி கைக்கேயெனை விட்டுப்பிரிந் தாரே."

* இக்குறியிட்ட இருசெய்யுட்களும் 179-180-ஆம் பக்கங்களிலுள்ள 'பத்துக்கோண்டன' 'சேங்கான்மட' என்ற செய்யுட்களின் சந்தங்களைப் பெரிதும் ஒத்திருத்தல் கவனித்தற் குரியது.

"வடவைக்கனலைப் பிழிந்துகொண்டு மற்றுமொருகால் வடித்
தெடுத்து
வாடைத்துருத்தி வைத்தூதி மறுகக்காய்ச்சிக் குழம்புசெய்து
புடவிக்கயவர் தமைப்பாடிப் படிபெறுமற் றிரும்பிவரும்
புலவர்மனம்போற் சுடுநெருப்பைப் புழுகென்றிறைத்தாற்
பொறுப்பாளோ
அடவிக்கதலிப் பசுங்குருத்தை நச்சுக்குழலென் றஞ்சியஞ்சி
அஞ்சொற் கிளிகள் பஞ்சரம்விட் டகலாநிற்கு மகளங்கா
திடமுக்கடவா ரணமுகைத்த தேவே சோழ சிங்கமே
திக்குவிசயஞ் செலுத்தியொரு செங்கோ னடாத்து மெங்
கோவே."

இறுவாய்.

இவ்வளவே, கூத்தர் வரலாறுகத் தெரிந்தவை. இவ்வரலாறுகளால் கவியரசர் கூத்தர் தெய்வப்புலமை வாய்ந்த பெரி

யாரில் ஒருவரென்பதும், நாமகளார் நல்லருள் நன்கு வாய்க்கப் பெற்ற மெய்யடியாரென்பதும் விக்கிரமன், குலோத்துங்கன், இராசராசன் ஆகிய சோழர் மூவர் சமஸ்தானங்களில் புலவர் தலைவராக வீற்றிருந்து அவர்களால் பெரிதும் பாராட்டப் பெற்ற பெருமையுடையாரென்பதும், புலமை யறிவுடன் அரசியலறிவும் வாய்க்கப்பெற்று அரசர்க்கரசர்களாக விளங்கிய சோழ சக்கரவர்த்திகளின் அரசாட்சியில் தாமும் சில மாதம் அரசுரிமை பெற்றுத் திறமைப்பட நடாத்திய சீரியரென்பதும், நிறைமொழிப்புலவராய்ச்சிறந்து வெட்டியதலைகள் ஒட்டப்பாடியதால் ஒட்டக்கூத்தன் என்ற காரணச் சிறப்புப் பெயர் பெற்றவரென்பதும், அளப்பரிய அருந்தமிழில் சீரிய புலமைவாய்ந்து அரியபலநூல்களைத் தமிழகத்திற்குதவிய தண்டமிழ் வாணரென்பதும், 'சிவபெருமானிடத்துச் சீரிய பத்தியும், சைவ வழிபாட்டில் அழுந்திய மனமும், ஆன்றோரிடத்து அளவுகடந்த அன்பும், வீரச் செறிவும், பெருமிதமும் உடையாரென்பதும் மற்றும் இவரது உத்தம குண விசேடங்களும் இனிது விளங்கும். இத்தகைய கவியரசர் நலம்பெறத் திகழ்ந்து கீர்த்திபடைத்தது நந்தமிழகமெனின் அதற்கு இதனினும் சிறந்த பெருமை யாதுளது ?

இனி இப்பெரியாரின் காலம் இன்னதென்பதை ஆராய்வாம்:

## கவியரசர் கூத்தரும் அவர்வாழ்ந்த காலமும்.

கவிச்சக்கரவர்த்தியாகிய ஒட்டக் கூத்தரால் பாடப்பெற்ற உலாக் கொண்ட விக்கிரமனும், இரண்டாம் குலோத்துங்கனும், இரண்டாம் இராசராசனும் ஆட்சிபுரிந்த ஆண்டுகள் 42 ஆகும். அவர்களது காலத்தை அடியிற் காண்க.

விக்கிரமன்—கி. பி. 1118 முதல் 1136 வரை. குலோத்துங்கன் II—கி. பி. 1136 முதல் 1146 வரை இராஜராஜன் II—கி. பி. 1146 முதல் 1162 வரை. ஆகவே இம் மூன்று மன்னர்களது ஆட்சிக்காலமும் கி.பி. 1120-க்கும் 1162-க்கும் இடைப்பட்டதென்றுணர்க. எனவே கூத்தரும் இங்குக் குறிப்பிட்ட காலப் பகுதியிலேயே வாழ்ந்தவ ராதல்வேண்டும். விக்கிரம சோழனது ஆளுகையின் தொடக்கத்திலே அவன் மீது உலா வியற்றிப் பரிசுப் பெற்றனர் என்று கருதுதற்குத் தக்க காரணம் உளது; அச்சமயத்தில் அவர் தமிழ்ப் புலமை நிரம்பியவராயும் குடும்பப் பொறையைத் தாங்கவேண்டிய நிலைமையுடையராயுமிருத்தலால் அவர் குறைந்தவளவு முப்பதுவயதினை யுடையவராயிருத்தல் வேண்டும் என்று ஊகிக்கப்படுகிறது. இதனால் கூத்தர் கி. பி. 1090-ஆம் ஆண்டில் பிறந்தவராதல் வேண்டும். ஆகவே, இப்புலவர் பெருமான் இந்நிலவுலகில் கி. பி. 1090 முதல் 1162 வரை உயிர்வாழ்ந்து தமது எழுபத்திரண்டாவது வயதில் சிவபெருமானது திருவடிகளை *அடைந்தனர் என்

---

* இப்பெரியார் சிவபெருமான் திருவடி நீழல் சேர்ந்த திருநட்சத்திரம் ஆவணிமாத பூர்வபக்கத்து 'உத்திராடம்' என்பர். இது—

"பூவுலகிற் கவியரசு புரிந்த பெரும்புக ழுடையோய்
ஆவணிமுற் பக்கமுத் திராடமுந் தன்பூசனையே
யேவர்களுஞ் செய்கின்றா ரெண்ணி லருளடைகின்றார்
நாவலவ ராகின்றா ரென்கின்றார் நல்லாரே"

என்ற கந்தவிரத விலாச ஒட்டக்கூத்தர் தோத்திரத்தானும் அறியப்படுகிறது. இத் திருநட்சத்திரத்தை ஆண்டுதோறும், தொண்டைநாடு, சோழநாடு, பாண்டியநாடு, சேரநாடு, கொங்குநாடு, நடுநாடு, ஆகிய நாடுகளிலுள்ள செங்குந்தர்களும் தமிழன்பர்களும் சிறப்பாகக் கொண்டாடி வருகின்றனர்.

பது திண்ணம். இவர் காலத்தினராய புகழேந்திப் புலவர் இவரது வாழ்நாளின் முற்பகுதியில் இருந்தவர் என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். நமது புலவர் பெருமான் பன்னிரண்டாம் நூற்றாண்டின் முதற்பகுதியிலும் இடைப்பகுதியிலும் நம் தமிழகத்தில் வாழ்ந்து அதனைப் பெருமைப்படுத்தியவர் என்பது சரித்திர ஆராய்ச்சியாளர் ஆராய்ந்து அறிந்த உண்மையாகும். விரிக்கிற் பெருகுமென்று இதனோடு நிறுத்துகின்றாம்.



# பாட்டு முதற்குறிப் பகராதி.

## பிழையுந் திருத்தமும்.

| பக். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 6 | 5 | மணவயிற் | மணவையிற் |
| ,, | 16 | நேர்மேற்கு | நேர்கிழக்கு. |
| 8 | 6 | செம்மைவாய் | செம்மையவாய். |
| 9 | 8 | கும்பகோணம் | நன்னிலம். |
| 16 | 3 | தனியுரை | தனியுரை. |
| ,, | 4 | புட்டேமம் | புட்டேம்பப். |
| 28 | 1 | அடப்பை | அடைப்பை. |

PRINTED AT THE B. N. PRESS, MOUNT ROAD, MADRAS.

